8

# தேரையர் வாகடம்

(உரை விளக்கத்துடன்)





அருள்மிகு பழநி தண்டாயுதபாணி
சுவாமி திருக்கோயில்
ருத்துவநூல் வெளியீட்டுக்குழு
1975

வெளியீட்டுத் தொடர் எண் : 22

# தேரையர் வாகடம்

([redacted] உரை விளக்கத்துடன்)



அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினருக்காக

கௌரவத் தலைவர்

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
அவர்களால் பதிப்பிக்கப் பெற்று

தமிழ்நாடு அரசுக்கு
நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

கி.பி. 1975 விலை ரூ. 7—90

முதற் பதிப்பு : நவம்பர் 1975










அச்சிட்டோர் :
பூம் பிரிண்டர்ஸ்,
32-D, டாணா தெரு,
புரசைவாக்கம்,
சென்னை-600007.

# அருள்மிகு
# பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
## சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழு

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பு அலுவலர்,
சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையம்,
சென்னை-600029. .. தலைவர்

டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ
மத்திய கழகம், சென்னை-600005. ...பொருளாளர்

திரு. கு. சின்னப்பன், தலைவர், அறங்காவலர் குழு,
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில், பழநி. ...உறுப்பினர்

டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம். பி.,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்திய கழகம். ...உறுப்பினர்

திரு. இரா. அர்ச்சுனன், பி. ஏ,.
நிர்வாக அதிகாரி, அருள்மிகு பழநி
தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழநி. ...உறுப்பினர்

டாக்டர். பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்,
இந்திய மருத்துவத்துறை இயக்குநர், சிறப்பு
சென்னை-600029. ...அழைப்பினர்

# சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு
## உறுப்பினர்கள்

1. டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பலுவலர், சித்த மருத்துவ
மைய ஆராய்ச்சி நிலையம், சென்னை-600029. ... தலைவர்
2. டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இந்திய மருத்துவத்துறை இயக்குநர், உறுப்பினர்
சென்னை-600029. செயலர்
3. டாக்டர் சி. எஸ். உத்தமராயன், எச். பி. ஐ. எம்.,
முன்னாள் இந்திய மருத்துவத்துறை
இயக்குநர், சென்னை-600005. உறுப்பினர்

4. டாக்டர் எம். சண்முகவேலு, எச். பி. ஐ. எம்.,
முன்னாள் மருத்துவப் பேராசிரியர்,
இராமநாதபுரம். உறுப்பினர்

5. டாக்டர் கே. இராதாகிருஷ்ணன், எல். ஐ. எம்.,
ஓய்வு பெற்ற மருத்துவ அலுவலர், ஊராட்சி ஒன்றிய
மருந்தகம், காவேரிப்பாக்கம், வட ஆர்க்காடு. ,,

6. டாக்டர் எ. சிறில் ஹென்றி, எல். ஐ. எம்.,
ஓய்வுபெற்ற மருத்துவ அலுவலர்,
நகராட்சி மருந்தகம், திருச்சி. ,,

7. டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ
மத்திய கழகம், சென்னை-600005. ,,

8. டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம். பி.,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்திய கழகம். ,,

9. பண்டித பெ. முத்துக்கருப்பப் பிள்ளை, ஆர். ஐ. எம். பி.,
தலைவர், சித்த மருத்துவ சங்கம், மதுரை. ,,

10. டாக்டர் டி. வி. கல்யாணசுந்தரம், ஆர். ஐ. எம். பி.,
தலைவர், சென்டிரல் சித்தா மெடிகல் கவுன்சில்,
சென்னை-600012. ,,

11. டாக்டர் என். சேது ரகுநாதன், தமிழ்ப்பேராசிரியர்,
விருதுநகர். ,,

12. திரு. நீ. கந்தசாமிப்பிள்ளை,
முன்னாள் செயலர், சரசுவதி மகால் நூலகம், ,,
சென்னை-600020.

## சிறப்பு அழைப்பினர்கள்

1. டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி. ஏ., ஜி. சி. ஐ. எம்.,
முதல்வர், அரசினர் இந்திய மருத்துவக்கல்லூரி,
பாளையங்கோட்டை.

2. டாக்டர் மு. வே. ரமணன், எல். ஐ. எம்.,
பேராசிரியர், மேல் பட்டப் படிப்பு,
அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

3. டாக்டர் டி. வி. சுப்பாரெட்டி, கௌரவ இயக்குநர்,
இந்திய மருத்துவ வரலாற்று ஆராய்ச்சி நிலையம், ஐதராபாத்.

4. டாக்டர் இரத்தினவேலுசுப்பிரமணியம், பி. எஸ்ஸி.,
எம். டி., எம். ஆர். சி. பி. (லண்டன்), சென்னை-600010.



மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்
மாண்புமிகு
பேராசிரியர் க. அன்பழகன், எம். ஏ., அவர்களின்

# அணிந்துரை

மூன்தோன்றிய—மூவா முதன்மொழியாம் தமிழுடனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த—சித்த மருத்துவத்தின் தன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்து விடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலும் சித்த மருத்துவம் இன்றும் பலரால்—வழிவழியாகவும் கற்றறிந்தும்—கையாளப்பட்டு வரினும் அதன் சிறப்பும் புகழும் நிலைபெறுவதற்கு நாம் ஆற்ற வேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும்—இத்துறை வல்லுநர்களின் முயற்சியாலும்—மருத்துவ முறைகளுள் சித்த மருத்துவமும் இடம் பெற்று வருகிறது. எனினும், அதன் தனிச் சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொள்ளுமாறு ஆய்வுகள் மூலம் நிலைநிறுத்தப்பட்டாக வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொண்டு செயற்பட வேண்டும். அந்த நிலை உருவாவதற்கு—ஓலைச் சுவடிகளாகவும் ஒருகாலத்தில் அச்சேறியும் இன்று கிடைத்தற்கரிதாகவும் உள்ள நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள்—உடனடியாகப் பதிப்பிக்கப்படல் வேண்டும். இவை வெளிவந்தால்தான், இன்று சித்த மருத்துவம் பயிலும் மாணவரும், இளம் மருத்துவரும் அவற்றைப் பயின்று பயன் பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்பு நோக்கி உண்மை தெளிபவும், மருந்துகளின் தரத்தை உறுதிப்படுத்தவும், அரிய மூலப் பொருள்கள் கிட்டாத விடத்து மாற்று மூலப்பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பல மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும்; பரவலாக எங்கும் எளிதில்

கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகட்கு ஈடு கொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்த மருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டும் என்னும் எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவல் குழுவினரும்-அதன் முன்னாள் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும்—இதற்காக இரண்டு இலட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன்வந்ததுடன், சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென டாக்டர் இரா. தியாகராஜன், எல். ஐ. எம். அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல்படுத்தலாயினர்.

இக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் ஆர்வத்துடன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும்—பல்வேறு வகையிலும் அவர்கட்குத் துணை நிற்போர் ஆற்றும் பணியும்— இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களின் இயக்குவித்திடும் திறனும் எனது பாராட்டுக்குரியனவாகும்.

அருள்மிகு பழநி திருக்கோயில் அறங்காவலர் குழுவினருக்கும் அக் குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியனவாகும்.

இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந்தெடுக்கப்பெற்ற 22-ஆம் வெளியீடான நூலே தேரையர் வாகடமாகும். இன்றுவரை நூலாக வெளி வந்திராத இந்த மருத்துவக் களஞ்சியம் வெளிவருவது மிகுந்த பயன் தர வல்லதாகும்.

தேரையர் சித்த மருத்துவ உலகில் பெரும் புகழ் வாய்ந்தவர். அப் புகழின் மொத்த உருவமே அவர் ஐயர் எனப் பெயர் கூட்டி வழங்கப்பட்டார் என மருத்துவர்கள் கூறுகின்றனர். இவரின் அரிய கருத்துகளும் மருந்து செய்முறையில் புலி-மான் உடும்பு-பன்றி-முயல் போன்றனவற்றின் ஈரல்-இறைச்சி-இரத்தம் முதலியன இடம் பெற்றிருக்கும் தன்மைகளும் அவர்களின் கூற்றுக்கு ஒரு ஆதாரமாக இருக்குமென எண்ணுகிறேன்.

'தேரனைத் தேரான் மருத்துவத்திற் சேரான்' என்று புகழ்ந்து பாராட்டப்படும் வகையில் இப்போது கிடைத்துள்ள தேரனின் சில நூல்களே சான்று பகர்கின்றன.

இதற்குத் தெளிவான கருத்துப் பொருள் பாடல் களுக்குக் கீழே தரப்பட்டிருப்பது மருத்துவ மாணவர் களுக்குப் பெரிதும் உதவியாக இருக்கும்.

'மிகக்கொடிய நோய்களையும், அறத்தீர்க்கும் பற்பம் செந்தூரமாகிய முறைகள், நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பது போல மற்ற மருத்துவத்தில் இல்லையென' நமது மருத்துவ நூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்து வர்கள் மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிருர்கள். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறப் புள்ளவர்களான சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது:

"அறுவை செய்தல் முதலிய இரண மருத்துவத்தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்கால சாந்தியாகச் செய் வதிலும் ஆங்கில வைத்தியமே அதிகம் சிறந்தது; ஆனால், நாட்பட்ட நோய்களையும், பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய்நோய், பாண்டு, மந்தாக்கினி, மேகம், தாது இழப்பு முதலிய கடின நோய் களையும் அறத்தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரம மாகச் செய்யப்பட்ட பற்ப, செந்தூரங்களே மேன்மை பெற்றவை" என்பதே.

இந்த அபிப்பிராயமானது மிகவும் சரியானதெனவும் உத்தமமானதெனவும் அதிகம் வாய்மையானதெனவும் சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமன தோடு ஏற்றுக் கொள்வார்கள்.

இக்கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறை யில் செயல்படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்க வேண்டும் என்பதே எனது பேரவா.

இந்த நூல்களின் வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோரை ஊக்கப் படுத்துவதற்குத் துணை செய்வதாகும் என நம்புகிறேன். அவர் தம் முயற்சி வளர வாழ்த்துகின்றேன்.

சென்னை
28-10-1975.

க. அன்பழகன்

# முன்னுரை

உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ் மொழி; தமிழ் மருத்துவ முறையும் அத்தகைத்தே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால், இம் மருத்துவத்திற்குச் சித்த மருத்துவமென்று பெயர் அமையலாயிற்று. அச் சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும் மருந்துச் சரக்குகளின் குணம் முதலானவைகளையும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும், பற்பல ஏடுகளில் பதிவு செய்தும் உலகோர்க்கு உதவி செய்து தம் மருத்துவ முறைகளைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின்—நிலநடுக்கம், கடற்கோள் போன்ற—சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படையெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக மிகுந்தவைகளில் சில மேலை நாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டனவெனக் கூறப்படுகின்றது. இன்னும் எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம் மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயிலாகவும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படை உண்மை, தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலைபெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக் காலத்தில் சித்த, ஆயுள்வேத, யூனானி மருத்துவ ஏடுகள் எல்லாம் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் அரியணை ஏறின. மருத்துவப் புலவர்களின் அனுபவங்கள் ஏடுகளில் ஏறி ஏமமுற்றன. மருத்துவம் செய்முறையும், பிணித் தீர்வும் அவர் ஏற்படுத்திய தன்வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவு கொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்துவரலாயிற்று.

மிக அண்மையில், வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சி சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பானகல் அரசர் 1924-ல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்து, பல கிராம மருத்துவ மனைகளையும் அமைத்து இயங்கச் செய்து சித்த மருத்துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறு

மலர்ச்சிக்கு வித்தூன்றினர். அக் காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத்திட்டப் படி கற்பிக்கப் போதிய பாடப் புத்தகங்களும், முதல் (மூல) நூல் களும் இல்லாக்குறையை ஓர்ந்து பாடப் புத்தக ஆக்கக்குழுவை அரசு அமைத்தது. அந்நாள் சித்த மருத்துவத்துறைத் தலைமை ஆசிரியராய் இருந்த பண்டித, வைத்திய ரத்தினம், மருத்துவ சிரோன்மணி காலஞ்சென்ற க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும் நூலைத் தம் சொந்த முயற்சியால் இயற்றி அரசினர்க்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசுவழி வெளியிட்ட நஞ்சுநூல், பாலவாகடம் என்னும் நூல்களைப் பார்வையிட்டும் உதவினர். அக் குழுவினர் நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவச் சுவடி களையும், அச்சிட்ட நூல்களையும் சேகரித்து ஒரு நூல் நிலையம் ஏற் படுத்தினர்.

மேற்படி பள்ளி, கல்லூரியாக மிளிர்ந்தபோது, அந்தநாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950-ல் சித்த மருத்துவம், மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), குணபாடம் (தாது சீவ வகுப்பு) என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்து வந்த கல்லூரி விரிவுரையாளர்களைக் கொண்டு எழுதுவித்து அரசுவழி வெளியிடப்பெற்றன.

அக் கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர்ப் பாளையங் கோட்டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூட, பாட நூல்களும் துணை நூல்களும் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்து வருவ தாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளையும், கைபேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாடநூல்கள் வெளியிடவும் ஆகிய பணிகள் செய்ய (Pharmacopea Committee, 1966, G.O. M.S. 2163, Dt. 23-8-60) ஒரு குழுவும். சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாட நூற்குழு என்று (G.O. M.S. No. 1060, Health, Dt. 13-6-66) ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதிகளை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்திபது அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருத்துவம் என்ற நூல்கள் வெளிவந்தன.

மீண்டும் விரைவில் பயன்காண வேண்டி 1973ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 15ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்துச் சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக்குழு என்னும் ஒரு குழுவைத் (G.O.M.S. No. 2571 of 23—10—73) தோற்றுவித்தார்கள். அக் குழுவின் பணிகளாவன: சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச்சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி முதலியவைகளை எடுத்து அச்சியற்றி வெளியிடல்; ஒருமுறை அச்சில் வெளிவந்து விற்பனைக்குக் கிடைக்கப் பெறாத நூல்களை மீண்டும் வெளியிடல்; இதுவரை அச்சிடப்பெறாத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக் குழுவினர் இதுவரை 400 சுவடிகளையும், 100 கையெழுத்துப்படிகளையும், 230 அச்சான பழைய நூல்களையும் சேகரித்துள்ளனர்.

இக் குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செயலாற்ற, இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலகத்தில் ஒரு தனி அலுவலரையும், அவர்க்கு உதவியாளர்களையும் நியமித்துள்ளனர். அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்து அச்சியற்றத் தக்க வகையில் செய்துவருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியிலிருந்து சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென்று ஒதுக்கப்பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக் கொண்டு மேற்படி நூல்களை நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகுவிரைவில் வெளியிட மேற்படி சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழுவிலுள்ள உறுப்பினர் சிலருடன், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர்க்குழுத் தலைவர் அவர்களையும், மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியையும் கொண்டு அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக் குழு முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில் தற்போது கிட்டியுள்ள தேரையர் வாகடம் இடம் பெறும். இந் நூலின் ஆசிரியர் தேரையர்—தேரன்.

தேரையர் என்ற இவ்வாசிரியர் தம் பெயரைத் தேரன் எனத் தமது பாடல்கள் பலவற்றுள் குறிப்பிட்டுள்ளார். இவர் இயற்றிய பாடல்களிலிருந்து இவர் வடமொழியிலும் தெலுங்கு—கன்னடம் மலையாளம்—துளு முதலான மொழிகளிலும் நிரம்பிய புலமை

பெற்றிருந்தார் என்பதை அறிந்து கொள்ளலாம். இவர் ஆக்கிய தாகக் கூறப்பெறும் நூல்கள் சிகாமணி வெண்பா, நிகண்டு, சேகரப்பா, காப்பியம், தரு, நாடகம் (மருத்துவ பாரதம்), அந்தாதி' நாண்மாலை, யமக வெண்பா, எதுகைப்பா, மகா கரிசல் ஆகிய பன்னிரண்டாகும். இவற்றுள் சிலவே கிடைத்துள்ளன. இவ் வாறு கிடைத்துள்ளனவற்றுள் எதுகைப்பா என்ற வரிசையில் இயற்றப்பெற்ற நூல்கள் பல இருந்திருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது. அவற்றின் பெயர்கள் நன்கு புலனாகவில்லை. இப்போது பதித்துள்ள தேரையர் வாகடம் என்னும் இந்நூல் ஒரே நூலாகவும் காணப்படவில்லை. இது பிற்காலத்தில் அவரது நூல் சுவடிகளி லிருந்து ஒவ்வொன்றாக ஆங்காங்கு கிடைத்தனவற்றைத் திரட்டி ஓலையில் எழுதப்பட்டிருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது.

இவரது பிறப்பிடம், குலம் முதலியன அறிய இவர்தம் நூல்கள் துணை புரியவில்லை. தொண்டை நாட்டில் தோன்றியவர்—வணிகர் குலத்தினர் என்பன செவிவழிச் செய்தியேயாகும். ஆனால், இவர் தொண்டை நாட்டில் தரும சௌமியர் என்ற பெரியார்பால் ஞான தீட்சை பெற்றதாக இவரே பல இடங்களில் நூலுள் கூறி யுள்ளமையால் அறிய முடியும். இவருக்குத் தன்வந்தரி இயற்றிய நூலில் பெரும் ஈடுபாடு இருந்தமையை இவரின் யமக வெண்பா பறைசாற்றுகிறது. இவரின் நூலில் வேமன்னர் என்ற தெலுங்குப் புலவர் தம்மைப் புகழ்ந்துரைத்தமையைக் குறிப்பிட்டுள்ளார். வேமன்னர் 11ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்ததாக வரலாறு கூறுவதால் இவரின் காலமும் அஃதேயாம்.

இந்நூலில் ஆங்காங்கு பற்பல நோய்களின் சிற்சில குறி குணங்கள் காணப்பெறுகின்றன. இதனைக் கண்ணுறும் போது முழுமையான நூலாக இது கிடைக்கவில்லையே என்னும் ஏக்கம் பெரிதும் வாட்டுகிறது. இதிற் கண்ட நோயின் குறிகுணங்கள் பெரிதும் பயன்தரத் தக்கதாய் உள்ளமையைப் படிப்பவர்கள் தெளிவார்கள். பாடல்களுக்கு இயன்றவரை தெளிபொருள் தந்து இதனைப் பதிப்பித்திருக்கிறோம். இந் நூல் அச்சுருவம் பெறுவது இதுவே முதல் முறையாகும்.

மேற்கண்ட அரிய நூல்களின் வெளியீட்டுப் பணிக்குப் பெருந் தொகை தேவைப்படுவதால், இப் பெரும் பணியை விரைவில் செயல்படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் உயர்திரு. க. அன்பழகன், எம். ஏ. அவர்கள் பேரார்வங் கொண்டு மேற்படி பணி முட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம்

சான்றோர் நிறைந்த இவ்வுலகு இந்நூலிற் காணும் குற்றங் கண்டு முனியாது பொறுப்பதோடு காணுங் குறைகளை அருள் கூர்ந்து தெரிவித்து அடுத்த பதிப்புகளில் அக்குறைகள் களைய உதவுதல் நற்கடனும் எனக் கூறி இந்நூலினை வெளியிடுகின்றனம்.
ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார்.' மேலும் அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி கோயில் அறங்காவலர் குழு முன்னாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படி திருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு இலட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்ததையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடித் தந்தமையும், காலஞ்சென்ற திரு. டாக்டர் ஜி. டி. நாயுடு அவர் களைக் கொண்டு காலஞ்சென்ற திரு. டி.வி. சாம்பசிவம் பிள்ளை யவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதியின் முதல் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல் களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமையும் அமைச்சர் பெரு மகனார் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழுமனத்துடன் ஆற்றி வரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப் பெருமிதமடை யலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி திருக்கோயில் அறங்காவலர் குழுவின் முந்நாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்கள் தமக்குள்ள பற்பல அறப்பணிகளுக்கிடையேயும் இக் குழுவின் கூட்டங்களில் பங்கு கொண்டு, நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறைகளையும், ஆலோசனைகளையும் வழங்கி, வெளியீட்டுப் பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குதடையின்றி நூல்கள் வெளிவர, மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங் காவலர் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்த மருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்றுவிக்க உடன்பட்டமைக்கும், சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலக மொன்றை நிறுவக் கட்டடம் கட்டித்தர முயன்றமைக்கும் இக் குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறு துணையாக இருந்து ஒத்துழைத்து வரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரி அவர்களுக்கும், இப் பணிகள் நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்து வரும் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் குழுத் தலைவர் உயர்திரு. கே. எஸ். நரசிம்மன், ஐ. ஏ. எஸ்., அவர்களுக்கும் இக் குழுவினரின் உளங் கனிந்த நன்றி உரித்தாகுக.

இக் குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும், பிற வசதிகளும் தம் அலுவலகத்தின் ஒரு பகுதியில் கொடுத்து, பணி இடையீடின்றி நடைபெற வேண்டிய ஆலோசனைகளும், ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அச்சடிக்கும் தாள்கள் அடக்க விலையில், திருவாளர்கள் சேஷசாயி பேப்பர் மில்சாரிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ்க் காவலர் கி. ஆ பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக் குழு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளது.

மற்றும் இந் நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், கருத்துரைகள் தந்தும் இக் குழுவுக்குத் துணை புரிந்துவரும் தனி அலுவலர் டாக்டர் வி. விசுவநாதன், எல். ஐ. எம். அவர்களையும், அன்னாருக்குத் துணைபுரிந்துவரும் டாக்டர் மு. சௌரிராசன், புலவர்கள் வை. முரு. முத்துக்குமாரசாமி, நா. மு. மாணிக்கம், வி. செ. விநாயகம், தா. சிங்காரவேலு ஆகியவர்களையும் இக்குழு மனமுவந்து பாராட்டுகிறது.

மேலும், இந் நூலுக்குப் பெருமுயற்சி செய்து தெளி பொருளாக உரைவிளக்கம் எழுதியுள்ள டாக்டர் வி. விசுவநாதன் எல். ஐ. எம்., அவர்களின் தொண்டு போற்றிப் பாராட்ட வேண்டியதொன்று.

இப் பணிக்குரிய ஓலைச்சுவடியை வழங்கிய பெருந்தகையார் பழநி மலையப்பசுவாமி வைத்தியசாலை உரிமையாளர் திரு. டாக்டர் மருத்துவர் சி. பி. சாமி ஆவர். இவர் தந்துதவியுள்ள பலஅரிய சுவடிகளுள் இஃதொன்று. சித்தமருத்துவ வளர்ச்சியில் இயல்பான ஈடுபாடும், வள்ளல் தன்மையும் வாய்ந்த இவர்களின் உயர் நோக்கத்துக்குக் குழு தன் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறது.

இந்நூலைக் குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சியற்றிய பூம் பிரிண்டர்ஸ் அச்சகத்தாரின் சேவைக்கு இக் குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
தலைவர்,

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு.

இந்திய மருத்துவத்துறை
இயக்குநர் அலுவலகம்,
சென்னை-600 029.

# பொருளடக்கம்

# தேரையர் வாகடம்

## நோயணுகா விதி

தேரன் கவியுஞ் சிறுகாலை உண்டியும்
ஈர மனமுடைய இல்லாளும்—நேரே
அரைத்திருந்த சாந்து மகில்மணமும் பெற்ருல்
நரைத்திருந்துஞ் சாகார் நவில். 1

**பொருள் :—** தேரன் இயற்றிய பாக்களும், அதிகாலை உண்டியும், இரக்கமுள்ள மனத்துடன் கூடிய மனையாளும், அகிலும் சந்தனமும் மணம்பெற அரைத்த மேற்பூச்சும் ஒருவர்க்குக் கிடைக்குமானுல் முடி நரைத்திருந்த (முதியோர்) வர்களும் இறக்க மாட்டார்கள்.

நெய்யில் முடிகழுவி நம்முதிர்ப்பா தெய்த்து
அய் பாண் டிலைமேலாத் தில்கழுவி—மைவிழியாய்
நெட்யோடே பால்கூட்டி நீருண்பீ ராமாகில்
அய்பகோ வச்சிரகா யம். 2

அன் று கழுவிய ஆடையும் ஆன்பாலும்
தென் ற லுலாவிய திண்ணையும்—நன்றே
உரைத்திருக்க வல்லா ரொருத்தரையும் பெற்ருல்
நரைத்திருந்துஞ் சாகார் நவில். 3

**பொருள் :—** அன்ருடம் தூய்மை செய்த உடையும், பசுவின் பாலும், தென்றல் வீசும்படியான விசாலமான புறந் திண்ணை (ஒய்வெடுக்க)யும், நல்வழியைப் போதித்து உடனுறைய ஒருவரையும் பெற்றவர் நரைத்திருந்த = போதிலும் இறக்க மாட்டார்,

திண்ண மிரண்டுள்ளே சிக்கன வடக்காமல்
பெண்ணின்பா லொன்றைப் பெருக்காமல்—உண்ணுங்கால்
நீர்சுருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி யுண்பார்தம்
பேர்உரைக்கிற் போமே பிணி. 4

**பொருள்** :— மலத்தையும், சிறுநீரையும் அடக்காமல் உரியகாலத்தில் கழிப்பவர்; பெண்போகத்தில் விந்துவை மிகவும் விட்டிடாதவர்; உண்ணும்போது, கொதிக்கவைத்துச் சுருக்கி ஆற்றிய நீரையும்; கடைந்து வெண்ணெய்நீக்கி நீர்சேர்த்துப் பெருக்கிய மோரையும், உருக்கிய நெய்யையும், உணவுடன் சேர்த்து உண்பவர் பேர்சொன்னலே பிணிகள் தீர்வது திண்ணம்.

பாலுண்போ மெண்ணெய்பெறின் வெந்நீரிற் குளிப்போம்
பகல்புணரோம் பகல்துயிலோம் பயோதரமும் மூத்தபேர்
ஏலஞ்சேர் குழலியையு மிளவெயிலும் விரும்போம்
இரண்டடக்கோ மொன்றைவிடோ மிடக்கையில் படுப்போம்
மூலஞ்சேர் கறிநுகரோ மூத்ததயி ருண்போம்
முன்னாளிற் சமைத்தகறி யமுதெனினு மருந்தோம்
ஞாலந்தா னழிந்தாலும் பசித்தொழிய உண்ணோம்
நமனார்க்கிங் கிடமேது நாமிருக்கு மிடத்தே. 5

**பொருள்** :— பாலை உண்போம்; எண்ணெய் தேய்த்துக் கொண்டால் வெந்நீரில் குளிப்போம்; பகல் பொழுதில் பெண் போகம் செய்யோம். பகலில் உறங்க மாட்டோம். கடல் நீர் பயணத்தையும், மூத்த மங்கையரோடு உடலுறவு கொள்ளுதலையும், காலைப் பொழுதின் வெய்யிலில் காய்தலையும் விரும்பவே மாட்டோம். மலம், சிறுநீர் இரண்டையும் உரிய காலத்தில் கழிக்காமல் அடக்க மாட்டோம். (ஒன்றை) விந்துவை மிகுதியாகச் செலவிடோம்; இடக்கைக் கீழ் உறப் படுப்போம். (உறங்குவோம்); கிழங்குகளைக் கறியாக்கி உண்ணோம்; பழைய (புளித்த) தயிரைச் சாப்பிடுவோம். முன்னாளில் சமைத்த கறியுணவு அமுதம் போன்ற சுவையுள்ள தாயினும் உண்ணோம்; உலகமே அழிந்து விடுமென்றாலும் பசித்தாலொழிய உணவு உட்கொள்ள மாட்டோம். இத்தகைய ஒழுக்கமுள்ள எங்களிடம் எமனுக்கு இடமில்லையல்லவா.

### பண்பு இலக்கணம்

ஏறுமல மூன்றெண் டசனந்தும் மதுமே மூன்று
ஆறுசல மஞ்சுகாற் றுருகுமே.
கூறுபோகஞ் செய்யொருக்கா லாயிழையாள் நித்தம்
துணைவோர்க்கு முண்டான வாறு. 6

**பொருள் :—** மும்முறை மலங்கழித்தலும், இரண்டு உண்டியும், மூன்று தும்மலும், ஆறுமுறை சிறுநீர் கழித்தலும், ஒரு முறை பெண்ணைப் புணர்தலும் அனைவோர்க்கும் இயல்பான ஒழுக்கமாகும்.

மூன்றில் தலைக்கழுவி மூவேழில் மேல்நோக்கி
ஆன்றும லைம்மூன்றி லேகளையத்—தோன்றியிடும்
நெய்பாலோ டுண்பீரேல் நீண்ட பெருங்காயம்
அய்யகோ வச்சிரகா யம். 7

**பொருள் :—** மூன்று நாள்களுக்கு ஒருமுறை எண்ணெய் தேய்த்துத் தலைமுழுகியும், இருபத்தொரு நாளுக்கொரு முறை வாந்தி மருந்து அருந்தியும், பதினைந்து நாள்களுக்கொரு முறை முடிகளைந்தும், புதியதான நெய்யும் பாலும் உண்டு வருவீரானல் உங்கள் நீண்ட உடல் வைரம் போல் உறுதியுள்ளதாகும்.

## சுர நிதானம்

விண்ணினிற் றேவர்க் கெல்லாம்
விளங்குமால் முதல்வன் போல
மண்ணினர் நோய்க்கு முன்னாய்
வருஞ்சுர முதலே யென்னும்
பண்ணிய நிதானந் தன்னைப்
பாடவே பவள மேனிக்
கண்ணுதற் கடவுள் பெற்ற
கணபதி காப்புத் தானே. 8

**பொருள் :—** தேவருலகில் எல்லாத் தேவர்க்கும் தலைவர் திருமாலே போன்று மண்ணுலகோர்க்குத் தோன்றும் நோய்கட்கெல்லாம் சுரநோயே முதன்மை பெறும். அத்தகைய நோயைக் கண்டுணரும் வழியைப் பாடலாகக் கூற நெற்றிக் கண்ணை உடைய சிவன் தந்த விநாயகனே காப்புக் கடவுளாய் அமைவானாக.

சீரான சித்தர்கள் திரட்டியதோர் உடல் நூலின்
பேராஞ் சுரந் தனக்குப் பிறப்புடனே நிதானமதைப்
பாரான தமிழதனுற் பகர்ந்திடவே தமிழோர்க்குக்
காரான நெடுமால்தன் கடிமலர்த்தாள் காப்பாமே. 9

**பொருள் :—** சிறந்த முனிவர்கள் பலர் சுரத்தின் தோற்றத்தையும் அதனைக் கண்டுணரும் வழியையும் முன் கூறியுள்ளவைகளைத் திரட்டித் தமிழில் விரித்துரைக்க மேகவண்ணனான திருமாலின் கடவுள் தன்மையுடைய திருவடி மலர்கள் காப்பாக அமைக.

## சுரம் தோன்றக் காரணங்கள்

ஈங்கெழுங் கோபத்தாலும் இளவெயில் காய்கை யாலும்
தாங்கிலாச் சுமைக ளாலுஞ் சருகில்நீ ரூற லாலும்
ஓங்கிய பசியி னாலும் உண்டிமே லுண்டியாலும்
தேங்கிய மலக்கட் டாலுந் தீயநோய் சுரங்க ளாமே. 10

**பொருள் :—** கொதித்தெழுந்த சினத்தாலும், இளவெய்யிலில் குளிர்க் காய்தலாலும், தாங்க இயலாத பெரும் பாரமுள்ள சுமையைத் தூக்கித் தாங்குவதாலும் சருகுகள் ஊறிய நீரைப் பருகுவதாலும் மிகுந்த பசியை அடக்கிக் கொண்டு (உணவு உட்கொள்ளாமல்) இருத்தலாலும், உணவு உண்ட உடனேயே (செரிக்கச் சமயம் தராமல்) மேலும் மேலும் உண்பதனாலும், மலத்தை (உரிய காலத்தில் கழித்திடாமல்) அடக்கியடக்கித் தேங்க வைக்கும் காரணத்தாலும் தீய சுரநோய் உண்டாகும்.

பரிகரி மிகவு மேறிப் பயமிகத் தோன்றல் கோபம்
வெருவுறப் பண்ணி லங்கம் மெலிவுற நடக்கில் வெய்ய
இருகுர லறிந்து மன்ன மாத்தலுண்டாகி மற்றைச்
சருகிலை யூறுநீ ருண்டால் தப்பற வெதுப்புண் டாமே. 11

**பொருள் :—** யானையேற்றம், குதிரையேற்றம் ஆகியவைகளில் மிகுதியாக ஈடுபடுதல், பயம்கொள்ளல், மிகுந்த சினத்தால் கலக்கமடைதல்; உடலிளைக்கும்வரை நடத்தல், உணவின் மாற்றங்கள், (பழக்கப்பட்ட உணவில்லாத காரணத்தால்) இலைச்சருகுகள் ஊறிய நீர் அருந்துதல், ஆகிய இவை தவறாமல் சுரநோயை உண்டாக்கும்.

அந்தரச் சேற்று நீரை அடர்பாசி நீரைக் கொள்ளில்
உந்தியி லுதிரம் பாயல் உருகணங் குளிர்நீ ராடிப்
பந்தமாய் மிகவுந் தண்ணீர் கொதித்திடப் பருகுங் கண்டாய்
கொந்தலர் குழலி னாளே கொதிப்பொடு வெதுப்புத் தானே.

**பொருள் :—** சேற்று நீரையும், பாசி மிகுதியாய்ப் பற்றிய நீரையும் அருந்துதலும், இரத்தமெல்லாம் உந்தியில் போய் அடையும்படி அவ்வளவு குளிர்ச்சி பொருந்திய நீரில்குளித்து மேலே, கொதிக்கும்படியாக வெம்மையுள்ள நீரைப் பருகுதலாலும் வெம்மையோடு கூடிய சுரநோய் தோன்றும்.

கருதுமின் னுசை யாலுங் காரிருள் குளிர்ந்த நீரில்
பெரிதுற வாட லாலும் பெரும்பய மெடுத்த லாலுஞ்
சொரியும் ராக்காலை நீரால் சோர்வறத் தொட்ட லாலும்
வருதரு பசியி னுலும் வந்திடுஞ் சுரங்கள் தாமே. 13

**பொருள் :—** மின்னல் போன்ற சாயலையுடைய மகளிர் மேல் தோன்றிய ஆசையாலும் (காதற்சுரம்) சந்திரர், சூரியர், ஒளி எப்போதும் படாத இருளில் இருக்கும் குளிர்ச்சி பொருந்திய நீரில் மிகவாக ஆடுதலாலும், மிகுந்த அச்சத்தாலும், உடலும் உள்ளமும் சோர்ந்துள்ள காலத்தில் நிசித் தண்ணீர் (பழஞ்சோற்றில் ஊற்றியுள்ள புளித்த நீர்) குடித்தலாலும், வேளைதோறும் தோன்றும் பசியின் காரணத்தாலும் சுரங்கள் வரும்.

உண்டியில் பொல்லாங் காலும் ஒண்டொடி வருத்தத் தாலும்
கண்டுயி லாமை யாலுங் கடும்பக லோட்டத் தாலும்
பண்டையில் மலக்கட் டாலும் பழையசீரணத்தி னுலும்
மிண்டிய சுமையி னுலும் வெதுப்புவந் துற்ற வாறே. 14

**பொருள் :—** உணவின் கேடுகளாலும் (அவை எண்ணில என்பதறிக), பெண்போகத்தால் கண்ட உடல் மனவருத்தங்களாலும், தூங்காமையாலும் (உரிய காலத்தில் அளவுப்படி), மிக்க வெய்யிலில் ஓடுதலாலும், பழைய மலம் தேங்கிக்குடலில் கட்டுப்பட்டு இருத்தலாலும், நாட்பட்ட செரியாமை (செரியா உணவு சத்துகள் குடலில் தங்கி இருப்பதால்) காரணமாகவும், துன்பந் தரத்தக்க சுமை (அகம் ஆகம் இரண்டுக்கும்) காரணமாகவும், சுரம் வரும்.

விங்கமுது பத்தி யத்தால் மேவுமா கார முண்டால்
தங்கிடுந் தோட மாகுஞ் சயத்தினில் போவ னென்னிப்
பொங்கிய பிறத்தி யாகிப் பொலிந்தெழு தாது வெங்குஞ்
சங்கையில் லாத காட்டுத் தழலெனச் சுரமுண் டாமே. 15

**பொருள்:**—பத்தியத்துக்குத் தடையாக (கண்ட) கிடைத்த உணவுகளை உண்டால் தோடங்கள் உடலில் நிலைத்து உடலின் உரத்தைத் தேய்வுறச் செய்து ஏழு தாதுக்களிலேயும் இணைந்து காட்டுத் தீப்போலக் காய்ந்து சுரம் தோன்றும்.

## வாதம் (வளி) தோன்றுதல்

வெய்யிலில் நடக்கை யாலும் மிகத்தண்ணீர் குடிக்கை யாலும்
செய்யிழை மகளி ருனைச் சேர்ந்தனு பவிக்கை யாலும்
பையவே உண்கை யாலும் பாகற்காய் தின்கை யாலும்
ஐயலே வாத ரோகஞ் சனிக்குமென் றறிந்து கொள்ளே. 16

**பொருள் :**— வெய்யிலில் நடத்தலாலும், தண்ணீர் மிகுதியாக அருந்தலாலும், மங்கையர் போகத்தாலும், நெடுநேரம் உணவருந்துவதாலும், பாகற்காயை மிகுதியாக உண்பதாலும், வாதநோய் (வாதச் சுரம்) தோன்றும் என்று அறிக.

## பட்டினி இடுதல் (இலங்கணம்)

வாதமான சுரத்துக்கு மருவுபட்டினி மூன்றுநாள்
ஓதும்பித்த சுரத்துக்கு ஒன்றேயாகு முவாசமது
சீதமான வெதுப்புக்குச் சிறந்த பட்டினி நாலுநாள்
தூதுகோப மங்கையரே சொல்வேன் வகுத்த வாறிதுவே. 17

**பொருள் :**— வாத (வளி) சுரத்துக்கு மூன்று நாட்களும், பித்த (அழல்) சுரத்துக்கு ஒரே நாளும், கப (ஐய) சுரத்துக்கு நான்கு நாட்களும் விதிப்படி பட்டினி போட வேண்டுமென்று பெரியோர் வகுத்த வழிமுறையாகும்.

துக்கமும் பயமு முள்ளோர்
தூரத்தில் சுமந்தோர் மற்றும்
மிக்கதோர் பழிபட் டோர்கள்
விடமது தன்னை யுண்டோர்
தக்கதோர் பலமில் லாதார்
தமதுடல் வறண்டி ருந்தோர்
இக்கமை மொழியி னுளே
யிவர்க்குலங் கணமா காதே. 18

**பொருள் :**— துக்கத்தில் (துன்பத்தில்) ஆழ்ந்துள்ளவர்கள், நெடுந்தூரம் சுமை தூக்கி நடந்தவர், மாபாதகச் செயல்

களில் ஈடுபட்டுப் பலராலும் பழிப்புண்டவர்கள், நச்சுப் பொருட் களை உண்டவர்கள், (நச்சுக்கடிபட்டவர்களுக்கு இது விலக்கல் என்று உணர்க). உடலுரமும் உள்ளத்தின் திடமும் இல்லாத வர்கள். உடலில் வரட்சி, இளைப்பு நோய் கண்டவர்கள் ஆகிய இவர்களுக்கு (இலங்கணம்) பட்டினி போடும் மருத்துவம் கூடாது,

தூலகாய மிளைத்தவர் பட்டினி
துயர்வருத்த முடையவர் வற்றெழு
ஆலமான வெதுப்பின ரானவர்
அச்சமான அடைந்த உடலினர்
கோலமாமகள் தன்னுடன் கூடினர்
கொண்டமா மதுபான மருந்தினர்
பாலனாக மகிழ்ந்தவர் மூத்தவர்
பட்டினிக்கிவ ரொவ்வாத வர்களே. 19

**பொருள் :—** பருத்த உடல் இளைத்தவர், சதாகாலமும். அருந்த உணவின்றி இயல்பாகவே பட்டினி கிடப்பவர்கள், துன்பப்பட்டவர்கள், நச்சுச்சுரம் கொண்டவர்கள், (விடமித்த உண்பொருள், பொருந்தா ஒழுக்கம், இயலாத சூழ்நிலை ஆகிய காரணங்களால் தோன்றிய சுரம்), மிக்க அச்சத்தோடு சுரம் கொண்டவர், பெண் போகத்தில் மிக்க ஈடுபாடு உடையவர்கள், விடாப்பிடியாகக்கொண்ட மது அருந்தும் பழக்கமுடையவர்கள், சிறுவர்கள், வயது முதிர்ந்தவர்கள் ஆகிய இவர்கள் பட்டினி போடத் தகுதியற்றவர்களாவார்கள்,

பாலகர் கிழவர் தாமும்
பரவிய நாட்டாள் கள்ளி
சாலநோ யானோர் மற்றுஞ்
சயங்கொண்டோர் கிராணி யுளார்
தாலமுன் வழிந டந்தார்
தாங்குகருப் பிணிசேர் மாதர்
காலமா யிவர்கட் கெல்லாங்
கடியலங் கணமா காதே. 20

**பொருள் :—** குழந்தைகள், கிழவர்கள், தொண்டு புரி புவர்கள், கள்ளத்தனம் உடையவர்கள், மிகுந்த (கொடிய) நோய் பற்றியவர்கள், சய (இளைப்பு) நோயினர், கிராணி (மிகக்

கழிச்சல்) நோய் கொண்டவர்கள், நெடியதூரம் நடந்தவர் கருவுற்ற மாதர்கள் இவர்களுக்குப் பட்டினி போடும் மருத்துவ முறை ஆகாது.

சாத்திரப் படியி னாலே பட்டினி விடுவீ ராகில்
சேர்த்திடு விழியி னாளே திகைப்புடன் சுவாசம் வற்றும்
நேத்திர முடம்பு வற்றும் நிரந்தரஞ் சுகமு மாகும்
வார்த்திகழ் முலையி னாளே மாமுனி யருளிச் செய்தார். 21

பொருள் :— மருத்துவ நூல் விதிப்படி பட்டினிபோடும் மருத்துவம் செய்தால், திகைப்பு, மேல்சுவாசம் இவை தோன்ருது உடலும், கண்களும் சிறுக்கும், நிலையான சுகமுண்டாகும்,

அதிவெல முள்ள மாந்தர்க் கடுத்தபட் டினியே யாகும்
இதமறச் சத்தி கெட்டார் பட்டினிக் கிசையா ராகும்
மதியுட நவசு ரத்தில் வகைசத்தி பண்ணு வித்து
விதமிகுஞ் சுரங்கள் விட்டால் விரோசனம் போகப் பண்ணே.

பொருள் :— மிக்க உடலுரமுள்ளவர்க்கு ஏற்றது பட்டினி மருத்துவமாகும். இயல்பான சக்தியை இழந்தவர்கள் பட்டினிக்கு ஒத்துவர மாட்டார்கள். புதியதாய்ச் சுரங் கண்டபோதே வாந்திமருந்து கொடுத்து வயிற்றிலுள்ள மலினப் பொருட்களை வெளியேற்றி பின் சுரம் தீர்ந்தபின் கழிச்சலாகக் கூடிய மருந்துகளைக் கொடுத்துப் பண்டிதம் செய்வாயாக.

சத்தியே பண்ணு யாகில்
பட்டினி தானே விட்டுப்
புத்தியால் சுரங்கள் விட்டால்
விரோசனம் போகப் பண்ணிச்
சுத்தமாய்ச் சுக்குக் காய்ச்சிச்
சுகம்பெறக் குடிப்பீ ராகில்
அத்தனர் சொன்ன வண்ண
மகன்றிடும் வெதுப்புத் தானே. 23

பொருள் :— வாந்தி செய்விக்க இயலாதாயின் (நோயாளியை) பட்டினியாக இருக்க வைத்துச் சுரம் விட்டபின்

கழிச்சலாவதற்கேற்ற மருந்துகளைக் கொடுத்துப்பின் சுக்குக், குடிநீர் கொடுத்து வர சுரம் தீரும்.

கருங்கொள்ளுஞ் சுக்கு மான வரிசியுங் கஞ்சி காய்ச்சி
விரும்பியே யுண்பீ ராகில் வெதுப்புடன் தாகந் தீரும்
மருங்கவை அன்ன தோளி மருகிலும் வாரா தென்று
குரும்பைசேர் மூலையி னளே குணமிது வென்று கூறே. 24

**பொருள் :—** கருப்புக்கொள்ளு, சுக்கு, அரிசி இவைகளைக் கைபாகப்படி கஞ்சிசெய்து கொடுத்துவரக் காய்ச்சலும், நீர்வேட்கையும் தீர்ந்து நற்குணத்தைத் தரும்.

### வாத சுரத்தின் இயல்பு

வாதசுரத்தின் குணங்கேளாய்
வாடாமுகமு மனம றுக்கும்
பாதங்குளிர்ந்து மெய்க ளெல்லாம்
பாரமயிர்க் கூச்சிடு மன்றித்
தாதுகலங் கிமயக் கம்வரும்
தனுவே கடுக்குந் தப்பாது.
ஓதுங்கண் ணீர்பிரி யமதாம்
மொழிந்தோம் வாத சுரக்குணமே. 25

**பொருள் :—** வாத சுரக்கின் குணத்தைக் கேட்டுக் கொள்க. முகமும் மனமும் வாடும்; பாதங்கள் குளிர்ந்திருக்கும்; உடலில் மயிர்ப்பொடிப்புக் காணும்; கலக்கமும், மயக்கமும் ஏழு தாதுக்களிலும் நேரும். உடலில் மிக்க கடுப்பு (வலி) உண்டாகும்; தண்ணீர் அருந்த விருப்பமுண்டாகும். (சூடாக) எதையுமே அருந்தப் பிடிக்காது; இவை வாத சுரத்தின் குணங்களாம்.

நெஞ்சுநொந் திருக்குங் கைகால் நெரியவே குளிர்ந்து காட்டும்
விஞ்சவே யுறக்க மாறும் விரையவே மலம்வி டாது
அஞ்சவே பிடரி கைகால் அங்கமே கடுக்கு மெங்கும்
துஞ்சிடா விழிசி வக்கும் சொல்வாத சுரத்தின் கூறே. 26

**பொருள் :—** நெஞ்சில் வலி ஏற்பட்டு இருக்கும்; கை கால்கள் துண்டுதுண்டாக உடைவதுபோலத் தோற்றமும், குளிர்ச்சியையும் காட்டும்; தூக்கம் கெடும்; மலம் விரைந்து

வெளியேருது; புறங்கழுத்து, கைகால் முதல் உடலெல்லாம் கடுப் புண்டாகும்; தூங்காத காரணத்தால் விழி சிவந்து காணும்; இவை வாத (வளி) சுரத்தின் குறிகளாகும்.

குளிர்ந்து நளிர்ந்து குலைப்பெய்திக்
  கொண்டதாக மிக்கமண்டி
நளிர்ந்து மயிர்கூச் சிடுமன்றி
  நாவிட் டெறியுங் கொட்டாவி
குளிர்ந்து முடம்பு மணிக்குறங்குங்
  குறடும்விலாவும் குடைந்திடுகில்
வளர்ந்த முலையாய் மங்கை
  நல்லாய் வாதசுரத்தின் வரவிதுவே. 27

பொருள் :— குளிரும்; நடுக்கமும், சுரமும் சேர்ந்து அமைந்ததாகவும், மயிர்பொடிப்பு, கொட்டாவி, மணிக்கட்டு, தொடை, பாதம், விலாப்புறம் (இருமருங்கு) குடைச்சலுடன் கூடிய வலியுங் கண்டால் வாதசுரம் காணும் குறிப்பாகும்.

கறுக்குங் கண்ணும் வல்லெயிறுங்
  கழியும் வயிறு மப்படியே
வருத்து வலைக்கும் வயிறுவிம்மு
  மதிக ஒருத்தலை நோவெடுக்கும்
உறுப்பில் பலவாய்க் கடுப்புமுண்டா
  வூண்சுவை யற்று நாவரளும்
முறுக்கிக் கால்கை கடுப்பாகும்
  மொழியீர் வாத சுரமென்றே. 28

பொருள் :— கண், பல், இவை கருப்பாகும், வயிறு உண்டது உண்ட அப்படியே கழியும்; வயிற்றுப்புசம் காணும். ஒற்றைத் தலைவலி உண்டாகும். எல்லா உறுப்புகளிலும் பல வகைப்பட்ட வலிகள் உண்டாகும். உணவின் சுவை தெரியாது. நாவரட்சி உண்டாகும். கைகால் கடுப்புத் தோன்றும்; இவைகள் தோன்றினல் வாதசுரமென்று கூறுவீர்களாக.

### வாதசுரக் குடிநீர்

சிந்தில்கண்டங் காலிபங்கம் பாளை சுக்குச்
சிறந்த வழுதலைவேரு முன்னை வேரும்

வாய்ந்ததொரு பேய்ப்புட லாடா தோடை
மணத்தயிரு வேலிபற்ப டாகங் கூட்டி
ஆய்ந்திவைகள் தன்னுலொக்கக் குடிநீர் காய்ச்சி
யன்ருடம் விதிப்படியே யறிந்து கொள்ளில்
தீர்ந்துவரும் வாதசுரம் என்ப தெல்லாஞ்
சிதறியொளிந் தோடிவிடுந் திண்ணந் தானே. 29

**பொருள் :—** சீந்தில் தண்டு (துண்டுகளாக வெட்டியது), கண்டங்கத்திரி வேர், ஆடுதின்னுப்பாளை வேர், முன்னை வேர்; பேய்புடல் (சமூலம்); ஆடாதோடை (இலை); வேலிப் பருத்தி; கொடுவேலி வேர்ப்பட்டை, பற்பாடகம், இவைகளை நன்ருக ஆய்ந்து எடுத்துச் சமமாகக் கூட்டி விதிப்படி குடிநீர் காய்ச்சி இறுத்து வடிகட்டி முறைப்படி தவருமல் கொடுத்துவர வாதசுரம் தீர்ந்திடும்.

சீந்திற் கொடிசந் தனக்கட்டை
சிறுகி ளாவேர் விளாம்பட்டை
ஆய்ந்த முத்தக் காசுசுக்கு
ஆடா தோடை தன்னுடனே
காய்ந்த சிறுகாஞ் சொறிமுள்ளி
கருதுந் தழுதாழை யின்வேரும்
வாய்ந்து கியாழஞ் சமபாகம்
செய்யில் வாத சுரம்போமே. 30

**பொருள் :—** சீந்தில் தண்டு, சந்தனக்கட்டை, சிறுகிளா வேர் (ப்பட்டை), விளா வேர் (ப்பட்டை), கோரைக் கிழங்கு, சுக்கு ஆடாதோடை இலை, சிறுகாஞ்சொறி (சமூலம்), செம்முள்ளி (சமூலம்), தாழை விழுது, இவை சம எடை யாக எடுத்து முறைப்படி கியாழமிட்டு உண்ண வாதசுரம் விட்டுப் போகும். ஆய்ந்த=பொருளின் தன்மை, தரம், அளவு, முதலிய வைகளைத் தேர்ந்தெடுத்து அதன் தூய்மை முறைகளை விதிப் படி செய்து மருந்து செய்ய வேண்டுமென்பதைக் கூடி ஒரே சொல்லால் சுருங்கக் கூறிய நயம் காண்க.

கண்டங் கத்திரி சுக்குடனே
கடுக்காய் காய்ச்சி யுழக்காக்கி
உண்ட போதே ஒண்டொடியாய்
ஓடி ஒளிக்கு மிதுகண்டாய்

பண்டு பெரியோர் மிகக்கண்டு
பரிந்தே யுலகில் சுரமுதலாய்
மண்டும் வாதம் விஷமசுரம்
மற்ற சுரமும் தீர்ந்திடுமே. 31

**பொருள் :—** கண்டங்கத்திரி (சமூலம்), சுக்கு, கடுக்காய் இம்மூன்றையும் முறைப்படி குடிநீர் செய்துண்ணச் சுரம், வாத தோடம் நச்சுச் சுரம் மற்றுமுள்ள வெப்பு நோய்கள் புல தீரும்.

## (அழல்) பித்தம் தோன்றுதல்

நித்திரை பண்ணுத தாலும் நெடியமூச் செறிகை யாலும்
பத்தினி மாதர் தம்மைப் பார்த்திச்சை யாகை யாலும்
நித்தமு மேன்மே லுண்டு நிலேயின்மேல் நிற்கை யாலும்
முற்றிடும் பித்த மென்று மொழிந்தனர் முனிவர் தாமே. 32

**பொருள் :—** தூங்கவேண்டிய காலஅளவு, முறைப்படி தூங்காமல் விழித்திருப்பதாலும், நீண்ட மூச்சு எந்நேரமும் உண்டாகும்படி நேர்வதாலும், (கடின உடலுழைப்பு, முதலியன இதற்குக் காரணங்களாம்) கற்புடைய மங்கையர், மேல் மிக்க இச்சைகொண்டு வீணே மனநோய் படுவதாலும், நாள்தோறும் உண்டிக்கு மேல்உண்டி கொள்வதாலும், தன் நிலேமைக்கு மேல்நிலேயில் நின்று உண்டி, சூழல், ஒழுக்கம் முதலிய மாறுபட்ட பழக்கங்களாலும் பித்தம் மிகுந்து வருமென்று முனிவர் கூறினர்.

## பித்த சுர இயல்பு

பித்த சுரத்தின் குணங்கேளாய்
பெருகப் பிதற்று முழற்றியிடும்
மெத்தத் தண்ணீர் தணேவாங்கும்
மிகவுங் கைக்கும் நாவுலரும்
ஒத்துச் சிறுநீர் மலந்தானும்
ஒளிசேர் நயனம் மஞ்சளிக்கும்
சுத்தப் பவன முட்டணிக்கும்
சொல்வாய் மிடறும் புண்ணுமே. 33

**பொருள் :—** வாய் பிதற்றல், உழலுதல், நீர் வேட்கை மிகலால் தண்ணீர் அதிகமாய்ப் பருகல், நாக்கு மிகவும்

கைக்கும், நாவுலரும்; சிறுநீர், மலம், கண்கள் ஆகியவை ஒக்க மஞ்சளிக்கும்; வாயு வெம்மையுறும்; (உட்டிண வாயு ஏற்படும்), (பவனம்=வாயு), பேசும் வாய் தொண்டை (குரல் வளை) புண்ணாய் விடும்.

அத்தியி லழல்வது மாங்கார மொழிவதும்
எத்திசை யெலும்பிலு மிடைவிடா தொழிதலும்
பித்தினல் வாய் கைப்பும் பிதற்றுகை பெருப்பதும்
புத்திசே ரைம்புலன் புண்ண தாகுமே. 34

பொருள் :— என்பு அழற்சியும், சினங்கொண்ட மொழியும், வாயின் கைப்பும்; பிதற்றல் அதிகரித்தலும், மெய், வாய், கண், மூக்கு, செவியாகியவை புண்ணுதலும் பித்தத்தினல் என்க.

நாசிநீர் சிவப்பு முண்டாந்
தலைவலி நோவு முண்டாய்க்
கூசவே வெளுத்துக் கொம்மிக்
கொடியதோர் முற்றி யுண்டாய்
வாசமென் குழலாய் தாகம்
மருவிடும் நோவு முண்டாய்ப்
பேசலாம் வெப்பின் தன்மை
பித்தத்தின் சுரமி தாமே. 35

பொருள் :— மூக்கில் சிவந்த நீர்வடிதல், தலைவலி கூசம், நீர்வேட்கை (எரிச்சல்) சேர்ந்த நோய்கள் உண்டாதல் ஆகியவை பித்த சுரத்தின் தன்மையாம்.

### பித்த சுரக் குடிநீர்

மாருரும் பித்தசுரம் வெதுப்பும்விழி சிவக்கும்
வதனம்வாடாது நாவரண் டுகுளிர் வேண்டும்
கூறுதெல் லாங்கூறுந் தண்ணீர் வாங்கும்
குறுகுஞ்சிறு நீர்சிவந்துவிழும் மலமும் வாங்கும்
ஏருரிருஞ் சிற்றமட்டி பற்ப டாகம்
இலுப்பை நன்னரி முத்தக் காசு
கூருருந் திப்பிலியி லாமிச்சம் நேரே
கூட்டிக்குடி நீர்காய்ச்சிக் கொள் வீரே. 36

**பொருள் :—** கண்கள் சிவக்கும், முகம்வாடாது, நாவரட்சி உண்டாம்; குளிர்ச்சியை விரும்பும், சொல்லத்தகாதவாறெல்லாம் பிதற்றும், தண்ணீர்த் தாகம் மிக உண்டாகி மிக்க நீர் அருந்தும், சிறுநீரும் மலமும் குறைந்த அளவிலும் சிவந்தும்விழும். இவை பித்தசுரத்தின் குணமாம். அதற்கு மருந்து :— இஞ்சி, சிற்ரு முட்டி, பற்பாடகம், இலுப்பைப்பூ, நன்னாரி, கோரைக்கிழங்கு, திப்பிலி, விலாமிச்சு வேர், சம அளவாகக் கூட்டிக் குடிநீர் செய்தருந்துக.

முந்திரிகைப் பழஞ்சீந்தில் முத்தக் காசு
  முதியகொன்றைப் பழமங்கு ரோசானியுஞ் சுக்கு
முந்தியபற் படாகமிவை குடிநீ ராகும்
  ஓதிலின்ன மொருவகைசந் தனம்நன் னாரி
தந்தபெருங் குரும்பையிலா மிச்சத் தோடு
  தழைத்தவதி மதுரத்தோடு தன்னி லொக்கச்
சிந்தையுட னேகுடிநீர் காய்ச்சிக் கொள்ளில்
  சேர்ந்தபித்த சுரமுழுதுந் தீருந் தானே. 37

**பொருள் :—** கொட்டை திராட்சை, சீந்தில்தண்டு, கோரைக்கிழங்கு, சரக்கொன்றைப் புளி, குரோசானி ஓமம், சுக்கு (தோல் சீவிச்சுத்தம் செய்தது), பற்பாடகம் இவைகளைச் சமனாகச் சேர்த்துக் குடிநீர் செய்து குடிக்கவும்.

இன்னும் ஒருவகை கூறுவோம் :— சந்தனக்கட்டை, நன்னாரிவேர், பெருங்குரும்பை வேர், விலாமிச்சம் வேர், அதிமதுரம், இவைகளைச்சம அளவாகச் சேர்த்துக் குடிநீர் விதிப்படி செய்து உண்டுவர பித்தசுரம் தீரும்.

கஞ்சாங் கோரை கற்ருழை
  கதித்த வில்வஞ் சிறுநெருஞ்சில்
மிஞ்சா வெளுந்த கிளாலத்தின்
  வேரு மிக்க பேய்ப்புடலும்
விஞ்சா நெல்லிப் பருப்புநில
  வேம்பு சுக்கு பற்படகம்
மஞ்சா தியத்தில் சமபாகம்
  குடிநீர் மாற்றும் பித்தசுரம். 38

**பொருள் :—** கஞ்சாங்கோரை (நாய்த்துளசி), கற்ருழை, வில்வ வேர், சிறு நெருஞ்சில் (சமூலம்), வெள்ளைக் கிளா

(வேர்ப்பட்டை), அத்திவேர், பேய்ப்புடல், நெல்லிமுள்ளி, நிலவேம்பு, (சமூலம்), சுக்கு, பற்பாடகம் சம அளவாய்க் கூட்டிக் குடிநீர் செய்து உட்கொள்ள பித்த சுரம் தணியும்.

## தாபசுர இயல்பு

அந்த மாக வெழுந்திருக்கு
  மறவே தண்ணீர் தான்வாங்கும்
திந்த மாக வாய்வரளும்
  நிகழ்த்தும் நாவு மிகப்புலரும்
சிந்தை யாகக் குளிர்தன்னைக்
  காய வேண்டுஞ் சிக்கெனவே
சந்த மாக வுரைதந்தார்
  தாப சுரத்தின் குணந்தானே. 39

பொருள் :— படுக்கையில் பொருந்தாது எழுந்து எழுந்து படுக்கும்; மிக்க தண்ணீர் குடிக்கும்; எப்போதும் வாய் வரண்டிருக்கும்; குளிர் காய்வதில் விருப்பம் கொள்ளும் இவைகள் தாபச் சுரத்தின் இயல்புகளாகும்.

## தாபசுரக் குடிநீர்

தாபசுரந் தனக்கிளநீர் காய்ச்சி யாத்தித்
  தணிக்கவே நெற்பொரியின் பொடியுங் கூட்டி
மாபரிவாய்க் கூவிளைவேர் கலந்து கொள்ள
  வளர்சுரமுஞ் சத்தியும்போம் வயிறு விம்மி
தீபனமா காதிருந்தா லிளநீ ரோடு
  திரண்டகடுக் காயிரண்டு கலந்து கொள்ளில்
கோபமறச் சுரந்தீர்ந்து வயிறும் விட்டு
  உணர்ச்சிபிறந் தங்கமெல்லாங் குளிருந் தானே. 40

பொருள் :— இளநீரைக் காய்ச்சி அது கொதிக்கும்போது அதில் நெற்பொரிமாவைக் கூட்டி ஆற்றி வில்வவேர்த் தூளையும் கலந்து உட்கொள்ளத் தாபச்சுரம் தீரும். அதனல், உண்டான வாந்தியும் போகும். மேற்படி சுரத்தில் வயிறு உப்பியும் மலம் சிக்கியும் பசி இன்றியும் இருக்குமானல் இளநிரில் இரண்டு கடுக்காயின் (கொட்டை நீக்கியது) தூளைச் சேர்த்து உட்கொள்ளவும். அப்படிச் செய்தால் வயிறு கழியும்; பசியுண்டாகும். தன்னுணர்வு வரும். உடல் எல்லாம் சுரம் விட்ட காரணத்தால் வியர்த்துக் குளிரும். (வெம்மை தணியுமென்பது கருத்து).

பித்தசேத் துமந்தான் கூடில்
  பெருக்கக் குளிர்ந்து சந்துகள் நோவும்
மெத்தென யிரும லுண்டாய்
  வெதும்பிப் பின் மிகுதி யாக
ஒத்திடுஞ் சுரங்கள் தானும்
  ஒருகால்காய்ந் தொருகால் மாறும்
பித்தம்வந் தடுத்த போது
  பிறந்திடுஞ் சுரங்கள் தாமே. 41

**பொருள் :—** பித்தமும் சேத்துமமும் அணைந்துண்டாகும் சுரத்தினுல் உடலில் மிக்க குளிருண்டாகும்; எலும்பு மூட்டுகள் தோறும் நோவுண்டாகும்; இலேசாக இருமல் உண்டாகும். உடல் வெதும்பும்; மிகுதியாகக் காய்ந்து பின் ஒரு சமயம் வெப்பமின்றியும் இருக்கும்; இது ஐய மிகுந்து பித்தம் சேர்ந்த போது உண்டாகும் சுரத்தின் குணமாகும்.

## வளி மிகுதலின் இயல்பு (வாயு பிரகோபம்)

தக்க வாயு கோபித்தால் சந்து வுளைந்து தலைநோவா
மிக்க மூரி கொட்டாவி விட்டங் கெரியு மலங்கட்டும்
ஒக்க நரம்பு தான்முடங்கு முலர்ந்து வாய்நீ ரூறிவரும்
மிக்க குளிரும் நடுக்கமுமாம் மேனி குன்றி வருங்காணே. 42

**பொருள் :—** வாயுவின் பிரகோபத்தால் (தன் இடங்களில் சினத்தலால்) என்பு முட்டிகள் நோக்காடும், தலைவலியும், மிகவும் வலிந்த கொட்டாவிகளும் உண்டாகும். மலம் கட்டுப்படும். நரம்புகள் தன் இயல்பு மாறி; முடங்கலும், வரளலும் உண்டாகும். வாய் நீர்சுரக்கும் மிக்க குளிருண்டாகும். நடுக்க முண்டாகும் உடலின் அளவு இளைக்கும்.

## அழல் மிகுதலின் இயல்பு (பித்த பிரகோபம்)

உரத்த பித்தங் கோபித்தா
  லுள்ள முழலை நெஞ்சுவற்றுஞ்
சுரத்தில் சிரசு பாரித்தல்
  துடித்தல் வெந்தல் நீர்ப்பாய்தல்
விரைத்தல் பிதற்றல் மூர்ச்சித்தல்
  மிக்க மயக்கங் கண்ணெரிதல்
பெருத்த வாயுங் கைப்பினொடு
  புளிப்பம் வேண்டியிருக்குமன்றே. 43

**பொருள் :—** பித்தப் பிரகோபத்தால் உள்ளத்தில் கனல் ஏற்படும்; மார்பில் வறட்சிக் குணங்காணல்; தலைக்கனத்துடன் சுரம் காணும்; அங்கங்களில் துடிப்பும், வேக்காடும் ஏற்படும். நீர்சுரக்கும் இடங்களில் மிக்க நீர்பாய்தலும் உண்டாகும்; சந்திகளும், தசைகளும் கடினத் தன்மை அடையும்; வாய் பிதற்றல், மூர்ச்சையாதல், மயக்கம் காணல், கண்ணெரிச்சல், வாய்கைப்பு இவை உண்டாம்; புளிப்புச் சுவையை விரும்புதலும் உண்டு.

## ஐயம் மிகுதலின் இயல்பு (சேத்துமப் பிரகோபம்)

மிக்க கபந்தான் கோபித்தால்
  மேனி நெரிக்குஞ் சிக்கனவாம்
தக்க தினவு குளிராகும்
  தக்கால் வீங்குமுகம் வெளுக்கும்
மிக்க மயக்க மந்திக்கு
  மிகவு முறக்கம் பசிகெடுக்கும்
தக்க வாயுந் தித்திக்கும்
  சாற்றி னேமிவ் விலக்கணமே. 44

**பொருள் :—** உடல் துகளாகும்படி நெரித்தாற் போன்ற உணர்ச்சி விரைந்து காணப்படும். உடலில் தினவும் குளிரும் உண்டாகும்; காலில் வீக்கங்காணும்; முகம் வெளுத்திடும்; மயக்க முண்டாகும்; பசித்தீ குறையும்; மிக்க தூக்கமுண்டாகும்; பசியைக் கெடுத்துவிடும். வாய் இனிக்கும். இவை கபப் பிரகோபத்தின் (தன் தானங்களில் சினத்தலின்) இலக்கணமாகும்.

## ஐய சுர இயல்பு (சேத்தும சுரம்)

சங்கையால் மதுர முண்டு தையலார் போகம் மேலாய்
வெங்கைய முலையே புல்கித் துயிலினை விரும்பு மாகில்
பங்கயத் துங்கத் திங்கட் பணைமுலைப் பவழச் செவ்வாய்ச்
செங்கயற் கண்ணி னாளே சேத்தும சுரமி தென்னே. 45

**பொருள் :—** இச்சுரம் கண்டபேர்களுக்கு வாயில் இனிப்புச் சுவை மேம்பட்டும் மங்கையரைப் புணரும் அவா மேம்பட்டும் அவர்களை அணைத்துக் கொண்டே தூங்க விருப்பம் கொள்வராகில் அது சேத்தும (ஐய) சுரக் குணமென்று கூறுவாயாக.

தொலைக்குஞ் சேத்துமக் குணங்கேளீர்
  தொண்டை தன்னைப் புகைந்திருமும்
மலத்தை வெளுக்கும் வாடாமல்
  வருந்தி யங்க மிகவெதும்பும்
தலத்துக் கிடையுங் கொள்ளாது
  தலையைத் தெரிக்கும் தண்ணீராம்
பிலத்தை மிகவே போக்கி வைக்கும்
  பேசீர் சிலேத்தும சுரமென்றே. 46

**பொருள் :—** தொண்டையில் புகைச்சலுடன் இருமல் காணல், மலம் வெளுத்தல், உடலில் வாட்டமில்லாமலே அங்க மெல்லாம் வெப்பமடைதல், படுக்கையில் பொருந்தாமை, தலையை வெட்டுவது போன்ற வலிகாணல், உடல் அடிக்கடி வியர்த்தலால் உடல் முழுதும் தண்ணீராதலும், உடல் உரத்தை மிக்க நலிவித்தலும் உண்டானல் அறிவு தரும் சேத்தும (ஐய) சுர மென்று உணர்க.

காலுங் கையு மிருகண்ணுங்
  கடிய நாவும் வெளுத்திருக்கும்
பாலும் வேணு மெனவருத்தும்
  பலபல கல்வி பயிற்றுவிக்கும்
கோல மிகுத்துக் காலனையே
  கூட்டுஞ் சேத்துமந் தானடைந்தால்
மாலும் பிரமன் வகுத்தபடி
  வந்த சேத்தும சுரந்தானே. 47

**பொருள் :—** இரண்டு கால்கள், கைகள், கண்கள், நா இவை வெளுத்திடும். பாலை விரும்பி மிக்க தொந்தரவுகள் செய்யும். பலவாறு குறிகுணங்களைத் தோற்றுவிக்குந் தன்மை யுடைய சேத்தும நாடி நடந்ததானல் அச்சுரம் காலனையே அழைப்பிக்கும் என்க. இது திருமாலும் அயனும் வகுத்த கட்டளை என்க.

விக்க லெடுக்கல் மெய்யோங்கல்
  மேனி வெதும்பல் மெய்தினவு
கக்குங் குருவோ வுண்டென்னக்
  காலே வீங்கும் முகம் வெளுத்தல்
மிக்க அக்கினி மந்திக்கும்
  மிகவே யுறக்கந் தான்வருதல்
தக்க இருமல் வாய்நீராஞ்
  சாற்றி னேமிவ் விலக்கணமே. 48

பொருள் :— விக்கல் தோன்றல், உடல் பருத்தல் (வீங்குதல்), உடலில் வெப்பம் காணல், தினவுண்டாதல், வாந்தி எடுத்தல், கால்கள் வீங்குதல், முகம்வெளுத்தல், செரிப்புத் தன்மை குன்றுதல், மிக்க உறக்கங்காணல், இருமலும், வாய் நீர் ஊறலும் தோன்றல். இவையாவும் சேத்தும ஐய சுரத்தின் இலக்கணமாகும்.

உத்தாமணி தூதுவளை சங்
கொளிரு முடக்கத் தாரிகண் டங் காலிவேர்
கரிசலாங்கண்ணி யாடாதோடையிலை
கற்ருழஞ் சருகுதேவ தாரிக் கட்டைவேர்ப்
பட்டை, வற்ருக் கழாயஞ் சமபாகம்
கொள்ளில் சேத்தும சுரந்தீரும். 49

பொருள் :— உத்தாமணி (சமூலம்), தூதுவளை சமூலம், சங்கங்குப்பி (வேர்ப்பட்டை), முடக்கத்தான் சமூலம், கண்டங்கத்தரி வேர்ப்பட்டை, கரிசாலைச் சமூலம், ஆடாதோடை இலை கற்ருழைச்சருகு, தேவதாருக்கட்டை, மேற்படி வேர்ப்பட்டை, இவைகளைச் சமபாகமாக எடுத்து முறைப்படி குடிநீர் செய்து குடிக்கச் சேத்தும சுரம் தீரும்.

குறிப்பு :— இப்பாட்டு முழுமையாக இல்லை; சிதைந்துள்ளது. சில சரக்குகளும் நடைமுறையில் விடுபட்டிருக்கலாம்.

சீதசுரந் தனக்குத் தாபமிகுத்தங்கஞ்
சிலுக்கு மிருமுஞ் சேத்தும மாகும்
தீதில் கண்டங்காலி கருவேம்பு சரக்குச்
சிறுமூல மிலவங்கந் தான்றி
ஆதலிவை குடிநீரு மாகு மற்று
மரியசே வகன்பூடு முத்தக் காசு
நீதியுட னேயிவையுங் குடிநீ ரிட்டு
நிதைப்படி யிலேயிதுவு நீர்கொள் வீரே. 50

பொருள் :— சீதசுரத்தில் தாபம் அதிகரிக்கும், உடல் சிலிர்க்கும், இருமலுண்டாகும், சேத்தும தோடம் அதிகரிக்கும். இதற்குக் கண்டங்கத்தரி வேர்ப்பட்டை, கருவேம்பு, சுக்கு, கண்டந்திப்பிலி, கிராம்பு, தான்றிக்காய்த் தோல் இவைகளை முறைப்படி குடிநீர் செய்து உட்கொள்க. இன்னும் சிற்ருமுட்டி வேர்ப்பட்டை, கோரைக் கிழங்கு இவைகளை முறைப்படி குடிநீரிட்டுண்ண மேற்படி சுரம் தீரும்.

சிற்ற ரத்தை மிளகொடு திப்பிலி
உற்ற வெள்ளுள்ளி ஒண்கருஞ் சீரகம்
குற்ற நொச்சில் சுக்குக்குடி நீரிது
துற்றவைத் துக்கொள் விட்டிடுஞ் சீதமே. 51

**பொருள் :—** சிற்றரத்தை, மிளகு, திப்பிலி, வெள்ளைப் பூண்டு (தோலுரித்த இதழ்கள்), கருஞ்சீரகம், நொச்சி இலை, சுக்கு இவைகளின் குடிநீர் கொள்க. சீதளம் விட்டுவிடும்.

### நச்சு சுரத்தின் இயல்பு

ஒன்றைவிட் டொருநாள் நாலா
  நாளொரு நாள்தான் காயும்
நின்றுவிட் டேழு நாளில்
  பதியு மெடுத்தே காயும்
வென்றுசேர் காரந் தானே
  அவபத்திய விடந்தா னென்று
குன்றுசேர் முலையி னளே
  கொடுவிடஞ் சுரந்தா னென்றே. 52

**பொருள் :—** ஒன்றை விட்டொரு நாளும் நாலு நாட்களுக்கொரு முறையும்; ஏழு நாட்களுக்கொரு முறையும் காயும் சுரம் விடசுரமென்க. அது அபத்தியம் காரணமாக (மருத்துண வின் தகாச் செயலால்) ஏற்பட்ட தென்றறிக.

**குறிப்பு :—** மேற்படி சுரம் இரண்டு நாள்களுக்கொரு முறை, மூன்று நாள்கள் ஐந்து நாள்களுக்கொரு முறை, ஆறு நாளகளுக் கொரு முறை, இபபடியும வருமென்பது உபலட்சண விதியால் [illegible]

### நச்சு சுரக் குடிநீர்

வேர்த்து விடும் வெதும்புங் கால்மாறிக் காயும்
  விடமசுரக் கழாயங் கேளு முத்தக் காசு
ஆர்த்தசிறு தேக்குப்பற் பாடகஞ் சீந்தில்
  அரியநில வேப்புபுடோல் சிறுகாஞ் சோரி
காத்து கண்டங் கத்தரிசெங் கழுநீர் கோட்டங்
  கனத்த சுக்குக் கலந்தொன்று முக்கழஞ்சு கூட்டிக்
கூர்த்தநீ ரிருநாழி நாலொன் றுக்கிக்
  குடித்தக்கால் வெதுப்புவலி ஓடுந்தானே. 53

**பொருள் :—** உடல் விபர்த்து விபர்த்து அடங்கும்; விட்டு விட்டு மாறிமாறிக் காய்ச்சல் வரும்; இதுவிடசுரம். இதற்குக் குடிநீர் :— கோரைக்கிழங்கு, கண்டுபொரங்கி, பற்பாடகம், சீந்தில் தண்டு, நிலவேம்பு, பேப்புடல் (புடோல்), சிறுகாஞ்சொரி வேர்ப்பட்டை, கண்டங்கத்தரிவேர், செங்கழுநீர்க்கிழங்கு, கோட்டம், சுக்கு, தனித்தனி மூன்று கழஞ்சு 3¾ வராகன் எடை (6¾ கிராம்) எடுத்து இரண்டுபடி நீரில் ஊறவைத்து முறைப்படி நாலில் ஒரு பாகமாக வற்றக் காய்ச்சிய குடிநீர் அருந்தச் சுரம் வலிகளும் தீரும்.

முத்தக் காசு நிலவேம்பு
  முதிருங் கண்டங் கத்தரிவேர்
ஒத்த சுக்குப் பற்படாகம்
  உமையாள் கோட்ட மித்தனையும்
மத்தித் தொன்றாய் மிகக்காய்ச்சி
  வாங்கிக் குடிக்க வல்லீரேல்
சித்தத் துடனே விடமசுரம்
  தீருந் திண்ண மிதுதானே. 54

**பொருள் :—** கோரைக் கிழங்கு, நிலவேம்பு, கண்டங் கத்தரிவேர், சுக்கு, பற்பாடகம், மஞ்சள், கோட்டம் இவைகளைச் சமமாக எடுத்து முறைப்படி குடிநீர் செய்தருந்த விடமச் சுரம் தீரும்.

**குறிப்பு :—** இங்கு உமை என்பது மஞ்சள் என்று கொண்டு குடிநீர் சரக்குகளில் கூட்டியும், உமையாள் என்பது மயிலிறகாகக் கொண்டு அதைச் சுட்ட சாம்பலை (பற்பத்தை) மேல் பொடியாக்கிக் கொண்டும் உபயோகிப்பது அநுபவத்தில் நல்ல பலனைத் தந்துள்ளது.

சன்னிவாத சுரத்தின் இயல்பு

முந்துறு குளிரு முத்து
  மூர்ச்சையு மூமை போலே
செந்தழ லெனவே கண்கள்
  சிவந்துள்ளுங் குழிய தாகி
எந்திய தலையு மாகி
  யிருசெவி மந்த மாகுஞ்
சந்துறு மலமு நிற்குஞ்
  சன்னிவாத சுரங்கள் தானே. 55

**பொருள் :—** முன்னே குளிர் தோன்றல், மூர்ச்சையாதல், வாய்பேச எழாமை, கண்கள் தீப்பொறி போலச் சிவத்தல், கண்கள் உட்குழிந்திருத்தல், கவிழ்ந்த தலையாதல், செவிகள் கேளாதிருத்தல், மலம் கட்டிப்போதல், இக்குறிகள் சன்னிவாத சுரங்களுக்கு உரியனவாகும்.

கண்ணும் வாயும் மிகச்சோர்ந்து
காலுங் கையு மிக வீங்கி
யுண்ணு நாவு மிகச் சோர்ந்து
யுற்ற செவியு நோவெடுத்து
எண்ணு மறிவு மிகக் கலங்கி
யிசைந்த தலையும் பாரிக்கும்
தண்ணீ ருந்துந் தாழ் குழலாய்
சன்னி வாத சுரந் தானே. 56

**பொருள் :—** கண்களும் நாவும் வாயும் சோர்வுறும்; கால்களும் கைகளும் மிக வீங்கும்; செவிகளில் நோவெடுக்கும்; மனக் கலக்கம் உண்டாகும்; தலை மிக்க பளுவாகத் தோன்றும். மிக்க நீர்வேட்கை கொண்டு நீர் அருந்தும். இக்குணங்கள் கண்டால் அது சன்னிவாத சுரமாகும்.

### சன்னிவாத சுரத்துக்குக் குடிநீர்

நெஞ்சுசெவி யுடன்கூட்டும் பிடரிநோவாய்
நீண்டவிழி சிவந்துதான் நரம்பு விம்மி
விஞ்சுமுடம் புணருங்குத் திருமல் சோடை
மிகவுண் டாகும்சன்னி வாத மாகும்
அஞ்சலிரு வேலிசதா வேலரிசி கன்னல்
அதிமதுரம் நெற்பொரி நன்னரி சுக்குத்
தஞ்சமுள சிறுபயறு சமன்சேர்த் தெல்லாந்
தருகுடிநீ ரதுகாய்ச்சித் தான்கொள் வீரே. 57

**பொருள் :—** நெஞ்சிலும், காதுகளிலும், பின்கழுத்திலும் வலியுண்டாகும். கண்கள் சிவந்து கண் நரம்புகள் உப்புதலும், உடல் மிக்க உலர்தலும், குத்திருமலும் மிக்க உண்டாகும். இக்குறிகள் சன்னிவாதத்தினதாகும். அதற்குத் தீர்வு:— கொடு வேலி, வேலிப்பருத்தி, சதகுப்பை, ஏலரிசி, கரும்பு, அதிமதுரம், நெற்பொரி, நன்னரி, சுக்கு, சிறுபயற்றங் கொடி (முக்தபர்ணி என்று வடசொல்லில் கூறப்படும் பயற்றங்கொடி எனக் கொள்க). இவைகளைச் சமபாகமாக எடுத்துக் குடிநீர் செய்தருந்தவும். மேற்படி சன்னிவாதம் தீருமென்பது குறிப்பெச்சம்.

இருவேலி சிறுதேக்கு முத்தக் காசு
இலவங்க மதிமதுரம் பங்கம் பாளை
மருவாருந் திப்பிலிசுக் கேலங் சீந்தில்
மணத்தகிராம் போர் கழஞ்சு சமனாய்க் கூட்டி
ஒருநேர மிருநாழி தண்ணீர் விட்டு
உழக்காகக் காய்த்திறக்கி யுள்ளே கொள்ளப்
பரிவுடனே வாதசுர மாய தெல்லாம்
பறந்துமுறிந் தேநொடியிற் பறக்குந் தானே. 58

**பொருள்** :— உத்தாமணி, சித்திரமூலம், கண்டுபரங்கி, கோரைக்கிழங்கு, கிராம்பு, அதிமதுரம், ஆடுதின்னாப்பாளை (சமூலம்), திப்பிலி, சுக்கு, ஏலம், சீந்தில் தண்டு, மணமுள்ள கிராம்பு, தனித்தனி ஒரு கழஞ்சு ($4\frac{1}{4}$ கிராம்) வீதம் எடுத்து இரண்டு படி நீரிலிட்டுக் காய்ச்சி $\frac{1}{4}$ படியாக வற்ற வைத்து முறைப்படி அருந்த எல்லாவகை வாத சுரங்களும் தீரும்.

**குறிப்பு** :— இப்பாடலில் இலவங்கம் என்றும் கிராம்பு என்றும் இருவேறு சரக்காகக் கூறப்பட்டிருப்பதால் இலவங்கப் பத்திரியும் இலவங்கமும் கூட்டிக் கொள்ள வேணுமென்பது குறிப்பு போலும்.

நெருஞ்சிநற் கண்டங் காலி நீதிசேர் சித்த மல்லி
அரிந்திடும் பேரா மல்லி யதிற்பழ வரிசி கூட்டி
வரைந் தொரு நாழி நீரை வார்த்தரை நாழி யாக்கி
அருந்திடிற் சன்னி வாத சுரமுள தகன்று போமே. 59

**பொருள்** :— நெருஞ்சிச் சமூலம், கண்டங்கத்தரிவேர், சிற்றுமல்லி (என்னும் ஓரிலை), பேராமல்லி (மூவிலை என்னும் மூலிகை), பழைய அரிசி (அறுபதாங் குறுவை தான் மருத்து வத்துக்கு உகந்தது என்று அறிக). இவைகளை ஒக்க எடுத்து ஒருபடி நீரிலிட்டுப் பாதியாகக் காய்ச்சி அருந்தச் சன்னிபாதம் விலகும்.

## சேத்துமவாத சன்னியின் இயல்பு

மருவிய சேத்து மத்தி னிணங்கிய வாதம் வந்தால்
கருகிய சன்னி வாத குணமென்று கருத லாகும்
பொருதலை பிடரி காலும் பொருகரம் புலமுஞ் சோரும்
மருவிய வயிறு தானும் வகையறச் சுரக்குந் தானே. 60

**பொருள் :—** சேத்தும தோடத்துடன் வாதம் இணைந்த சன்னிபாதத்தில் தலை, புறங்கழுத்து, கால்கள் ஆகியவைகளின் பெரிய நரம்புகளின் பலம் குன்றும், வயிறு சுரக்கும் (உப்புசம் உண்டாகும்).

மிக்குண மெய்து மாகி விசைந்திடுஞ் சன்னி வாத
மிக்குணம் வந்த போதே அசாத்திய மென்று சொல்லும்
இக்குணம் பார்த்த போதே மெலிந்திடு மென்றே யெண்ணி
இக்குண மறிந்த போதே சடுதியில் சிகிச்சை செய்யே. 61

**பொருள் :—** தோடங்கள் தன்மாத்திரையில் மிகுமாகில் சன்னிபாதம் ஏற்படும். சன்னிபாதம் தோன்றும் போதே அசாத்தியமாக விளையும். இக்குணத்தைக் கண்ட அக்கணமே மெலிவு ஏற்படுமென்று கண்டு கொண்டு மருத்துவம் செய்ய வேண்டும்; காலந்தாழ்த்தலாகாதென்பது குறிப்பு.

மருவிய சேத்தும வாதமுங் கூடினால்
கருதிய சன்னி வாதக் குணமென்று கருதலாம்
உருவிய கால்தலை பிடரி சோர்ந்திடும்
மருவிய நீருபோல் வயிறுஞ் சுரக்குமே. 62

**பொருள் :—** ஐயமும் வளியுங் கூடினால் அது சன்னிவாதக் குணமென்று கருதுவாயாக. கால், தலை, பிடரி ஆகிய இடங்களில் சோர்வு காணும்; வயிறு சுரந்திடும்.

### வாதசன்னியின் இயல்பு

கையைக் கொட்டி யாடுவதும்
கண்ணை யொளித்தங் கிருப்பதுவும்
பையப் பையச் சிரிப்பதுவும்
பார்வை பரந்தே பார்ப்பதுவும்
தொய்யத் தொய்யக் கிடப்பதுவும்
சொல்லை யடக்கி யிருப்பதுவும்
வையத் திருக்குங் குழல்மடவாய்
வாத சன்னி வருமாறே. 63

**பொருள் :—** கையோடு கைசேர்த்துத் தட்டி ஆட்டங்கள் ஆடுவதும், கண்களைக் கையால் மூடிக்கொண்டு இருப்பதுவும், மெல்லிய சிரிப்பும், மருண்டு பரபரப்புடன் பார்த்தலும், கைகால் முதலிய அங்கங்கள் இயல்பாயுள்ள திடமின்றித் துவண்டு கிடப்பதுவும், பேச்சடங்கி இருப்பதுவும் வாதசன்னிக் குணங்களாம்,

விழுகிலு மெழுகிலும் விழுந்து புரளிலுங்
கழுவிய விழிநல்லாய் காமப்பா டாகிலும்
தொழுகிலு மழுகிலுந் துபரந் தன்னிலும்
நழுவிய குரல்மொழி நகைப்பர் சன்னியே. 64

**பொருள் :—** விழுந்தாலும், எழுந்தாலும், தரையில் புரண்டாலும், தொழுதாலும், பிறர் அழுதாலும், ஆசை மிகுந்த போதும், பிறர் தொழுதாலும் பித்த சன்னி கொண்டவர்கள் நகைப்பர்,

பெருகும் பித்த சன்னிக்குப்
  பிதற்றுஞ் சிரிக்கும் முகஞ்சுளிக்கும்
புருவ மிரண்டும் மிகநெரிக்கும்
  போக்கு மீளுந் தானெரிக்கும்
கருதும் வயிறு தானெரிக்கும்
  கருத்துள் வாயும் பொரவற்றும்
மருவும பானம் புண்ணுகும்
  மதிக்கும் பித்த சன்னி சுரம். 65

**பொருள் :—** பித்த சன்னி கண்டபோது பிதற்றலும், சிரித்தலும், முகத்தைச் சுளித்துக் கொள்ளலும், இருபுருவங்களையும் நெரித்துப் பார்த்தலும், வயிற்றில் எரிவுகாணலும், வாய்நீர் வற்றுதலும், அபானத்தானம் புண்ணுதலும் பித்த சன்னிச் சுரக் குணங்களாகும்.

## சேத்தும சன்னியின் இயல்பு

அங்கந் திமிர்ந்து மிகநொந்து
  அறவே யீளை யிருமலுமாய்ப்
பொங்கும் வாயுந் தித்திக்கும்
  பொசிப்புந் தித்திப் புறவேண்டும்
தங்கு மலநீர் விடும்போது
  தரித்த நிறமும் வெளுத்திருக்கும்
செங்கண் சீதம் மிகக் கழியுஞ்
  சேத்தும சன்னி வருமாறே. 66

**பொருள் :—** உடலுறுப்புகள் யாவும் திமிர்த்து நோவும்; மிக்க கோழையுடன் இருமல் உண்டாகும்; வாய் இனிப்பாக இருக்கும்; இனித்த உணவையே விரும்பும்; நீரும் மலமும் வெண்ணிறமாய் இருக்கும்; சீதம் சீதமாக மிகவும் பேதியாகும். இவை சேத்தும சன்னியின் குணமாகும்.

## அசாத்திய சன்னி தோன்றக் காரணம்

திரும்பாத எழுவகை வரவு கேளீர்
சேர்ந்தநவ சுரத்தாலுந் திரிசங்கை யாலும்
வருந்தவழி நடந்தாலும் மோரால் நெய்யால்
வாய்த்தமாங் கிஷத்தாலும் பயம தாலும்
கருந்தலையில் முழுக்காலும் மடிகை யாலும்
கருதியே நீர் சாராயங் குடித்த தாலும்
பெருந்துயர மேழுவகைச் சன்னி தோடம்
பிறக்குமிது வெனவறிந்து பேசுவீரே. 67

**பொருள் :—** தீராத ஏழுவகைச் சன்னிதோடம் காணும் விதம் கேட்பீர்களாக:- புதுவிதச் சுரங்கண்ட போது (1) மூவகைச் சேர்க்கை :— (அ) பெண் (ஆ) தகாதசூழல் (இ) தொழில் ஆகியவை (2) வருந்த நெடுந்தூரம், நடத்தல் (3) மோர், நெய், மாமிசம் சேர்ந்த உணவு உட்கொள்ளல், (4) அஞ்சுதல், (5) தலைக்கு எண்ணெய் தேய்த்து முழுகுதல், (6) வருந்தி நீர் சிந்த அழுவதாலும் (7) மாசுற்ற நீர் சாராயம் (இது போன்ற போதை தரும் பொருள்களை) சாப்பிடுதல், ஆகிய இவற்றால் ஏழு வகையான சன்னி தோடம் பிறக்கும்.

## சன்னியின் இயல்பு

ஓடிப் பலகா லெழுந்திருக்கும்
உற்றுப் பார்க்குந் திகைத்திருக்கும்
வாடிக் கிடக்கும் மூர்ச்சிக்கும்
வாய்விட் டலறும் வலுப்பேசும்
தேடிப் பலகால் வார்த்தை சொல்லும்
செங்கண் சிவக்குங் கொட்டாவி
யாடற் பேட்டு நடையாளே
யடுத்த சன்னி வருமாறே. 68

**பொருள் :—** பலப்பல விதமாய் ஓடுதலும், படுத்துப் படுத்து எழுதலும் எதையும் உற்றுப் பார்த்தலும், திகைப்புண்டிருத்தலும், வாட்டமுற்று இருத்தலும், மூர்ச்சித்தலும், (நினைவிழந்த நிலையில் இருத்தல்), ஒரு காரணமுமின்றி வாய்விட்டு அலறுதலும், வல்லமை பேசுதலும், வார்த்தைகளைத் தேடித் தேடிப் (மறதி ஏற்படும் காரணத்தால்) பேசுதலும், எப்போதும் பேசிக் கொண்டே இருத்தலும், கண் சிவத்தலும், மிக்க கொட்டாவி காணுதலும் சன்னிவரும் என்று கூறும் குறிகுணங்களாகும்.

## அழல் சன்னியின் அசாத்திய குணம்

பெருகும் பித்த சன்னிக்குப்
  பிதற்றுஞ் சிரிக்கு முகஞ்சுளிக்கும்
புருவ நெரிக்கும் மோகிக்கும்
  போத மொழியும் வாய்பிதற்றும்
முருவும் வயிற்றுக் கடுப்பாகும்
  மருங்குங் கடுத்து வாய்ப்புண்ணும்
கருதுஞ் சன்னி வாதம்வரில்
  கால னென்றுங் கருதீரே. 69

**பொருள் :—** பித்த சன்னியின் அசாத்திய குறிகள் பிதற்றுதலும், சிரித்தலும், முகத்தைச் சுளித்துக் கொள்ளலும் (சினத்தின் குறிப்பு), புருவங்களை நெரித்துக் கொள்ளலும், ஆழ்ந்த யோசனையில் இருத்தலும், அறிவிழந்து வாய்பிதற்றலும், வயிற்றில் வலி தோன்றலும், இரு விலாப்புறங்களும் நோதலும், வாய் புண்ணுதலும் சன்னிபாதத்தில் கெட்ட குறிகளாம் (காலன்=யமன்).

## ஐய சன்னியின் அசாத்திய குணம்

சேரும் சேத்தும சன்னிக்குச்
  செருக்குங் கன்ன மிகவீங்கும்
சோருங் கண்ணற வேபதைக்கும்
  சூழ ஐயை மிகவிளைக்கும்
நேருங் கால்கள் மிகத்தாழ்க்கும்
  நிறத்து அங்கம் கம்பிக்கும்
காரின் குழலா யிவையடுத்தால்
  கால னென்றுங் கருதீரே. 70

**பொருள் :—** சேத்தும சன்னியின் அசாத்திய குறிகள், நோயாளி செருக்குற்றிருத்தலும், கன்னங்கள் வீங்குதலும், சோர்ந்திருத்தலும், நோவால் துடித்தலும், சேத்தும சம்பந்த முடைய மலினங்களா கோழை, ஆமம், மலின நீர் முதலானவை மிக உண்டாதலும், கால்கள் இயங்க இயலாமல் இருத்தல், அல்லது மட்டுப்படலும், உடலெல்லாம் நடுக்கம் (கம்பித்தல்) காணல். இவை சேத்தும சன்னியில் காணும் அசாத்தியக் குறிகளாகும்.

உரம்பெறு சன்னி தோன்றி
யுற்றகண் ணட்டாப் போலே
கரங்கள்கால் குறைந்து ஊந்து
கட்டுவிட் டையோ வென்னுந்
தரங்கெடப் புகழ்ந்து தன்னைத்
தானது வறியோ மென்னும்
வரம்பெறுஞ் சன்னி காலன்
வளமிது கூறி னோமே 71

**பொருள்:**— பலம் பொருந்திய சன்னி தோன்றிய காலத்தில் கைகால் இவைகளின் செய்கை தடைபட்டும், யாரோ தாக்கினது போன்ற நோவும், மூட்டு, தசை முதலிய வற்றின் தளர்வும் கொண்டு வலி முதலியன தாளாமல் ஐயோ வென்று அரற்றும். பேச்சில் முன்சொன்னவைகளைத் தான் சொன்னதாக அறியோம் என்றும் கூறும். இது 'சன்னி காலன்' குறி என்று கூறினோம் அறிக.

பச்சிக வாயு வாகும் பாரிச மதனிற் காயும்
உச்சிதா னெங்குஞ் சீத முறவிரு பாரி சந்தான்
வெச்செனச் சுரங்கள் மெள்ள மேதினி யென்றுஞ் சொல்லும்
நச்சும மடிக்கு மாகில் தோடமும் நழுவா தென்னே. 72

**பொருள்:**— தோடமடைந்த வாயுவாகில் இருபக்கங் களிலும் சுரங்காயும். உச்சியில் சீதளம் காணும். இருபுறங்களிலும் வெம்மை காணும். இத்தோடம் (மருந்து சாப்பிடாதவர்க்குத்) தானே தீராதென்று உலகோர் கூறுவர்.

தோளுந்தொடையு மெடுத்தெறிந்து சொல்வேருய்
ஆளுமறி யாம லறிவழிந்து-நீளியதோர்
கைகால் நடுக்கி நடுக்கிவிடு மேல்மூச்சு
மெய்தா னுயிர்விடுகை மேல். 73

**பொருள்:**— தோளிலும் தொடையிலும் தூக்கி எறிந்தாற் போன்ற வலி காணலும், வாய்ப் பேச்சு இயல்புக்கு மிக்க மாறு பட்டும், யாருக்குந் தெரியாதவாறு (மிக்க விரைவில்) தன் நினை விழந்து விடும். கைகளும், கால்களும் நடுங்கும். மேல் மூச்சு மிக்க நடுக்கத்துடன் காணும், இக்குறி காணப்பட்டால் மேற் கொண்டு உயிர் உடலை விட்டுவிடல் உண்மையாம்.

விக்கல் சேத்தும மேல்மூச்சு
விழிதான் சொருகல் மெய்நடுங்கல்
மைக்கண் பஞ்செழல் மஞ்சணித்தல்
வாய்ப்பல் கறுத்தல் மலமடைத்தல்
தக்க நாடி அறப்பதைத்தல்
தாடை வற்றல் சலமுணர்வில்
மிக்க பிணியின் குறிகண்டால்
மீளா திதுவும் விதிப்பயனே. 74

**பொருள் :**— விக்கல், கோழை அடைத்தல், மேல் மூச்சு, விழி சொருகல், உடல் நடுங்குதல், கண் பஞ்சடைதல், கண் மஞ்சளித்தல், வாய் (உதடு முதலியன) பற்கள் கறுத்தல், மலம் கட்டுப்படல், நாடித்துடிப்பு பதைத்தல் (விட்டில் சிறகடித்தல் போல மிக்க விரைந்து ஓடுதல்) தாடைத் தசை வற்றுதல், நீர் இறங்கும் உணர்வின்மை. இக்குறிகள் மிக்க பிணி உள்ளவர்க்குக் காணுமாகில் பிழைத்தல் அரிது.

நடுக்கு நாடி மிகப்பதறும்
நாவும் பல்லும் மிகவறளும்
மிடுக்கு மேனி மிகக்குளிரும்
மெலிந்தே மூச்சு மிகமண்டும்
மடுக்கும் சேத்தும மார்ப்பரிக்கும்
அதிகா அண்டந் திறந்திளைக்கும்
தொடுக்குங் காரியம் நீகண்டால்
தோற்கு முயிரென் றறிவீரே. 75

**பொருள் :**— நாடி நடுங்கிப் பதறுதல், நாவும் பற்களும் வறளல், உடலில் மிகக் குளிருண்டாதல், மூச்சு மிகுந்து விரைதல், சேத்தும நாடி மிகுந்து கோழை தொண்டையில் சேர்ந்து மூச்சு விட்டு வாங்கும் போது மிகுந்த ஒலி (தயிர் சிலிர்ப்புதல் போன்றது) காணப்படல். இத்தகைய குறிகுணங்கள் கண்டால் உயிர் தொலையுமென்று அறிவீராக.

செறுக்கு மிளைக்குங் கண்சிவக்கும்
சேர வளைக்கும் புதுமை சொல்லும்
பெறுக்க வாங்கும் நெஞ்சினுள்ளே
பேணிச் சேத்துமங் குடியிருக்கும்.

நெருக்கும் நீருந் தான்பிழியும்
நேரே யிருக்க ஒட்டாது
அரிக்கில் குறிகள் கண்டக்கால்
அசாத்திய மென்றே யறிவீரே. 76

**பொருள்:—** உடல்வலிமை குறையும், கண்கள் சிவப்பேறும், (உடல் நோய் தாளமாட்டாமல்) உடலை ஒரு சேர வளைத்துக் கொள்ளும், புதுமையான சொற்களைக் கூறும், மூச்சு வாங்கும், நெஞ்சில் கோழை குடி இருக்கத் தொடங்கும். உடல் மிக்க வியர்க்கும் (துணியில் துவட்டிப் பிழியத் தக்கபடியாக என்று அறிக), ஒரு பாங்கில் அமைதியுற இருக்க இயலாது. இக் குறிகள் அசாத்தியக் குறிகள் என்றறிவீராக.

எதுக்கு நெஞ்சி லிளைப்புண்டாம்
எடுத்தே மூச்சு மிகமண்டும்
மதுக்குங் கைகால் விட்டுவரும்
அழைத்தா லும்செவி கேளாது
புதுக்குமேனி பொன்னிறமாம்
பொல்லாக் குறிகள் மிகவுண்டாஞ்
செருக்குங் கால னெனவறிந்து
தீரா தென்று புகல்வீரே. 77

**பொருள் :—** உண்ட உணவுப் பொருள்கள் நெஞ்சினுட் புகாமல் எதிரிட்டு வெளிவரல், மிக்க இளைப்புண்டாதல், மேல் மூச்சு மிகுதல், கைகால் களைத்துச் சோர்தல், செவி அடைப் புண்டாதல், உடல் மஞ்சளித்தல், இன்னும் பல கெட்ட குறிகள் தோன்றல் என்பன காணப்படின் தீராக்குறியென்று உணர்க.

சோதி சதைய மாயிலியம்
துட்டக் கேட்டை முப்பூரம்
நீதி பரணி ஆதிரையில்
நெறிசேர் செவ்வாய் கதிர்சனியும்
ஓது நவமி துவாதேசி
உதய சதுர்த்தி பிரதமைசட்டி
பேத மொருநாள் பிணிகொண்டாற்
பிரமா வெனினும் பிழையாரே. 78

**பொருள் :—** சுவாதி, சதையம், ஆயில்யம், கேட்டை, பூரம், பூராடம், பூரட்டாதி, பரணி, திருவாதிரை இந்த நட்சத்திரங்களில் ஒன்று செவ்வாய், ஞாயிறு, சனிக்கிழமையில் தோன்றி அத்தினம் பிரதமை, சதுர்த்தி, சட்டி, நவமி, துவாதசி, என்னும் திதியில் ஒன்று இணைந்து உதயகாலத்தில் சுரநோயுற்றவன் அயனேயானாலும் பிழைக்க மாட்டான்.

## ஐய நோயின் இயல்பு

அன்றியே சேத்து மத்துக்
கடையாள முடம்பு வேர்க்கும்
நன்றென மீறியேறி
நாவழு வழுத் திருக்கும்
மன்றிய சிறுநீர் தானும்
வன்மையா யுளைந்து வீழும்
மன்றினில் தோஷந் தன்னை
வாக்கினு லுணர்ந்து கொள்ளே. 79

**பொருள் :—** (சேத்துமத்தின் குறிகுணங்களாவன) உடல் வியர்க்கும், நாவழுவழுத்துக் காணும்; சிறுநீர் கனத்து வலியுடன் இறங்கும், இதை நோயாளியைக் கேட்டறிந்து கொள்வாயாக.

## பசித்தபோது உணவும் நீர்வேட்கை கண்டபோது நீரும் அருந்தாதவர்க்கு நேர்வது கூறல்.

தாக முறும் பசியால் தாமுண்ணு ராமாகில்
கோதருநீர்த் தாகத்தாற் கொள்ளாராய்ப்—போத
மிரத்தந் தணக்குடிக்கு மின்பவிடாய் போக்கும்
பருத்த விழிகுருடாம் பார். 80

**பொருள் :—** பசித்தபோது உணவும், தாகங்கண்ட உடன் நீரும் பருகாமல் இருப்பவர்க்கு, உணர்வை (அறிவை)யும் இரத்தத்தையும் குன்றச் செய்யும் (வற்றச் செய்யும்). இன்ப உணர்வும், நுகர்ச்சித் திறனும் அழியும்; விழி குருடாகும்.

வலியார் வாத மதிகபித்தம்
வருத்தும் சுரங்க ளெல்லாம்
கலியார் மேலே கருக்குக்
கடிய வியாதி யிவையென்று

நலியா வண்ண நாமுரைப்போம்
நம்பிக் கேளீ ரெல்லாரும்
பலியா தென்றே யென்சொல்லைப்
பலகாற் பேச வேண்டாமே. 81

**பொருள் :—** வலிமை பொருந்திய வாதம், மிகுதியடைந்த பித்தம் இவைகளால் தோன்றும் சுரங்களைப் பற்றியும், கடின நோய்கள் இன்னின்ன என்றும் உலகோர் நோய்க்குப் பலியாகா திருத்தல் பொருட்டு நாம் கூறியுள்ளவைகளை நம்பிக்கை வைத்துக் கேட்டுணர்வீராக. என் சொற்கள் பலியாதது (உண்மையற்ற பயனற்ற உபதேசம்) என்று பழித்துப் பேசவேண்டா மென்றவாறு.

**வளி அழல் கலப்புநாடி (வாதபித்தம்)**

கொள்ளுக வாதம் ரண்டும்
பித்தமு மொருக்கா லோடிக்
கள்ளமா யுதரம் விம்மிக்
கனக்கவே வாயுக் கொள்ளுந்
தெள்ளுறக் கோதை யார்பாற்
சிந்தனை மிகவுண் டென்றும்
ஒள்ளிய வாத பித்தத்
தொந்தமென் றிசைக்க லாமே. 82

**பொருள் :—** வாதம் இரண்டு மாத்திரையும் பித்தம் ஒரு மாத்திரையுமாய் தொந்தித்த போது வயிற்றுப்புசம் காணல்; வயிற்றில் வாயு சேர்ந்து கனத்திருத்தல்; பெண்ணிச்சைமிகல் என்ற குறிகுணம் காணுமென்க.

**அழல்வளி தொந்தம் (பித்தவாதம்)**

இசைந்திடும் பித்தம் ரண்டும்
வாதமொன் றெழுந்து காட்டில்
பசந்திடும் புளிப்பு வேண்டிக்
காடியே தவனம் பற்றும்
இசைந்திடு முஷ்ண முண்டாம்
இவையிவை மிகவுந் தோன்றில்
வசந்திடும் பித்த வாதத்
தொந்திப் பென்றிசைக்க லாமே. 83

பொருள் :— பித்தம் இரண்டு மாத்திரையளவும் வாதம் ஒரு மாத்திரையளவும் கூடி ஓங்கிக் காட்டினுல் உடலில் பசுமை நிறங்காணும் ; புளிப்புச் சுவையை விரும்பும் ; காடியையும் இன்ப மாகப் பருகும் ; வெம்மை சேர்ந்து உடலில் கொதிப்புக் காணும் என்றறிக.

### வளிஐயத் தொந்தம் (வாத சேத்துமம்)

உரைத்திடும் வாதம் ரெண்டுஞ் சேத்தும மொன்று மாகில்
வருத்தமாய் வயிற்றைக் கட்டி யுப்பித்து வலித்துக் காட்டும்
அருத்திய வயிறு நொந்து பசியற்ப மில்லா தாகும்
துரைத்திடும் வாத சேத்துமத் தொந்திப்பென் றியம்பு மாதே. 84

பொருள் :— வாதம் இருகூறும், சேத்துமம் ஒரு கூறுமாக தொந்திப்படைந்து ஓங்கினுல் வயிற்றில் வலி, உப்புசம், (மலம் நீர்க்) கட்டுகள் காணும் ; அற்பப் பசியோ பசியின்மையோ காணும்.

### அழல்ஐயத் தொந்தம் (பித்த சேத்துமம்)

மாதராய் பித்தம் ரெண்டுஞ் சேத்தும மொன்ற தாகில்
தீதுடன் தலைவ றண்டு பிடரிநொந் திடுமே லெல்லாம்
பேதமாய் வயிறெ ரிந்து மந்தமும் பெரிது காட்டுங்
கோதிலாப் பித்த சேத்துமத் தொந்திப்பென் றறியுந் தானே. 85

பொருள் :— பித்தம் இருகூறும் ஐயம் ஒருகூறும் கூடி ஓங்கில் தலையில் வறட்சி காணல், பின்கழுத்து நோதல், உடலின் மேற்புறமெல்லாம் நோதல், வயிற்றில் எரிச்சலும், பசி, செரிப்புத் தன்மை இவை மிகவும் மந்தப்படல் என்னுங் குறி குணங்கள் காணும்.

### ஐயவளித் தொந்தம் (சேத்தும வாதம்)

தானெழுஞ் சேத்தும மிரண்டும் வாதமு மொன்ற தாகில்
மானனுய் சன்னி கொள்ளுந் தலைநோவாய் வாய்தித் திக்கும்
போனகஞ் செரித்த ருது பொருந்தவே யுறக்க மில்லை
ஆனதோர் சேத்தும வாத தொந்தமென் றறிந்து பாரே. 86

பொருள் : — சேத்துமம் இரண்டுபங்கும் வாதம் ஒருபங்கு மாகத் தொந்தித்தால் தலைநோய் உண்டாகும்; வாய் இனிக்கும் ; உண்டி செரித்திடாது ; தூக்கம் வராது. இது சேத்தும வாதத் தொந்தமென்பதை அறிவாயாக.

## ஐயஅழல் தொந்தம் (சேத்தும பித்தம்)

பாரித்த சேத்துமம் ரெண்டும் பித்தமு மொருக்கா லோடில்
கூரித்துக் குளிர்ந்து கூசி வயிறது மிகக்கு ழம்பில்
நேரொத்தே யுறக்க முண்டா யுழலையு நெருங்கிக் காட்டுஞ்
சீருற்ற சேத்தும பித்த தொந்திப்பாந் திருவி னல்லாய். 87

**பொருள் :—** பெருகிய சேத்துமம் இரண்டு பங்கும் பித்தம் இரு பங்கும் தொந்தித்து நாடி நடந்தால், மிக்க உறைப்பாகக் குளிர்தல்; மயிர்க் கூச்செறிதல்; வயிற்றில் ஒருவகைக் குழப்பம் காணல்; சதாகாலம் தூக்கம் ஏற்படல்; எரிச்சல் உண்டாதல் ஆகியவை குறிகுணங்களாகும்.

## வளிஅழல் நாடி நடை (வாத பித்தம்)

நல்லதோர் வாத பித்தங் கூடிறு லிரண்டு நாகம்
புல்கிய பிணையல் போலப் பொருந்திடும் வாத சேத்தும
மல்லவே மஞ்ஞை போல அம்பென விரைந்தே யோடுஞ்
சொல்லிய வாதபித்த சேத்துமந் தொந்தித்தால் பிள்ளை யட்டை

**பொருள் :—** வாதபித்தம் தொந்தித்த போது நாடியானது இரண்டு நாகங்கள் கூடும் போது பிணைந்து கொண்டுள்ளதுபோல நடக்கும். வாத சேத்துமத் தொந்த நாடி மயிலைப்போல நடையுள்ள தாகும். வாத பித்த நாடி அம்புபோல விரைந்திடும். சேத்துமம் தொந்தித்தால் அட்டையைப் போலவும் பிள்ளைப் பூச்சியைப் போலவும் ஓடும்.

அட்டையாய் வாதந் தொப்புள் ஆயிடு மய்ய மேலே
இட்டநால் விரலில் பித்த மிகுந்திடு மியல்ப தாக
மட்டமாங் குழலி னுளே மார்பினி லிடமாய் வைகுங்
கட்டளை யான சேத்துமங் கருத்தினில் மூன்று காணே 89

**பொருள் :—** வாதத்தின் இருப்பிடம் நாபித்தானம். நாபிக்கு நான்கு விரல் மேலே பித்தத்தின் இருப்பிடமாகும். மார்பின் பொதுப் பாகத்தில் உறையும் கபம். இது இயல்பான முறையாகும்.

காணுமிவ் வாத பித்த மிருப்பிட மறிந்து கொண்டு
பூணுறு பித்த சேத்துமத் திருப்பிடத் திலாத போது
நாணுறு சேத்து மந்தான் கண்டத்தை நணுகு மப்போ
பூணியே குறுகு றுக்கு முயிர்பிழைக் கரிதென் றெண்ணே. 90

**பொருள் :—** வாத பித்தங்களின் இருப்பிடங்களை நன்கு ஆய்ந்து அறிந்து கொண்டு, பித்தமும் கபமும் தத்தம் இருப்பிடங்களில் இல்லாத காலத்தில் கபமானது கழுத்தை அடைந்த போது தொண்டையில் குறுகுறு சத்தம் உண்டாகும். உயிர் பிழைத்தல் அரிதாகும் என்று அறிவாயாக.

## அவத்தையின் இயல்பு

எண்ணிய அவத்தை சொல்வோ மினியகை மார்பு மூக்கு
நண்ணிய செவியொ டுந்தி நலம்பெறக் குளிர்ந்த தாகில்
திண்ணமா யுச்சி யங்கி யாயிடிற் சேத்தும மோடில்
மண்ணினில் கடிகை யஞ்சில் மரணமென் றறிந்தி டாயே. 91

**பொருள் :—** கைகள், மார்பு, மூக்கு, செவிகள், நாபி ஆகிய இடங்கள் குளிர்ச்சியடைந்தும் தலையின் உச்சிப்பாகம் மிக்க கொதிப்பாகவும் காணப்படின் அந் நோயாளி இந் நில வுலகில் ஐந்து நாழிகைப் பொழுதில் இறப்பான் என்றுணர்க.

அறிந்த பித்தம் அமர்ந்துவாத சேத்தும மதிக மாகில்
நிறைந்ததோ ரவத்தை தானும் நேர்பட வெடிப்பாய்ப் பேசுஞ்
சிறந்ததோர் முகம் வெளுத்து மார்பது துடிபோற் செய்தால்
மறந்துநற் கடிகை தொண்ணூ றளவிலே மரண மெய்யே. 92

**பொருள் :—** பித்த நாடியின் வன்மை குறைந்து வாத சேத்தும நாடிகள் விரைந்தால், படபடத்த பேச்சு உண்டாகும்; முகம் வெளுத்துக் காணும்; மார்பு துடிப்பின் வேகம் உடுக்கின் தாள பேதம் போல விரைந்திட்டால் தொண்ணூறு நாழிகையில் மரண ஏற்படுமென்றறிக. இது உண்மையாம்.

மெய்யது பகல்வெ துப்பா யிரவுதா னுழலை மேவி
அய்யது நாவ றண்டு யதிகமாய்ச் சேத்து மங்கள்
துய்யதோர் வயிறு நொந்து மலங்கட்டித் தலைசு ழன்று
வெய்ய கண் பரபரத்து விழிக்கி னுளிரண்டிற் சாவே. 93

**பொருள் :—** பகலில் உடல் வெதும்புதலும் இரவில் அதிக வெம்மையுடன் எரிவும் நீர்வேட்கை உண்டாதலும் நாவின்வறட்சி காணுதலும் (அடிக்கடி நீர் அருந்திய போதிலும் நாவறட்சி காணல் என்பது குறிப்பு) கோழை தொண்டையில் அதிகரித்

தலும் சேத்தும நாடி மிகைப்பட்டுக் காணுதலும், மலக்கட்டு, வயிற்று நோக்காடு காணுதலும், தலைச் சுற்றல் காணலும், கண்ணில் ஒரு வேட்கை உணர்வுடன் பரபரவென்று விழியைச் சுழற்றிப் பார்த்து இனம் புரியாது விழித்தலும் ஆகிய குறிகள் கண்டால் இருதினங்களிலே இறப்பான் என்பது திண்ணம். ஈற்றேகாரம் தேற்றப் பொருளில் வந்துள்ளது.

சாவுறு முதல வத்தை பிணநாறுந் தக்க ரண்டில்
மேவுநல் லவத்தை யோடு வேற்றுமை பலவும் பேசும்
சீவன்மூன் ரும வத்தை தெளிவறக் கலங்கும் நாலில்
பாவமா யிளைப்பி ளைக்கும் அஞ்சினில் முகடு பார்க்கும். 94

பொருள் :— இது முதல் இரு பாடல்களில் இறப்பவனுக்கு உண்டாகும் அவத்தைகளைக் (இடர்ப்பாடுகள்) கூறுவர். முதலாம் அவத்தை உடலில் பிணநாற்றம் காணல். இரண்டாம் அவத்தை இயல்புக்கு மாறுன பேச்சுண்டாதல். மூன்றும் அவத்தையில் புத்தித் தெளிவு மாறும் (கலக்கம் காணும்), பேச நாவெழாது. முகத்தோற்றம் முதலானவை உள்ளக்கிடையை வெளிப் படுத்தும் பாவங்காணல். உடலில் குறிப்பிடத்தக்க இளைப்புக் காணல் நான்காம் அவத்தையாம். ஐந்தாம் அவத்தை என்பது உச்சி முகட்டைக் கண்கொட்டாது பார்த்தலாம்.

பாராகு மாரு மவத்தை உடலது குளிரும் பண்பாவேர்க்கும்
ஏழா மவத்தை சொறது மெட்டி லார்க்கும் கண்பஞ் சாடும்
ஓன்பதா மவத்தையில் வெளுவெளுக்கும் தோராகு மாருயிர் போம்
பத்தா மவத்தையிற் சொல்லுங் காலே. 95

பொருள் :— உடலின் இயல்பான வெம்மை போய்ச் சில்லிடல் ஆரும் அவத்தையாம். உடல் முழுதும் மிக்க வியர்த்தல் ஏழாம் அவத்தையாம். கண்பஞ்சடைவது எட்டாம் அவத்தை. ஒன்பதாம் அவத்தையில் உடல் மிக்க வெளுத்திடும். பத்தாம் அவத்தையில் ஊசலாடிய உயிர்போம் (இப்பாடல் மூலப்படியில் மிக்க சேத முற்றிருக்கிறது. ஆயினும் மேற்படி பொருள் பயக்கின்றது).

இயக்கமே யற்ப மாகும் எழுந்துமே யிருக்கொட் டாது
மயக்கமுந் தியக்கந் தானும் வறண்டு நாவுடம்பு வேர்க்கும்
கயற்கண்ணி ரருவி சோரக் கபமிரைந் திரைக்கு மாகி
துயக்கவே போவா ரென்று உரைத்தன ருண்மை நூலோர். 96

**பொருள் :—** நடமாட்டங் குறைதல், எழுந்து உட்கார இயலாத்தன்மை, சதா மயக்கமும் திகைப்புங்காணல், நாவறண்டு உடல் வியர்த்தல், கண்ணீர் காரணமின்றி மிக்க வடிதல் (அருவி போல வடிதல் என்பது மூலபாடம்), கோழையானது தொண்டையில் தங்கி வெளிவராமலும், உட்புகாமலும், மூச்சுக் காற்று ஓடும் போது மிக்க ஒலிசெய்து கொண்டும், மூச்சுத் தடுமாற்றம் விளைந்து கொண்டும் இருத்தல் என்ற குறிகுணங் கொண்டுள்ளோர் இறப்பர் என்று உண்மையான நூலறிவு படைத்தோர் கூறுவர்.

### சுவாச நிலை

மூலா தாரந் தன்னில் மூண்டெழு மசைவே தோன்றி
மேலிடை பிங்க லைக்கு மேற்கொண்டு விரவி நாகந்
தூலஞ்சூக் கிஷத்தைப் பற்றி சுவாதியெழும் முன்னூற் றைம்பது
சாலவே புன்னிரண் டங்குலந் தோன்றி டும்தகை சிறந்தே 97

**பொருள் :—** உயிர்ப்பு (சுவாசம்) மூலாதாரத்தில் முதற்கண் அசைவு ஏற்பட்டுத் தோன்றி மேலெழுந்து இடை பிங்கலை, சுழிமுனை என்று கூறுநின்ற நாடிகளாய்ப் பரவும். ஒரு நாழிகைக்கு முன்னூற்றைம்பது காணும். இது புன்னிரண்டங்குலம் தோன்றிடும்.

தகையுடன் பன்னிரண்டங் குலத்தினிலே நாலும் ........
பகையுறப் பாழ்போ மெட்டும் பரிவுடன் மீளு மீதாற்
றுகையொரு நாழி கைக்கே சுவாதியெழு முன்னூற் றைம்பதும்
வகையுறு மெழுநூற் றிருபதாகி வாழ்ந்திடும் போதி ரண்டில். 98

**பொருள் :—** இந்த உயிர்ப்பில் மூன்றில் ஒரு கூறுகிய நான்கங்குலம் பாழ்படும். மூன்றிலிரு கூறுகிய எட்டங்குலம் உடலுக்குறுதி பயக்க உடலில் நிலைத்திருக்கும் ஒரு நாளில் (இருபொழுது = பகல் இரவு என்னும் இரண்டென்க).

வளர்கதிர் மாலை யென்ன வயங்குநா ளொன்றி னுக்குத்
தளர்வுட னிருபத் தோரா யிரத்தறு நூற தாகி
எழுவது மேழா யிரத் திரு நூறும் பாழாய்
விழுவது மீளும் பன்னி லாயிரத் துநானூ றென்றே. 99

**பொருள் :**— இருபத்தோராயிரத் தறுநூறு உயிர்ப்புகள் தோன்றும். ஏழாயிரத் திருநூறு உயிர்ப்புகள் பாழாகும். மீதியுள்ள பதினாலாயிரத்து நானூறு உயிர்ப்புகள் மீளும் தன்மை உடையனவாம்.

ஏயநற் பிராண நாடி ஏற்றிடும் சுவாச மீது
மேயதோ ரங்க நோவாய் விழுந்துபோ தடைந்து செய்யுந்
தாயமாஞ் சுவாசஞ் செப்பிற் தந்திரந் தத்தண சின்ன
மாயுதோர் மகவான வூக்க மென்றிவை ஆய்ந்துபாரே. 100

**பொருள் :**— உடலில் நல்ல பிராண நாடியானது உயிர்ப்பை (சுவாசத்தை) ஏற்று நடத்தும் என்க. உடலில் நோய் கண்டபோது பிராணநாடி தளர்வுற்று விழுங்காலத்தில் அது காட்டுங் குறிகுணங்களை ஆய்ந்து கூறுமிடத்து முதலாம் சுவாசத்தில்,

பேர்பெறு சூத்தி ரந்தான் பிணையெழுஞ் சூதாம் வாதஞ்
சாரிரண் டாஞ்சு வாதம் தகைமத்தின் தக்கை சாற்றில்
ஓர்பல விரவி னோடி விளைந்திடில் போலி ளைக்கும்
நேர்பட நரம்பி ரண்டும் நெற்றியிற் புடைத் திருக்கும். 101

**பொருள் :**—உடலில் (சூத்திரம்) தோடங்களின்பிணைப்புக் காணும். சூது விளைக்கும் (தன்மை கெட்டதான) வாதம் பிராண நாடியில் பிணைந்திட்டால் இரண்டாம் வகைச் சுவாசம் காணும். அதன் தகைமையைக் கூறுமிடத்து ஒருவன் விரைந்து ஓடினால் உண்டாகும் இளைப்புப் போலவும், நெற்றி நரம்புகள் இரண்டும் புடைத்துக் கொண்டும் காணப்படும்.

புடையுறு விலாவி ரண்டும் பூருபூ ரெனவெ டுத்துத்
திடமுறு நெஞ்சு நொந்து உச்சியுஞ் சிறிது நோவாய்
கடியுறு மிரும லுண்டாய்க் கனன்றுவாய் மிகச்சு ழன்று
முடிவுறு தாக முண்டாய் மூக்குநீர் பாயுந் தானே. 102

**பொருள் :**— விலாப்புறம் இரண்டும் விரைந்து பக்கவாட்ட அசைவு கண்டு தூக்கித் தூக்கிப் போடும். மார்பிலும் நெஞ்சிலும் நோவுண்டாகும். உச்சித்தலையில் சிறிது வலிகாணும். இருமல், தாகம் இவை உண்டாகும். வாயில் சூடு மிகவாய் நாச்சுழலும். மூக்கில் நீர்வடியும். உடல் விண்ணில் போவது போன்றிருக்கும். இவை இரண்டாம் சுவாசத்தின் குறிகுணங்கள்.

மின்னநீ ருடல்ப றக்கு மீவையிரண் டாஞ்சு வாதம்
பின்னுமூன் ருஞ்சு வாதம் சின்னமு மருத்து மாறுந்
தன்னில்நெட் டுயிர்த்து மூக்குப் பூட்டிலுந் தானெ டுக்கும்
மின்னிங்கால் பொருத்துத் தோன்று மிடற்றிலே நோவுண்
[டென்றும் 103

**பொருள் :**—மூன்றுஞ் சுவாசத்தின் அடையாளங்களாவன: காற்றின் ஓட்டம் மாறும். நெட்டுயிர்ப்புக் காணும். மூக்கின் தசைப் பாகம் தூக்கிப் போடும் (பக்கவாட்ட அசைவு காணும்). கழுத்தில் வலி உண்டாகும்.

தோன்றுங்கீழ் வயிறு விம்மித் துகளறு மலச லாதி
ஊன்றியே கழிய வென்ன வோங்கிடக் கழிய வொட்ட
வான்றவே கண்க லங்கி வளத்துகீழ் நோக்கிப் பார்க்கும்
போன்றொரு கண்சி வந்து புரிதல்மூன் ருஞ்சு வாதம். 104

**பொருள் :**—கீழ்வயிற்றில் உப்பல் காணும். மலசலம் கழிக்க முயற்சி செய்தாலும் அவைகளைக் கழிக்க வொட்டாது. கண்ணில் கலக்கமும், கீழ்நோக்கியது போன்ற பார்வையும் உண்டாகும். கண் சிவந்திடும். இது மூன்றும் சுவாசத்தின் தன்மை.

வாதிக்குஞ் சுவாத நாலில் வரியவை மகவான் மீது
காதிமற் போர்பு ரிந்து கனக்கவே யிளைத்தாற் போலத்
தீதுறு சேத்து மந்தான் செறுமியே குறுகு றுக்கு
மோதுகாற் சீறிப் பார்க்கு முதறியே விழுமென் றுற்று. 105

**பொருள் :**— நான்காம் சுவாசத்தில், சேத்துமமானது சீற்றங் கொண்டு சீறிப்பார்க்கும். நாடி படபடத்து நிலைகுலையும்.

உற்றுறை மனுட ரைப்போ லுடல்நெக்குங் குழிய வாங்கிப்
பற்றியே வாங்கு முள்ள மலஞ்சலங் கழிப்பாராகில்
குற்றமே நினைவு கூறிக் கூப்பிட்டால் போத மில்லை
சிற்றிடை மயிலே நாலாஞ் சுவாதமா மென்னச் செப்பே. 106

**பொருள் :**— உடல் உரம் தளரும்; குழைவு காணும்; இளைப்புக் காணும். தங்கியுள்ள மலமுஞ் சலமும் (தன் நினைவின்றிக்) கழிப்பாராகில் குற்றமாம் (தீதுண்டாம்-இறப்பர் என்பது குறிப்பு). நினைவு உண்டாக்கப் பழைய சம்பவங்களைக் கூறினாலும், கூப்பிட்டாலும் உணர்வதில்லை என்னும் குறிகுணங்கள் நாலாம் சுவாசத்தினது என்க.

செப்பிய சூத மஞ்சில் பேருக்க மென்னச் சேருந்
தப்புறப் பெருமூச் செய்துந் தடைக்கண்ணீர் தானே பாயு
மெய்ப்புறு கண்மூ டாதே மேல்நோக்கு மென்சீர் மாதே
மைப்பற விழிது டிக்கும் வாய்பல காற்பி தற்றும் 107

**பொருள் :—** ஐந்தாம் சுவாசத்தில் பெருமூச்சு உண்டாகும். கண்ணீர் தடையின்றித் தானுகவே பாய்ந்து ஓடும். கண்களை இமை மூடாது. பார்வை மேலே நோக்கும். விழியில் துடிப்புக் காணும். வாய் பலவாறு பிதற்றும்.

காலமிக் குணங்கள் சேரிற் கருதியே யொன்றுங் காண
மேலுரை தன்னில் மீளில் மீட்சையு மியம்ப மெய்தான்
சாலவே குளிர்த்தல் வெம்பல் தருகுளிர் விட்டா லுண்டோ
யேலவாய் கைத்தா லுச்சி யக்கினி யாக வெய்தல். 108

**பொருள் :—** இவ்வகைக் குறிகுணங்கள் சேர்ந்து காணும் காலமானது கண்டவிடத்து மீளுதலாவது அரிதென்க. இதனுடன் உடல் குளிர்தலும், வெம்பலும், வாய் கைத்தலும், உச்சி தீப் போலக் காய்தலும் கண்டால் மீளாதென்க.

## இறப்புக் குறி

வாத பித்த சேத்துமம் மருவி யொக்க வோடிடில்
ஆதரித்த சீவனுர் அலங்க ரித்தி ருந்திடில்
மேத மிக்க வாயுவும் மிதமி குத்த போதினில்
சூதை யொக்க நின்றிடுஞ்சு ரோணித மிக்க பித்தமே. 109

**பொருள் :—** வளி, அழல், ஐயம் இணைந்து இயல்புக் குத்தக நடந்ததானல் உயிர் நல்ல நிலைமையில் இருக்கும். வாயுவானது இயல்புக்கு விஞ்சி நடக்குமாயின் இரத்தத்தின் மேல் பித்தம் நின்று சூது (கெடச் செய்தல்) செய்திடும்.

பித்த வாத சேத்துமம் பிணங்கி யொக்க நின்றிடில்
மட்டு லாவு சீவனுர் மயங்கி யங்கு நின்றிடும்
எட்டு மொன்று மொத்தபோ திருந்த வித்த னஞ்செயன்
கட்ட வீழ்ந்த காரணங் கணக்க றிந்து தப்புமே. 110

**பொருள் :—** பித்தம், வாதம், கபம் ஆகியவை ஒன்றுக் கொன்று மாறுபட்டு இணைந்து ஓடிடில் உயிர்க்கு (சீவன் = உயிரோடிருப்பவன்) மயக்கம் காணும். ஒன்பது வாயுக்களும் ஒற்று

மையாய் மெய்யில் பணியாற்றிய போது இருக்குமிடம் தெரியாமல் இருந்த இந்தத் தனஞ்சயன் என்ற வாயு அதற்கிருந்த கட்டு திட்டங்களினின்று விடுபட்ட காரணம் அறிந்து கூறுவீராக.

மலங்கி நின்ற சீவனுர் வந்தி டும்ப ரிசெனில்
நிலங்க ளுந்து பித்தமும் நீதி யொத்த வாயுவும்
சலங்க லந்த தொன்றுமே தங்க ளிற்பொ ருந்திடில்
கலங்கி டாதிருந் திடுங் கண்டு கொள்ளு முண்மையே. 111

பொருள் :— மயக்கம் கொண்ட சீவனுனது பித்தமும், வாதமும், கபமும் இயல்பான நிலையில் பொருந்திடுமாகில், கலக்கம் தீர்ந்து நன்னிலையைப் பெற்றிடும்,

வண்மை யான வாதபித்த சேத்தும மருவி டில்
உண்மை யான மூவரும் ஓசைகெட் டடங்கு வார்
பொய்மெய் யாக வாழுமிந்தப் பூதலத்தி லுள்ள வர்
மெய்மெய் யான சீவனுர் விட்டிட விளம்பு மே. 112

பொருள் :— ஓங்கிய வாத பித்த சேத்துமங்கள் கூடிடில் உடலில் உள்ளதான முத்தோடங்களின் செய்கையால் இதயத் துடிப்பாலும் மூச்சாடுதலாலும், வாயிலிருந்து எருவாய் வரையுள்ள பெருநாடியானது தொழிலாற்றுதலாலும் காணும் ஓசையானது நின்றுவிடும். பொய் வாழ்க்கையை மெய்யென்று நினைத்து வாழும் இந்த நித்திய வாழ்வுள்ள சீவன் (உயிர் இறவாதென்க) உடலை விட்டிடும் என்றவாறு.

சொரிந்துமெய் சோர்ந்தி டாதே சோர்விழி சிவப்பே ருதே
வருந்துமெய் யுடல்நா ருதே வரிவிழி நீர்பா யாதே
கரிந்துநா வறண்டி டாதே கபமிரை யாதே யாகில்
வருந்தியே பரிகா ரஞ்செய் மாதுமை பாக ராணை. 113

பொருள் :— உடலில் அயர்வு காணுத முன்னரும், விழி சோர்ந்து செந்நிறம் அடையாத முன்னரும், தேகமானது (பிண) நாற்றம் கொள்ளும் முன்னதாகவும், விழிநீர்ப் பெருக்குக் காணும் முன்னரும், நாக்குக் கறுத்து வரள்வதற்கு முன்னதாகவும், தொண்டையில் கோழை செறிந்து ஒலி எழுப்புதற்கு முன்னதாகவும், அக்கறையோடு மருத்துவம் செய்வாயாக. இது உமை பாகரான சிவனுருடைய கட்டளையாம்.

## நீர்ப் பிரமேகத்தின் இயல்பு

தக்க தாரணி மானிடத் தோர்கள்கேள்
பக்க மாசலம் பத்திரு வகையுமே
நக்க நாயகன் நாயகிக் கேசொல
மிக்க நந்தி விளம்பி விதித்ததே. 114

**பொருள் :—** உலக மக்களே! கேட்டுக் கொள்வீர்களாக. இருபது வகை நீர்ப்பிணிகள் உண்டென்று சிவன் சிவைக்குக் கூற அதை (ஆங்கு அருகிலிருந்து கேட்டுக்கொண்ட) நந்திதேவர் கூறி அதன் குறிகுணங்களையும் முறைப்படி கூறினர்.

தானே பூருவ விதியதனுற் சாரும் பிணிக ளஸ்லாமல்
மானேர் விழியார் வேட்கையினல் வருந்தும் பின்னும் பசியாலே
தானே பொறுத்து உண்கையினல் தாகந் தன்னல் மிகச் சார்ந்து
தனே கமலம் புண்ணகிச் செய்யும் பிரமியச் செயல் தானே. 115

**பொருள் :—** பழைய வினைகாரணமாக நோய்கள் தோன்றும். அஃதன்றியும் பெண்கள்பால் கொண்ட விருப்ப மிகுதியாலும், இடைவிடாது வருத்தந்தரும் பசிப்பிணியைத் (உணவு உடனுக்குடன் கொடுத்து அடக்காமல்) தாங்கிக் கொண்டு காலம் தாழ்த்தி உண்பதாலும், நீர் வேட்கையையும் மேற்கூறியது போலத் தாங்கிச் சோர்வதனுலும் மூலாதாரக் கமலமானது புண்ணகிப் பிரமியநோய் காணும்.

கழியும் வாதம் நான்காலும் காயும் பித்த மாருலும்
சுழியும் சேத்துமம் பத்தாலும் சொல்லும் நாலஞ்சாய்த் தோன்றும்
வழியும் வாதம் நான்காமே மாரு தவிழ்தந் தன்னுலே
பொழியும் வாதம் நில்லாது போமே மருந்தைப் பொய்யெனவே.

**பொருள் :—** வாததோடத்தால் நான்கு வகையும், பித்த தோடத்தால் ஆறு வகையும், கபதோடத்தால் பத்துவகையும் ஆக (20) இருபது வகைப் பிரமிய நோய்கள் தோன்றும். வாதப் பிரமியம் நான்கும் மருத்துவத்தால் குணமடையா. மருத்துவத்தையே பொய்யாய் அடித்துவிடும் என்க.

இருமெய் யொறுக்கில் குறுக்கிறுவை யிரண்டா மிரண்டு வாதத்தில்
படுமே பித்த சேத்துமமும் பண்ணு மருந்தைப் பலித்திடுமே
நடுவே பித்த முதலாகில் நன்ரு யவிழ்தந் தப்பாமல்
விடுமே சேத்தும மருந்துதின்ருல் மீண்டு வருமே தப்பாதே. 117

**பொருள் :—** உடலைப் பத்திய வகையில் தண்டித்தால் (பத்திய ஊண்கொண்டு உடலுக்குத் துன்பம் தேடிக்கொண்டவர் களுக்கு) இருவகை வாதப் பிரிமியங்கள் மட்டுப்படும். பித்தப் பிரமியங்களும் கபப்பிரமியங்களும் செய்திடும் மருத்துவத்திற்கு அடங்கும். பித்ததோடம் முதன்மை பெற்றுக்கண்ட பிரிமியப்பிணி மருந்தால் தப்பாமல் குணப்படும். மீண்டும் வராது. கபத்தால் தோன்றிய பிரமிய நோய்கள் மருந்துண்ணும் காலத்தில் குணப் பட்டும் பின் சில காலத்தில் நோய் மீண்டும் இன்னல் செய்யும். இது தவருது.

வந்துமிக நொந்து வளரும் பிரமியத்தில்
முந்தியிரு வாத முளைக்குமே—பிந்தவே
அண்டமொடு சூலை யதனிற் பவுத்திரமும்
உண்டதுவா மென்றே யுரை. 118

**பொருள் :—** வாதப் பிரமியத்தில் மிக்க நோக்காடு உண் டாகி நோய் நாளுக்குநாள் வளர்ந்து அண்ட சூலை, பவுத்திரம் முதலிய நோய்கள் உண்டாகும்.

தப்பா திருபது பிரமியத்தின் குணத்தைச் சாற்றக் கேண்மின்னே
வைப்பாம் வாதம் நாலுக்கும் வகுக்கும் படியே தான்கேளாய்
ஒப்பா மாங்கிஷ மெய்யுருக்கி ஒளிசேர் மாப்போல் விளைந்துவிழுந்
தப்பாப் பிரமியஞ் சொல்லிலது தானே யுருக்கி விடுந்தானே. 119

**பொருள் :—** இருபது பிரமியங்களின் குணங்களைக் கூறு வேன் கேட்பாயாக. நான்கு வாதப்பிரமிய நோய்கட்கும் வகுக்கப் பெற்ற குறிகுணங்களைக் கேள். உடலிலுள்ள தசையை உருகச் செய்து மாவைக் கரைத்ததுபோல் நீர் இறங்கும். உடலை நாளுக்குநாள் உருகச் செய்துவிடும்.

மூளையு நிணமும் போல முதிர்ந்திளங் கள்ளுப் போல
நீளிய நரம்பு போல நீரிலே காணு மாகில்
ஆளெறி வாளும் வேலும் அனங்கனர் கணையுங் கோலும்
வாளையை வென்ற கண்ணய் வாதத்தின் சலமி தாமே. 120

**பொருள் :—** வாதத்தின் (பிரமிய) சலம் என்னும் நோயில் மூளை, கொழுப்பு, புதிதாக இறக்கிய கள்போலவும் நரம்புபோலவும் நீர் இறங்குமென்க. இப்பாடலில் கண்ட மகடூஉ முன்னிலையில் பெண்ணினுடைய கண்ணுக்குவமையாகப் பல கூர்மையான பொருள்களைக் கூறி மன்மதனுடைய பாணங்களையும் (பூக்களையும்) கூறிய நயம் காண்க.

ஆல வித்து ளடங்கி யெழுந்து
ஆலைப் போலத் தளிர்த்துறு பொய்யுடல்
வேலு முற்பவ மொன்றுள வாதலால்
மூல பித்திதரு மூன்று வியாதியே. 121

**பொருள் :—** ஆலின்வித்தில் அடங்கிய ஆலமரம் அவ் வித்து முளைத்து மேல் மரமாய் தளிர்த்து எழுமாறு போல் இப் பொய்யுடலானது தளதளவென வளரும் தன்மை உடைய இவ் வுடலில் பித்தத் தோடத்தால் ஆறுநோய்கள் (பிரமியுங்கள்) தோன்றுமென்க.

மூன்றி லுள்ள முதலது வாதமாம்
மான்ற பித்தமு மஞ்சேத்தும மாமென
ஏன்ற பல்பிணிக் கென்றிவை யத்துளே
கான்ற நீரிழி வின்குணங் காட்டுவாம். 122

**பொருள் :—** மூன்று என்றதான முப்பிணிகளிலே முதலாக நிற்பது வாதம், அடுத்தது பித்தம், மூன்றுவது கபம் என்று நாடிநிலை நவின்றவாரும்.

எல்லாப் பிணிக்கும் இடந்தரத்தக்கதாக இவ் வுடலை (பலங் குன்றச் செய்யுந்தன்மை வாய்ந்த) ஆக்கவல்லதான நீரிழிவின் குணத்தைக் காட்டுவாம்.

மம்மர்செய் வாத நான்கும் மாங்கிஷ முருக்கியென்றும்
மெய்ம்மைசெய் கரப்பா னென்றும் மிகுந்திடு துயன னென்றும்
இம்மையி லிடர்செய் தாது பிரமிய மென்ற ரோகம்
அம்மையின் வினையால் வந்தா லரியநா லுந்தீ ராதே. 123

**பொருள் :—** மயக்கந்தரத் தக்கதான வாத நீரிழிவு நோய்கள் நான்கும் உடலிலுள்ள இறைச்சிப் பொருளை (மாமிசத் தாதுவை) உருக்கி நீராக்கி வெளிப்படுத்துமென்க. ஆகையால் இந்நோயை மாங்கிஷமுருக்கி என்பர். கரப்பானென்னும் நீரிழிவு நோயுள்ளோர்க்கு உடலின் புறத்தே தோலில் கரப்பான் என்னும் மிக்க துயரைச் செய்யும்; நலிவும் காணும் போலும். துயனன் என்னும் இது இப்பிறப்பில் மிக்க துன்பத்தைத் தரவல்லதாம். தாதுப் பிரமியம் எனப் பெயர் பெற்றதானது தடித்த நரம்பு போல் நீர்த் துளைவழியாய் மலினங்களை வெளித்தள்ளும். இவை நான்கும் முற்பிறப்பின் வினைகாரணமாகத் தோன்றி இருக்கின்ற காரணத்தால் தீராது என்பர். நான்கு வாதப் பிரமியங்களின் பெயர்கள் (1) மாங்கிஷமுருக்கி (2) கரப்பான் (3) துயனன் (4) தாதுப்பிரமியம் என்றறியக் கிடக்கின்றன.

## மாங்கிச முருக்கியின் குறிஇயல்புகள்

முட்டு மாங்கிஷ முருக்கிலெண் மூளைபோல்
கட்டு மாங்கிஷங் கழிவுநீர் போல்மிகக் கழியும்
முட்டு மேயிளைத்து வாந்தியாம் வாய்மிக வற்றும்
கொட்டு கொள்ளிபோற் பரப்பிநீர் கொழுந்துவிட் டெரியுமே. 124

**பொருள் :—** எண்ணெய் போலவும் மூளை (என்புச் சந்து களிலுள்ள மூளை) போலவும், இறைச்சியைக் கழுவிய நீரைப் போலவும் நீர் வெளிப்படும். நீரின் அளவு மிகுதியாகக் கழியும் உடல் மிக இளைக்கும். எலும்பின் சந்திகள் (முட்டுகள்) இளைத் திடும். வாந்தி காணும். வாய் வரளும் நீர்விழும் போது நெருப்புக் கொட்டியது போல் எரிவு காணும்.

## கரப்பான் நீரிழிவின் இயல்பு

எரியுந் தீயில்நெய் வார்த்தாப்போ லெரிந்திடு மங்கஞ்
சொரியு நீரையே தூக்கியே பார்க்கில்நெய் தோன்றும்
பிரிய வூனையு முருக்குமுன் பேசிய கரப்பான்
பரிசி லாசையின் எனல்தகும் பார்ப்பதும் பழுதே. 125

**பொருள் :—** நீர் இறங்குபோது எரியுந்தீயில் நெய் ஊற்றி யாங்கு எரிச்சல் காணும். உடலில் சொரிகண்டு அதிலிருந்து நீர்வடியும். நீரைச் சீர்தூக்கிப் பார்த்தால் அதில் நெய் தோன்றும். இது ஊனை உருக்கி நீராக்கிக் கொணரவல்லது. இந் நோய் பிணி கொண்டோனுக்கு ஆசையின் அனலாகிய பரிசு எனப்படும். இந் நோயாளியைப் பார்ப்பதே தவரும்.

## தூயனன் நீரிழிவின் இயல்பு

பழுது செய்திடு மனிதனு மிகவுண்டும் பசிக்கும்
விழுதிரைநிரை பலவுமெய் மெலிந்திட லச்சையின்வீழ்க்கும்
பழுதுவேர் வைகோ மூத்திரம் நாறுமே நீராந் தலையி
லெழுதி னேன்வந்து பார்க்கிலுந் தயங்கடா விதற்கே. 126

**பொருள் —:** மனிதன் செய்திட்ட பழுதான வேலைகளின் காரணமாய்த் தோன்றியது. நீரும் வியர்வையும் கோமூத்திர வாடை வீசும். எவ்வளவு உண்டாலும் உடனே பசிக்கும், மெய் மிகமிக இளைக்கும், தலையில் எழுதினவனே (பிரம்மன்) வந்தாலும் இந் நோயைத் தீர்த்திட முடியாது. இதனைப் பிறி தோரிடத்தில் 'கோமூத்திரம்' என்றும் கூறுவர்.

## தாதுப் பிரமியத்தின் இயல்பு

இதளிப்புத் தாது பிரமியஞ் சவ்வுமே லெலும்பு
முதுவுநீர் தனிலோ நிணநாறு மொண் ணுதலார்
விதமும் வேண்டிடா மனைவியை வெறுத்திடும் போகம்
மதமி தெங்கினும் வாகட முரைத்தவர் பாரார்; 127

பொருள் :— உடலிலுள்ள சவ்வுகளும் எலும்புகளும் உருகியதால் வரும் நீர் கொழுப்பின் மணத்தை உடையதாய் இருக்கும். பெண்ணினத்தையே (மனைவியையும்) வெறுத்திடும். பெண் போகத்தைத் தள்ளிவிடும். மருத்துவர் எவரும் இந் நோயாளிக்கு மருத்துவம் செய்யமாட்டார் என்க.

தானே கரப்ப னென்னுமது தணலிற் சொரிந்த நெய்யாகும்
ஊனையுருக்கு மெய்யிளைக்கு முற்றுப் பார்த்தால் நெய்யுறையு
மானேர் விழியாய் நீகேளாய் மருந்தாலிதுதான் மீளாது
கோனே ஆயும் பாராதே கோமூத் திரத்தின் குணந்தானே. 128

பொருள் :— கரப்பான் என்னும் பிரமியத்துக்குத் தரும் மருந்தானது தீயிலிட்ட நெய் போலக் குணந்தரும். இது தசைகளை எல்லாம் உருக்கிவிடும். இறங்கிய நீரைச் சற்று வைத்துப் பின் பார்த்தால் மேலே நெய் உறைந்து மிதப்பது தெரியும். மருந்தால் இந்நோய் தீராது. 'இந்நோய் கண்டவன் பெரிய அரசனுயிடினும் இந்நோய் தீர்ப்போம் நிறை வருவாய் கிட்டும் என்று ஆசை கொண்டு' தீர்வு காணப்பார்க்காதே. கோமூத்திரத்தின் குணம்தான் ஏதோ என்றுல்,

குணத்தைக் கேட்கி லூண்கழியும் கோமூத் திரமே தானுறும்
பணத்தைச் சேதம் பண்ணுதே பரிகாரந் தான் பலியாது
உணத்து முடம்பைச் சமிப்பிக்கும் உண்ட போதே பசியாகும்
மணத்தைக் கெடுக்கும் இலட்சையில்லை வகுத்துப் பல்லும்
[விழுந்திடுமே. 129

பொருள் :— உண்ட உணவு உடனுக்குடன் செரித்து மிக்க பசியைத்தரும். நீர் பசுவின் சிறுநீரின் மணம் வீசும். இதைக் குணப்படுத்துவான் வேண்டிப் பணத்தைச் செலவு செய்யாதே. எம் மருத்துவமும் பயன் தராது. இந்நோய் உடலை உலரவைக்கும். எத்தகைய உணவையும் செரிப்பிக்கும். உடனே பசியும் உண் டாகும். இந்நோயாளியின் பற்கள் எதிர்பாராத விதமாய்க் குறித்த ாலத்துக்கு முன்னதாகவே விழுந்துவிடும்.

மெய்க்குந் தாதுப் பிரமியந்தான் வெள்ளை யெலும்புந் தோல்
[போலுந்
தக்குமிரட்டி நிணம் போலுந் தடியைப் போலுந் தான்விழும்
மைக்கண் விழியார் தனைவேண்டார் மடவார் தன்னை ஒழிந்தாலும்
நிக்கு மருந்தா லென்னுதே நெடுமா லறிய நிச்சயமே. 130

பொருள் :— தாதுப் பிரமியம் என்னும் நோயில் நீர்த் தாரை வழியாக வெள்ளெலும்பு, தோல், கொழுப்பு, தசை இவைகளைப் போல விழும். பெண் போகத்தை விரும்ப மாட்டார். அப்படி மடவார் சேர்க்கை ஒழிந்தவராய் ஒழுகினாலும் இந்நோய் மருந்தால் நிற்கும் (தீரும்) என்று கூறுதே. இது திருமாலின் ஆணையாம் என்க.

## மேகப் பிரமியத்தின் இயல்பு

நிச்சயமேகப் பிரமியந் தான் நிகரில் லானை மதம்போலும்
மெச்சநாறு முடல்வெதும்பும் மிகவே கடுப்பு மெரிப்புமுண்டாம்
வச்ச நீரைச் சட்டிதனில் வடித்துப் பார்த்த வுடன்வர்ணம்
பச்சை வெளுப்பு முண்டாகில் பாரும் பாருந் தீருமதே. 131

பொருள் :— யானை மதத்தைப் போல இறங்கும் நீரை யொத்த மேகப் பிரமிய நோயினர்க்கு நீரும், உடலும் மிகவும் நாறும். உடல் வேக்காடுண்டாகும். உடலிலும், நீர்த்தாரை யிலும் மிக்க வலியும் எரிச்சலுமுண்டாகும். சட்டியில் மேற்படி நோயாளியின் சிறுநீரை வைத்துச் சிறிது நேரஞ் சென்றபின் வடித்துப் பார்த்தால் அந் நீர் பச்சை, வெண்மை ஆகிய நிறங்கள் காணப்பெற்றால் அந்நோய் தீரும் என்க.

தீரும் பித்தத் தியல்பின வெதுமையே சிந்தை
யீரு மானையி னிளமத நீரையே ததித்துப்
பாரும் வெள்ளையும் பச்சையுங் காட்டுமே பலகால்
சோரு மெய் கடுத்திளைத்திடும் மருந்தினிற் சுகமாம். 132

பொருள் :— பித்த இயல்பினையுடைய நீர் மனவேக் காட்டைத் தரும். இள யானையின் நீர்போலவும், யானையின் மத நீர் போலவும், தயிர் போலவும், நெய் போலவும், வெண்மை யாகவும், பச்சையாகவும் இருக்கும். உடற் சோர்வும் கடுப்பும் காணும். உடல் இளைத்திடும். மருந்தால் சுகமடைந்திடும்.

ஆனஅல்லியின் குமரிநீர் நாலும்நீ ரறுக்கும்
ஊனு ருக்கிடும் கடுத்தெரித்துடலது நடுக்கும்
தேனெ னக்கவுளத் தாலென சிவந்துமஞ் சணிக்கும்
தானிறப்பனென் றுரைப்பிக்கும் மருந்தினல் தணியும். 133

**பொருள் :—** அல்லியின் மணத்துடனும், கற்றுழை மணத்துடனும் நீர் இறங்கும். தசை நாளுக்கு நாள் கரைந்து உடல் இளைத்திடும். உடலில்வலி, எரிவு, நடுக்கம் உண்டாகும். தேனைப் போலச் சிவந்தும், மஞ்சள் நிறமாகவும் நீர் இருக்கும். இறந்திடுவேனென்று பயந்து கூறவைக்கும். ஆனல், மருந்தினல் இந்நோய் தணிந்திடும்.

தணிவி லாதநீர்த் தாகமாம் போகமுங் கொடுக்கும்
மணிகொள் பல்விழும் பளிங்கொளி யாயழல் நாறும்
பிணிசெய் நீரெறும் பரிக்குமெய் வெதும்பிடும் பெருக
உணவு நன்புளிப் புவந்திடும் சம்பிரம முரைக்கில். 134

**பொருள் :—** அடங்காத நீர்வேட்கை உண்டாகும். பெண் போகத்தில் விருப்பம் மிகும். ஒளி மிகுந்த பற்கள் விழுந்துவிடும். நீர் பளிங்கு போலவும், தீநாற்றத்துடனும் இறங்கும். அந் நீரில் எறும்பு மொய்க்கும். உடல் வெதும்பி இளைத்திடும், பெருந் தீனியையும், புளிப்புச் சுவையையும் மிக்க விரும்பும்.

உரைக்கி லான்கடுப் புறுமுதல் நரம்படி வீங்கும்
பருக்கும் வீணைபோல் தெரித்திடும் பார்க்கில் மெய்யிளைக்கும்
திருக்கு மங்கைகா லயர்ந்துமெய் வெதும்பிடும் பேரை
விரிக்கி லேமனுப் பிரமிய என்னவே வேண்டும். 135

**பொருள் :—** உடல் கடுப்பும், நரம்பில் வீக்கமும் வீணையைப் போலத் துடிப்பும் காணும். உடல் இளைக்கும். கண், கை, கால்களில் ஓய்ச்சல் காணும். உடல் வெம்மை கொள்ளும்.

வேண்டும் படியா யுடம்பிளைக்கும் விழிமஞ் சணிக்கும் பல்லுவிழும்
தூண்டுந் தாழைச் சாறதுபோல் சுத்திக் கழியு மெரிப்பெடுக்கும்
தீண்டி முடங்கல் நாற்றம தாய்ச் செப்பும் சாத்தியமதன் குணத்தை
மாண்டி கொண்டு மருந்து கொடு மாருநோவு மாறுதற்கே. 136

**பொருள் :—** உடல் இளைத்திடும். கண்கள் மஞ்சள் நிறமடையும். பற்கள் உதிர்ந்திடும். தாழைச்சாறு போல நீர் (மணமும் நிறமும் என்க) இறங்கும். நீர் இறங்கும்போது இரைச்சலும், எரிச்சலும் காணும். தாழையின் நாற்றங் காணும்.

ஆறி லொன்று மிரத்தத்தி னங்க மிளைக்கும் விழிவேர்க்கும்
நாறும் புலால்போல் முயலிரத்தம் நண்ணும் வேர்க்கும் வெதும்பி
[விடும்
நீறுந் தெண்டித் தலைமூன்றி னுள்ளே சுறுக்குச் சுறுக்கென்னும்
மாறு மருந்தால் மருந்துகொள்ள மாட்டார்க் குரைக்க
[மாட்டோமே. 137

**பொருள் :—** ஆறில் ஒன்றுன இரத்த ஒழுக்கு நோயைக் கூறுவேன்: உடல் இளைத்திடும்; விழியில் நீர் மிகுதியாகக் காணும். நீர் முயல்ரத்தம் போல நிறமுடையதாயும், அழுகிய இறைச்சியின் மணமும் (புலால்மணம்) கொண்டு இறங்கும்; உடல் வெதும்பும்; நீர் இறங்கும் வழியில் சுறுக்குச் சுறுக்கென்ற நோய் காணும்; மருந்து உட்கொள்ள நோய் தீரும். மருந்து உட்கொள்ள மாட்டாதவர்க்கு இந் நோய்க்குரிய மருந்தை உரைக்க மாட்டோம்.

## அழல் சிறுநீரின் இயல்பு (அழல்=பித்தம்)

உதிரமுங் கடுப்பு முப்பு முவரொடு புளியுஞ் சாலச்
சதிர்பெறு நிணமே தோன்றுந் தலைசுழல் பித்த மாகும்
எதிரிலா மருந்து கொண்டே யிடைவிடா திருந்த போது
பொதுமக ளுள்ளம் போலப் போவது வருவ தாமே. 138

**பொருள் :—** செந்நீர் (இரத்தம்), கசப்பு, உப்பு, உவர் நிலத்து நீர் போலவும், புளிப்புச்சுவையும், நிணமும் நீரில் தோன்றும்; தலைச்சுற்றலும் பித்தம் மேலிடலும் இந்நோயின் குணங்களாம்; இடைவிடாது இதற்கான மருந்துகளை உண்டு வந்தால் நோய் நீங்குதலும் பின் மருந்தை நிறுத்தியவுடன் நோய் தோன்றுதலும் பொருட் பெண்டிர் உள்ளத்தின் தன்மை போல நிகழும்.

தானே வலியா மென்பதுவே தண்ணர் குமரிச் சாறதுபோல்
ஊனே யுருக்கு முடம்பிளைக்கும் ஓயாத் தண்ணீர்த் தவன
[முண்டாம்
தேனே கவிழ்த்தாப் போலிருக்கும் சிவக்குந் தன்மேல்
[மஞ்சணிக்கும்
தானே பிழையேன் காண்என்னுந் தரிக்கு மீதென்று
[கொள்ளீரே. 139

**பொருள் :—** சோற்றுக் கற்ருழைச் சாற்றைப் போல நீர் இறங்கும்; உடலின் தசைகளையெல்லாம் கரையச் செய்திடும்; உடல் இளைக்கும்; அடங்காத நீர்வேட்கை காணும்; நீர் சிவந்து தேனை ஊற்றியது போல இறங்கும்; உடல் நிறம் மஞ்சளாகும்; யான் பிழைத்திருக்க மாட்டேன் என்று கூறச் செய்யும்.

பாகச் சலத்தின் பிரமியந்தான் பளிங்குச் சுண்ணந் தானும்
தாக மெடுக்குஞ் சலத்தின்மேல் தங்கு மெறும்பு தானரிக்கும்
போகங் கெடுக்கும் புளிவிரும்பும் போதப் பல்லுந் தானுதிரும்
வேக வெதும்பு மழல்நாறும் விடாயு மிகவே யுண்டாகும். 140

**பொருள் :—** கொதிநீர்க் கஞ்சி போல நீர் இறங்கும்; நீர்ஒழுக்கு வெண்ணிறச் சுண்ணத்தின் மணமுடையதாகும்; நீர்வேட்கை மிகும்; நீர்தங்குமிடத்தில் எறும்பு அரிக்கும்; பெண்ணிச்சை குறையும்; புளியையும் புளிப்புச் சுவையையும் மிக விரும்பும்; பற்கள் உதிர்ந்திடும்; உடலின் சூடு மிகும்; நீரில் தீ நாற்றம் (கும்பி மணம்) உண்டாகும். (விடாய் = நீர்வேட்கை).

ஆகு மதுப்பிர மியமென்ப தாளைக் கடுக்குஞ் சலங்கழியும்
வாகு வீணை தெறித்தாப் போல் வலிக்குங் கைகால் அசந்துவரும்
சாகு நடக்க வொட்டாது தாக மிகுத்துப் பசியாகும்
ஆகந் தணலா யிருக்குமென்று அறிந்து முனிவர் சொன்னதுவே.

**பொருள் :—** மதுநீரொழுக்கு என்னும் பிணியில் உடல் நோக்காடு மிகுந்திருக்கும்; நீர்த்தாரையில் வீணைத் தந்திகளின் அசைவு போன்ற வலிகாணும்; கைகால்கள் சோர்ந்திடும்; நடக்கச் சத்து இராது; ஆகவே, நடை மட்டுப்படும்; பசிதாகம் மிகுத்து விடும். இவைகளெல்லாம் உடலில் சேர்ந்து இருக்குமென்று முனிவர் அறிந்து கூறியுள்ளார்.

வெல்லு மாசரித் தீநெளியு மிகுத்த நீரிற் குணங்கேளீர்
சொல்லுந் தாழை யிதழ்நிறம்போல் சுத்திக் கழியு மெரிப்
[பெடுக்கும்
நல்ல விழியு மஞ்சணிக்கும் நாறு முடங்கல் நாற்றமது
பல்லைத் திறக்கும் பசியெடுக்கும் பருத்த வுடம்பு மிளைத்திடுமே.

**பொருள் :—** தீயையும் வென்ற சூட்டுடன் இறங்கும் அழல் நீரொழுக்கின் குணத்தைக்கூறுவேன் கேட்பாயாக: நீரளவு மிகுந்தும், தாழையின் இதழின் நிறம் (மஞ்சள், வெளிறிய மஞ்சள் செம்மஞ்சள் என்னும் மூன்று வகை). கொண்டு மிக்க எரிச்சலுடன் இறங்கும்; விழி மஞ்சள் நிறமாகும்; தாழை மலரின் மணம் வீசும்; பல்லின் வலிவு குறையும்; மிக்க பசிஉண்டாகும்; பருத்த உடல் இளைத்திடும்.

விடுமே யபினி நிறமென்பான் விளிந்த தாகந் துயர்மெத்தப்
படுமே மேனி ரத்தம்போற் பருத்த விழியும் வெளுத்துவரும்
விடுமே வளிச்ச நாற்றமுடன் விக்கும் வெதும்பும் உடம்பிளைக்கும்
சுடுமே காமிய நுனியதனில் சுறுக் கென்றுடனே நீரிழியும். *143*

**பொருள் :—** அழல் நீரொழுக்கு நீர் அபினி (கரைத்த நீரின்) நிறத்தைப் போன்றிருக்கும்; மிக்க விடாயும் துன்பமும் உண்டாகும். உடல் இரத்தம் போலச் சிவந்திடும்; விழி வெளுத்துக் காணப்படும்; விளாம்பழத்தின் நாற்றத்துடன் விக்கல், வேக்காடு, உடல் இளைப்பு இவை காணும்; நீர்த் தாரையின் நுனியில் சுறுக்கென்று குத்தலுடன் நீர் இறங்கும்.

மஞ்சள்நீர் புளிநீர் நீல வண்ணமுங் கறுப்பு மாகும்
விஞ்சிய சாம்பல் தன்னை மிகக்கரைத் திடுநீர் போலாம்
எஞ்சிய வுதிரந் தானு மிறங்கிடு மிதனைக் காணல்
பிஞ்சணி தனத்தி னளே பித்தத்தின் குணமி தாமே. *144*

**பொருள் :—** மஞ்சள் நிறத்தண்ணீர், புளியைக் கரைத்தது போன்ற நீர், நீலவண்ணமும் கருநிறமுமுடைய நீர், சாம்பலை நீரில் கரைத்தது போன்ற நிறம்கொண்ட நீர் ஆகியவற்றோடு; இரத்தமும் நீர்த்தாரை வழியாக இறங்கும். இதனைப் பித்தத்தின் கூறுபாடுடைய நீரிழிவென் றறிவாயாக.

## ஐயச் சிறுநீரின் இயல்பு (சிலேத்துமம்)

அரும்புன லதுவே போலு மடிக்கரும் பதனிற் சாறும்
விரும்பிய தயிர்நீர் போலும் விறகுடன் வெந்த பாகும்
மருந்திசை மயத்தி னேடு மருவிய அப்புந் தள்ளுந்
திருந்துசுக் கிலமு முப்புஞ் சேத்தும மென்று செப்பே. *145*

**பொருள் :—** தூய நீரைப் போலவும், அடிக்கரும்பின் சாறுபோலவும், தயிரிலிருந்து கிடைக்கும் நீரைப்போலவும் காய்ச்சிய பாகு (வெல்லப்பாகு) போலவும், பசுவின் சாணத்தில் நீர் வார்த்துக் கரைத்த சாணநீர் போலவும், (மயம்=சாணம்) கள் போலவும், விந்து போலவும், உப்புக் கரைத்த நீர் போலவும் இறங்கும். ஐய ஒழுக்கு நோய்கள் (பிரமிய நோய்கள்) சேத்தும தோடத்தால் ஏற்பட்டதெனக் கொள்க.

நித்தமு முத்த மென்றும் நீரது மதுர மாகும்
பத்தியா யெடுத்துக் காய்ச்சிப் பருகிடில் வெந்நீ ராகும்
முத்தமா சலம்போல் தோன்றும் முதற்கடுப் பெரிப்பு மில்லை
நத்தறுஞ் சிறுநீர் தானும் நாறிடா தென்று சொல்லே. 146

**பொருள் :—** நித்தமும் முத்துப் போன்று இறங்கும் நீரானது இனிப்புச் சுவையுடையதாய் இருக்கும்; அதைப் பிடித்துக் காய்ச்சிப் பருகினுல் வெந்நீர் ஆகும்; நீர் விடும் போது வலியும் எரிச்சலும் காணு; நீரில் மூத்திரத்தின் மணம் ஏதும் காணப்படாது.

தேறுஞ் சிறுநீர்க் குணமுரைக்கில் சிக்கி விழுந்து கடுத்துவிடும்
நாறுங் கள்ளுப் போல்நுரைக்கும் நாளுஞ் சொரியு மிளைப்பு
[முண்டாம்
வேறுஞ் சிரங்கும் இருமலுமாய் மீறுஞ் சிலநோய் பல்லுதிரும்
காறு மிடறும் புண்ணுகும் கனத்த உடலும் மிளைத்திடுமே. 147

**பொருள் :—** ஐய ஒழுக்கு நோயினற்குச் சிறுநீர் சிக்குண்டது போலச் சிறுகச்சிறுக விழும்; மிக்க வலியுண்டாகும்; கள்ளைப் போல நுரையும் மணமும் காணும்; உடலில் தினவும் இளைப்பும் உண்டாகும்; சிரங்கும் இருமலும் காணப்படும்; சிலர்க்குப் பல் உதிர்ந்துவிடுதலும் உண்டு.

இடுமே சுத்தி நிறமுரைக்கில் இளைத்த பசுவின் னெங்கதுபோல்
படுமே நீரும் அப்படித்தான் பார்க்கும் போது நன்ருகக்
கெடுமே கடுப்பு மதனூடே கெட்ட மோரு நிறமாக
விடுமே கெடுவீர் அனுபோகம் வேண்டா மிதற்கு வேண்டாமே.

**பொருள் :—** கோழையைக் காறும் தொண்டையானது புண்ணுகும்; பருத்த உடல் இளைத்திடும்; பசுவின் நொங்குபோல நீர் விடும்; நீர்க்கடுப்புக் காணும்; சில சமயம் மோர் போலவும் நீர் இறங்கும்; இதனுல் கேடு உண்டாம். (நொங்கு=பசுவின் கருப்பையிலிருந்து வெளியாகும் ஒருவகை அழுக்கு)

வேண்டும் பிரமியக் குணமுரைக்கில் மேலே வெளுக்கு
[மடிதனிலே
மாண்டு மாவைக் கரைத்தாற்போல் மறுகிச் சிறுகி நீரிறங்கும்
பாண்டந் தன்னிற் பிடித்தக்கால் பலநி றமாகிச் சாலநிற்கும்
மீண்டு விடுமே மருந்துதின்றல் மீறித் திரும்பி வருமாறே. 149

**பொருள் :—** ஐய ஒழுக்கின் நீர், மேலே வெளுத்தும் அடியில் மாவைக் கரைத்தது போலவும் காணும்; நீர் மிகச் சூடாகவும் குறைந்த அளவிலும் இறங்கும்; பாண்டத்தில் அதைப் பிடித்து வைத்தால் பற்பல நிறங்காட்டும்; மருந்து தின்றல் குணமாவது போலத் தோன்றி மீண்டும் நோய் பழையபடியே இருக்கும்.

பிறகு வருமே நாள்பெருக்கப் பின்பு வெளுக்கும் வாய்நாறும்
நறவுங் கோழை போலிருக்கும் நல்ல பசிபோம் பல்லுதிரும்
இறுகுஞ் சுண்ணம் பின்நீரை யிசைந்த நாற்ற மதுநாறும்
வறுமந் தந்து கிளைத்திருக்கும் வருட மொன்றில் வருமாறே.

**பொருள் :—** நாள் செல்லச்செல்ல வாய் நாற்றம் காணும்; தேன், கோழைபோல நீர் இறங்கும்; நல்ல பசி தோன்றது; பல் உதிர்ந்திடும்; பொருள்களைத் தன்சேர்க்கையால் இறுகச் செய்யும்; கற்சுண்ணம்பு நீர் போலவும் நாற்றங் காணும்; மருத்துவத்துக்குச் சிறிது வயப்பட்டு ஓராண்டில் மீண்டிடலும் உண்டு.

வருகுஞ் சனிய னென்னுமது மலமாய்க் கழியுங் கால்மீறும்
பருகுந் தண்ணீர் தான்போதப் பசிக்கு மிகவே பலகாலும்
கருகு முடம்பு தானிளைக்குங் காலுங் கையுமிகக் கடுக்கும்
சொரியு மஞ்சள் நிறமாகத் தொடையு நடக்க வொட்டாதே. 151

**பொருள் :—** சனியன் எனத் தக்க இந்நோய் வருமானல் மிக்க மலங்கழியும்; உடலில் வாயு (வளிக்குற்றம்) அளவு கடந்து உண்டாகும்; நீர்வேட்கை அதிகமாகும்; நீரை மிகவும் பருகச் செய்யும்;மிக்க பசியெடுக்கும்; உடல் கருநிறமடையும்; மிக்க நோதலுடன் இளைப்புக் காணும்; காலும் கையும் மிக வலிக்கும்; நீர் மஞ்சள் நிறத்துடன் இறங்கும்; தொடை நடக்க இடந் தராது; நோதலும், பலக் குறைவு அடைதலுமாம்.

ஒட்டா ரிடத்து மண்ணென்று முவரைக் கரைத்தாற்
[போலிருக்கும்
மட்டார் குழலாள் தனைவிரும்பில் வயிற்றின் கீழே
[தான்வலிக்கும்
பட்டார் நீரி லடிதனிலே படரு முப்புத் தானுறையும்
மிட்டார் மருந்தைக் கண்டாக்கால் ஏற்கும் அசன மிறங்காதே.

**பொருள் :—** களிமண்ணையோ, உவர் மண்ணையோ கரைத்ததுபோல நீர் இறங்கும்; பெண் போகம் விரும்பினாலே அடிவயிற்றில் வலியுண்டாகும்; அத்தகைய நீர் விழுந்த இடத்தில் உப்பு உறையக் காணலாம்; இதற்கான மருந்து செய்தால் உணவு செல்லும்; ஆனால் நீர்ப்பிணி தணியாது.

மேகந் தானு மென்னுமது மீனைக் கழுவுந் தண்ணீர்போல்
வாகு படவேதாநாறும் வலிக்கு நீரா லுருக்கிமெத்தத்
தாக மெடுத்துப் பசிதாக்கும் சால வாகு மிதனாடே
சோகை வருமே நாள்தோறும் துவர்க்கும் வாயைத்
[துவர்க்குமதே. 153

**பொருள் :—** மேகநோய் என்னும் இப்பிணியில் இறங்கும் சிறுநீரானது மீன் கழுவிய நீர்போல மணமும் நிறமும் கொண்டதாக இருக்கும். அதிக நீர் இறங்குவதால் உடல் இளைக்கும்; மிகப் பசியும் விடாயும் காணும். இரத்தம் குறைவாய்க் காணப்படும்; சோகை நோய் காணும்; வாயின் சுவை துவர்ப்பாக இருக்கும்.

துவர்க்கும் ஈந்தின் மதுவென்னும் சுத்தக் கருப்பஞ் சாருகும்
எவர்க்கு மீள்வ தரிதாகும் இட்ட மருந்துக் கேற்றிருக்கும்
அவற்கும் பொருத்துப் பின்பெடுக்கும் அதன்மே லிருமல்
[சற்றுவரும்
பவற்கு மெவற்கு மாகாது பணத்தை யழிக்க வேண்டாமே. 154

**பொருள் :—** ஈந்தின் கள்போலவும், கரும்பின் சாறு போலவும் நீர் இறங்கும்; இந்நோயிலிருந்து தப்புவது அரிது; மருந்தை ஏற்கும் ஆயினும் நோயின் குறிகுணங்கள் தணியா. சற்றே இருமல் தோன்றும். எவர்க்கும் மருத்துவத்தால் பயன் இல்லை ஆதலால் பணத்தை வைத்தியத்துக்காகச் செலவு செய்ய வேண்டாம்.

ஓங்கிய சிலேத்து மத்தி லுத்தமத் தண்ணீர் போலத்
தேங்கிய தண்ணீர் தன்னைத் தெளிந்திடுங் காய்ச்சிப் பார்க்கில்
ஆங்கது வெந்நீர் நாறுங் கடுப்பெரிப் பில்லை யந்நீர்
தீங்குறு நாற்ற மில்லை யென்றனர் தீண்டு நூலோர். 155

**பொருள் :—** சேத்துமத்தின் நீர் தண்ணீர் போல இருக்கும். காய்ச்சிடில் தெளிந்த நீரைப் போல ஆகும். வெந்நீர் போல மணம் வீசும். நீர் இறங்கும்போது வலியும் எரிச்சலும் இரா. இத்தகைய நீரில் தீய மணம் ஏதும் இராது.

தீண்ட வரிய பித்தத்துநீர் திருக்கி யிழியுஞ் சீயும்விழும்
வீண்டு வழன்று உட்டிணமாய் வீழும் ரத்தங் கடுத்தழற்றும்
மீண்டு நீரே வீழாமல் மிகத் தண்டிற் கடுக்கு நீர்சிவக்கும்
மாண்டு விடுவே னென்றுரைத்து வலமுஞ் சலமுங் கூடவிழும்.

**பொருள் :—** பித்த தோடத்தால் கண்டதான நீரிழிவில் நீர் இறங்குங்கால் திருகல் வலி உண்டாகும். சீழ் விழும். மிக்க அழற்சி காணும். இரத்தம் விழும். சில நேரங்களில் நீர் இறங்காமல் நீர்த்தாரையில் வலியேற்படும். நீர் செந்நிறமடையும். இந் நோயால் இறந்திடுவேன் என்று நோயாளி கூறுவான். ஒரே நேரத்தில் மலமும் நீரும் வெளியாகும்.

கூடுஞ் சுராரி நீருரைக்கில் குத்தியிருமுந் தலைவலிக்கும்
பாடு மிடறும் புண்போலாம் பகரிற் கள்ளே போல்நாறும்
நீடுங் கடுக்கு மிளைப்புண்டாம் நிறைந்த சிரங்கா முடம்பிளைக்கும்
தேட வேண்டாம் பலவெல்லாம் சிறிய பருவந் தனைக்காணே. 157

**பொருள் :—** சுராரி யென்னும் நோயைக் கூறுமிடத்து, குத்தலான இருமலும், தலைநோயும்காணும். பாடத் தகுந்த குரல் வளை (தொண்டை) மிக்க புண்ணாகும். நீர் கள்ளைப் போல நாறும். நெடுநேரம் நீர்த்தாரையில் குத்தல் வலி உண்டாகும். சோர்வு உண்டாகும். உடலில் சிரங்குகள் தோன்றும். உடல் இளைக்கும்.

காணி புரட்டி வெளுத்தடியில் கரைத்த மாப்போல் கொடுமோர் [போல்
ஆணி கடுக்கும் பெண்போக மாகா நிறங்கள் பலபலவாம்
சேணிப் பணியி னிளநொங்கின் செயல்போல் வீழு மருந்தாலே
பேணிப் பார்க்கிற் குணமாகும் பின்னுஞ் சிலநாள் கழித்துவரும்.

**பொருள் :—** உடல் வெளுத்தும் மாவைக் கரைத்தது போலவும், புளித்த மோரைப் போலவும் நீர் இறக்கும். ஆண் குறியில் கடுப்புக் காணும். பெண் போகம் செய்ய இயலாது. சிலர்க்குப் பல நிறமாகவும் பனை நுங்கு போலவும் நீர்த்தாரை வழியாக விழும். நல்ல மருத்துவத்தால் குணம் காணும். மருந்தை நிறுத்திச் சிலநாள்கள் சென்றால் மீண்டும் இந்நோய் தோன்றும்.

கழியும் நீரில் வெளுத்திருக்கும் கத்தம் போல வழல்நாறும்
பொழியுஞ் சுண்ணம் பொடியதனைப் போலே யிருக்கும் பசியில்லை
விழியுங் கெந்த முளதெல்லாம் மிதமா மருந்தில் மீண்டந்த
வழியு மீளுஞ் சிலநாள்பின் மருந்து பாரார் ஞானியுமே. 159

**பொருள் :—** கழிகின்ற நீர் வெளுத்துச் சுண்ணப் பொடியைப் போல இருக்கும். கழுதையின் நீர்போல எரிப்பு நாற்றம் நாறும். பசி இல்லாததாகும். மருந்தால் நோய் மிதமாகும். மீண்டும் சில நாள்களில் தோன்றி நலிசெய்யும். ஆகையால், அறிவாளிகள் இந் நோய்க்கு மருத்துவம் செய்ய மாட்டார்கள்.

மேலே விளையு மடிக்கடிநீர் மிகவுங் கழியு மஞ்சள்நிறம்
போலே யிருக்குந் தாகமுண்டாம் போதத் தண்ணீர் பொசிப்பிக்கும்
காலோ டுடம்பு கைகடுக்கும் கடுகப் பசியாங் கடுநோயி
னலே வருந்தி யுடல் கடுக்கும் நன்றாய்க் குணத்தை யறிவீரே.

**பொருள் :—** நீர் மேன்மேலும் பெருகி அடிக்கடி இறங்கும். நீர் மஞ்சணிக்கும். மிக்க எரிவும், நீர்வேட்கையும் காணும். நீரை அதிகமாக உண்பிக்கும். மிக்க பசி காணும். கை, கால், உடம்பு எல்லாம் வலிக்கும். பசி தாளாமல் உடல் வருந்தும். இதன் குணத்தை நன்கு அறிவீராக.

அறியும் போது நீரிழிவில் அஃது வரைக்க ரைத்ததுபோல்
செறியுங் கீழும் புதைத்திருக்கும் செப்பில் வலிக்குங் கீழ்வயிறு
முறியும் பெறுவார் மெய்மாதர் முயக்குஞ் சிவந்து பொருந்தாது
குறியுங் குணமுங் கண்டறிந்து குடுத்த மருந்தால் குணஞ் செய்யும்.

**பொருள் :—** உவர் மண்ணைக் கரைத்ததுபோல் நீர் இறங்கும். அடிவயிற்றில் ஆழ்ந்துள்ளதான நீர்ப்பையில் வலிகாணும். கீழ் வயிறு முரிந்தது போன்ற வலி காணும். மாதர் சேர்க்கை ஒத்துவராது. இக் குறிகுணங்களைக் கண்டறிந்து மருத்துவம் செய்க. அது குணம் தரும் என்க,

செய்யுங் குணங்க ளேதனக்குச் சிறுக விழுநீர் மீன்கழுவிப்
பெய்யு நீரே போல்நாறும் பெருக வலிக்கும் பசியில்லை
நொய்யப் பசிபா மிகுந்து வரும் நோயு மதிக மாக வரும்
மெய்யும் சோக முண்டாகு மென்றே மேலோர் விதித்தாரே. 162

**பொருள் :—** மீன் கழுவிய நீரைப் போல நீர் நாற்றத்துடன் சிறுக விழும். நீர்த்தாரையில் பெருக வலிக்கும். சரியான பசி காணாது. சிறுத்த (நொய்ய) பசி உண்டாகி வருத்தும். நோய் அதிகமாகிக் கொண்டே வரும். உடலில் அபர்வு காணும் என்று மேலோர் மேற்படி குறிகுணங்களைக் கண்டறிந்து கூறியுள்ளார்.

விருப்பஞ் செய்யா சாத்தியினில் மேவுங் குணங்கள் சத்திருமும்
கருப்பஞ் சாறு போல்நீருங் கழியு மருந்துங் கொண்டாலே
திருப்பத் தினவெழுந் துட்டண மாகில் தீதெவ ராலுந் தீராது
திருப்பு மருந்தால் பொருளீய்ந்தே செய்வினை நீர்தான் செப்வீரே.

**பொருள் :—** அசாத்திய நீரிழிவினில், சிறு இருமலும், கருப்பஞ்சாறு போல நீரிறங்கலும் காணும். மருந்துகளை உட்கொண்டால் உடலில் மிக்கதினவு உண்டாகும். இவ்வண்ணம் சூடும் அதிகரித்தால் இந்நோயை யாவராலும் தீர்க்க இயலாது. இந்நோய்க்குப் பரிகாரமாக தானங்களெல்லாம் கொடுத்து ஏதாவது ஒரு சாந்தி (செய்வினை) செய்வீராக.

அரும்புன லதுவே போலு மடிக்கரும் பதனிற் சாறு
வருந்தயிர்ப் பன்னீர் போலும் வரைவுடன் வந்த பாகுந்
திருந்துசுக் கிலமே யாகுந் தினவுடன் சிரங்கு மாகும்.
இருந்தநீர் சலிப்புண் டாகு மியாக்கப மென்ன லாமே. 164

**பொருள் :—** அருமையான (சுத்த) நீரைப் போலவும், வேர்ப்புறக் கரும்பின் சாறுபோலவும், தயிர்நீர் போலவும், பாகைப் போலவும், சுக்கிலம் (ஆண்களுக்குக் கலவிக் காலத்தில் இறங்கும் வெண்ணீர்) போலவும், நீர்இறங்கி, நீர்க்கடுப்பும் உடலிலே தினவும் சிரங்குமுண்டானல் அது கபதோடத்தாலுண்டான பிரமிய (நீர்நலி) மென்று உணர்க. இந்நூலின் 136 ஆம் பாடலை இதனுடன் ஒப்புநோக்குக (மியம்=பிரமியம்),

## சுக்கிலப் பிரமேகம்

எரிப்பொடு கடுப்புத் தோன்றும் இரத்தமு முப்புத் தோன்றும்
நடுக்கிட உதிரஞ் சீயும் நரம்புபோல் நீரில் தோன்றும்
கருத்திலே விடாயுண் டாகும் கனலெரி யனலே வீசும்
சுருக்கவிழ் குழலி மாதே சுக்கிலப் பிரமேகந் தானே. 165

**பொருள் :—** எரிவும் வலியும் காணும். இரத்தமும் உப்பும் நீரில்வீழும். அச்சத்தால் மெய் நடுக்கம் உண்டாகும்படியாகக் குருதியும் சீழும் நீண்ட நரம்புபோலத் தோன்றும். மனத்தில் மிக்க வேக்காடு காணும். மிக்க வெப்பம் காணும். (கனல், எரி, அனல் எனக் கூறியது வெப்ப மிகுதியைக் காட்டவென்க). இக் குறிகுணங்களுள்ள நோய் சுக்கிலப் பிரமேகம் என்றறிவாயாக.

## வாதபித்த சேத்துமநீர் இயல்பு

துவர்ப்பொடு தித்திப் புண்டாந் தொடர்ந்து தொடர்ந் துப்புமாகும்
சடக்கெனப் போகி யாகுஞ் சலத்துடன் வெண்ணெ யாகும்
மடக்கொடி மடவாய் கேளாய் வாதமும் பித்த மய்யும்
நடத்திடு நாம நோய்கள் நற்றமி ழுற்ற வாறே. 166

**பொருள் :—** வாயில் துவர்ப்புச் சுவையும், இனிப்புச் சுவையும் உண்டாகும். அதைத் தொடர்ந்து உப்புச் சுவையும் உண்டாகும். விரைந்து போகம் மேற்கொள்வான். அப்போது நீருடன் வெண்ணெய் போலக் காணப்படும் இவ்வியல்பு வாதம் பித்தம், கபம் என்னும் முக்குற்ற நீர்மை என்க.

## வாத பித்தநீர் இயல்பு

பஞ்சுகொய் ததுவே போலப் பரந்திடுஞ் சலத்தி னுள்ளே
விஞ்சிடுங் கையுங் காலும் விலாவொடு வயிறு மார்புந்
துஞ்சிடுங் கண்ணு மூக்குஞ் சுவர்ப்பசு மையே யோடில்
வஞ்சிடுங் குழலி னுளே வாதமும் பித்தந் தானே. 167

**பொருள் :—** நீரில் பஞ்சைக் கொய்து பரப்பினதுபோலக் காணல்; கை, கால், விலாப்புறம், மார்பு, வயிறு, கண், மூக்கு, ஆகிய இடங்களில் பச்சைநரம்பு புடைத்துக்கொண்டு காணப் படல். வாதபித்தக் குற்றத்தால் உண்டான நோய் என்க

## மூத்திரக் கிரிச்சி இயல்பு

மூத்திரக் கிரிச்சிக் குணங்கேளீர் முடுகுந் துளிபாய் விழுஞ்சற்றே
ஆற்றித் தூரம் நடக்க வொட்டா தறுவை மருந்தா லற்றுவிடுந்
தூற்றி விளைவாய் விளைந்திருந்தால் துடையால் கடுகி விழுமென்று
மாற்றி மறுக்க வகை காண மனுவோர்க் கெல்லா முரைப்பீரே. 168

**பொருள் :—** மூத்திரக் கிரிச்சரத்தின் குணத்தைக் கேட்பாயாக. நீர் மிக்க சுடுகையுடன் சிறு துளித்துளிபாக மிக்க நொந்து விழும். சிறிது தூரம்கூட நடக்க வொட்டாது. இது அறுவை மருந்தால் குணமடைந்திடும். இன்னவாறுடையது இதன் தன்மை என்பதை மனிதர்கள் யாவர்க்கும் உணர்த்துவீராக.

கருப்பஞ் சாறு கண்டுகள்ளுக் கடிய மோருங் காண்பிக்கும்
சுருக்குச் சுண்ணஞ் சுக்கிலமுந் துவர்மண் ணதுபோல் தோன்றி
[வரும்
வருக்க முடனே காமியந்தான் மருத்து விழும்போல் மருகிடுங்காண்
நெருக்கு மூத்திரக் கிரிச்சியென்று நெறியோர் குறியாய்
[நிகழ்த்தியதே. 169

**பொருள் :—** கரும்பின்சாறு, கற்கண்டு, கள், மோர், காரமுள்ள சுண்ணம்பு, விந்து, உவர்மண், காவிமண் இவைகளைப் போல நீர்த்தாரையில் தோன்றிய வலியுடன் நீர்விழும். மிக்க வருத்தத்தைபும் வெம்மையையும் தரும் இந்நோயை மூத்திரக் கிரிச்சிரமென்பர்.

## சுரத்தின் இயல்பு

வாதசுரம் பித்தசுரம் வாழ்சேத் துமசுரத்தின்
வேதனைகள் தீர்க்கும் விநாயக—பாதி
மதியணியும் வேணியன்றன் மைந்தயிப் போது
துதிசெய்வேன் நின்ருள் துணை. 169 (அ)

**பொருள் :—** பிறையணிந்த சடையுடையவன் (சிவன்) மகனே! விநாயகனே! வாதசுரம், பித்தசுரம், கபசுரம் என்ற வெப்பு நோய்களைத் தீர்த்திடும் குணமுடையவனே! இப்போது (வணங்கித்) தோத்தரித்தேன் ஆகையால் உன்னுடைய பாதங்கள் எனக்குத் துணையாமாறு அருளுக.

பண்டியில் மலத்தி ஞலும் பலமறு சிரத்தை யாலும்
உண்டிதன் பொல்லாங் காலும் ஒண்டொடி வருத்தத் தாலும்
கண்துயி லாமை யாலுங் கடும்புன லோட்டத் தாலும்
மிண்டிய சுமைக ளாலும் வெதுப்புவந் துற்ற தன்றே. 170

**பொருள் :—** வயிற்றில் கழிவுப் பொருள்கள் (மலம்) சேர்ந்து கிடப்பதாலும், வலுவழிக்கும் கடும் உழைப்பினுலும் ஆகாரத்தின் தீங்குகளாலும், பெண் போகத்தில் வருந்துவதாலும், சரியானபடி தூங்காமையாலும், நீரின் விரைவுகளாலும், மிக்க சுமைகளைத் தாங்குவதாலும், வெப்பு நோய் உண்டாகியது.

உற்றவுடல் கனத்துநொந்து மந்தமாப் பசியில்லை யுறக்கந் [தானும்
மற்றமலத் தாலிவையேபின் சிரசு முழுக்கதனுல் வருகுந் தும்மல்
இற்றதலை நோவுறக்கங் கண்விழித்துப் பாராம லிதனு லென்னுஞ்
சற்றசனஞ் செரியாம லதிசாரச் சுரம் வாந்தி தானுண் டாமே. 171

**பொருள் :—** உடல் பளுவாகும், நோவு காணும், சுறுசுறுப் பின்றியும், பசித்தீ குறைந்தும், எப்போதும் உறக்க நிலை கொண்டும், வேறு மலினங்கள் பலவாலும், முழுக்காடலால் தும்மல் காணும். தலையின் பின் பாகத்தில் தலை தறியுண்டது போல நோவுண்டாதல், உறக்கம், கண் விழித்துப் பார்க்க இயலாத தன்மை, உண்ட உணவு செரிக்காமல் நின்று அதிசார வெப்பும், வாந்தியும் காணப்படும்.

உண்டேன் மாதுட ஞேரி ராவுதான்
உண்டியே கூடல்மேகச் சுரமென விளம்புவார்
பண்டுகண் விழிக்கிலுள்ளம் பதறியே சோபமாகும்
தண்டுநீர் நினைவு வோடி யிருமலுஞ் சளியுஞ் சன்னி. 172

**பொருள் :—** ஒரே இரவு மாதுடன் உண்டு அவளுடன் கூடிய (கலவி செய்த) காரணத்தால், உண்டான வெப்பு நோய்க்கு மேகச் சுரமெனப் பெயராம். உள்ளத்தில் (அச்சமுடன்) நடுக் கலும், உடலில் கனதி (வீக்கம்)யும், நினைவு மழுங்கி இருமல், சளி, சன்னி என்பனவும் தோன்றுமென்க.

சன்னியுமே காலுந்தா னுண்டா கும்பின்
இன்னமுஞ் சுரத்தினு லிருமி நெஞ்சுடைந்
தன்னமே அஸ்தியாஞ் சுரமு மாறலாம்
உன்னியே யிதன்குண முரைப்பன் மாரிசி. 173

**பொருள்:**— சன்னியும், வாதத்தின் சீற்றமும் உண்டாகும். சுரத்தின் மிகுதியால் இருமல் கண்டு நெஞ்சுடைந்திடும். என்பு வெப்பின் குறிகுணத்தை மகரிஷியாகிய அகத்தியன் கூறியவாறு கேட்க.

மாரிசி மொழிசுரம் வாதத் தின்குணம்
பேர்குளிர் பொருமுதல் பேசிட் டாரது
காரிடுப் புடல்சந்து கைகால்கள் கடுத்துநோம்
காரிநீர் போதவாங்குஞ் சரீரநீர் வீழுஞ்சற்றே. 174

**பொருள் :**— (மாரிசி=மகரிஷி) பெரிய முனிவரான அகத்தியர் கூறியாங்கு, வாதசுரத்தின் குணமானவை: பெரியதான குளிர், வயிறு ஊதல், இடுப்பு, உடல், என்புகளின் மூட்டுகள், கை கால்கள் இவ்விடங்களில் மிக்க குத்தல் வலி காணல், மிக்க நீர்வேட்கையாதல், தண்ணீரைப் பருகச் செய்தல், உடலின் நீர் சற்றே வற்றி விடுதலுமாம்.

சாற்றிய நடுக்கம் வாய்நீர் தலைவலி யுணர்வி லாமல்
ஏற்றதோர் மயிர்புல் லாரிச் சிளைப்புடல் கறுத்துச் சோகஞ்
சோற்றியே வாதந் தன்னால் வருங்குணம் சுரத்தின் மீது
ஆற்றிய குளிகை சேர்த்து அவிழ்தமிக் கசாயந் தானே. 175

**பொருள் :**— உடலில் நடுக்கல் காணல், வாய்நீர் மிகல், தலைவலி, அறிவு மழுங்குதல், மயிர்க்கூச் செறிதல், உடல் இளைத்துக் கறுத்தல், வருத்தக் குறிகாணல் ஆகிய இவை வாதத்தால் தோன்றிய வெப்பின் குணமென்க. இதற்காகச் செய்யப் பெற்றுள்ள குளிகையை இம்மருந்தாகிய கிபாழத்துடன் கொடுக்கவும்.

கசாயமே பொன்னுங் காணி திப்பிலி முத்தக் காசு
பசாயஞ்சுக் குடனே சீந்தில் பேய்ப்புடல் பற்ப டாகம்
நசாயமீர் நாழி நீரில் நய்யவே வெந்த போது
யிசாயதேன் விரசி யுட்கொள் சுரங்குளி ரேகுந் தானே. 176

**பொருள் :**— பொன்னுங்காணி, திப்பிலி, கோரைக்கிழங்கு, சுக்கு, சீந்தில் தண்டு, பேய்ப்புடல், பற்பாடகம் இச்சரக்குகளை இரு நாழி நீரிலிட்டு முறைப்படி கியாழம் செய்து தேன் சேர்த்துக் கொடுத்திடக் குளிரும் வெப்புந் தீர்ந்திடும்

ஏகிய பித்தஞ் செய்யும் குணம தேதோ வென்னில்
ஆகிய புருவஞ் சந்து தலையுட னதிக நோவாம்
ஏகிய வயிறு வீங்கி யிழிமல மிறங்கா தென்று
வாகிய தினவு தோன்றி யுரிசையுந் தெரியா தென்னே. 177

**பொருள் :—** பித்தத்தின் (சுரத்தின்) குணம் என்ன வென்று கேட்பீரானால் புருவம், என்பின் மூட்டுகள், தலை ஆகிய இடங்களில் மிகவும் வலிக்கும். வயிறு உப்பும். மலம் வெளிப் படாது வயிற்றில் தங்கும். உடலின் மேல் மிக்க தினவுண்டாகும். வாய்க்குச் சுவையொன்றும் தெரியாது.

தெரியவே சீந்தில் தண்டு விலாமிச்சை சிறுகாஞ் சோரி
வரிய வோரொன்று ரெண்டு கழஞ்சுயீர் நாழி நீரில்
எரிய எட்டொன்ருய்க் காய்ச்சி யிறுத்துசால் புடனுட் கொள்ளப்
பரிவுடன் தீரும் வேறு பித்தத்தின் குணத்தைப் பாரே. 178

**பொருள் :—** சீந்தில் தண்டு, விலாமிச்சை வேர், சிறுகாஞ் சொரி வேர்ப்பட்டை வகைக்கு இரு கழஞ்சு வீதம் எடுத்து இரு நாழி நீரில் இட்டு எட்டுக் கொன்ருக வற்றுமாறு முறைப்படி கியாழம் செய்து வழக்கப்படி உட்கொள்ளத் தீரும். வேறு வகைப் பித்தத்தின் குணம் கூறுவேன் பார்த்துக் கொள்க.

குணமலஞ் சிறுநீர் கண்கள் கூடவே சிவந்த தாகம்
உணர்விலா வுழன்று மற்றும் முகங் கடுத் துலாவிக் காய்ச்சல்
இணையிதுக் கியல்நன் ஞரி இம்முத்தக் காசு சீந்தில்
பணையுஞ்செங் கழுநீர்த் தண்டு திப்பிலி பற்ப டாகம். 179

**பொருள் :—** மலம், சிறுநீர், கண்கள் இவை சிவந்திடும். உடலில் தொடு உணர்வு இல்லாமல் போகும். வேக்காட்டால் புரண்டு வரும் முகத்தில் சினத்தின் குறிகாணும். இவற்றிற்கு (மருந்து):— நன்னரி வேர், கோரைக் கிழங்கு, சீந்தில் தண்டு செங்கழுநீர்க் கிழங்கு, திப்பிலி, பற்பாடகம். (அடுத்த பாடலில் பொருள் முடிவு பெறும்).

பற்படாகம் சந்தனமும் பகர்முந்திரி கையதன் பழமும்
இப்பவோரொன் றிருகழஞ்சு யிரண்டு படிநீர் தனிற்காய்ச்சி
செப்பமுடனே தானுழக்கு ஆனல் அருந்தீர் திறமாகும்
அற்பமான சுரதாபம் தீரு மிதற்கு ஆனதுவே. 180

பொருள் :— சந்தனக்கட்டை, திராட்சை ஒவ்வொன்றும் 2கழஞ்சளவாக எடுத்து இரண்டு படி நீரில் போட்டு முறைப்படி காய்ச்சி ஒரு உழக்குக் கியாழம் செய்து உட்கொள்ளச் சுரம், தாபம் முதலியன தீரும்.

ஆனநன் னரி பேரீச்சம் அதிமதுர மிலுப்பைப் பூ
பானு சந்தன மிலாமிச்சை பார்பெருங் குமிழும் ஒரொன்று
வேனிலாம லிருகழஞ்சு இரண்டுபடிநீர் தனிற் காய்ச்சி
யூனமான சுரந்தீரும் உழக்கு நீரை யுண்பதுவே. 181

பொருள் :— நன்னாரிவேர், பேரீச்சங்காய் (கொட்டைநீக்கியது) அதிமதுரம், இலுப்பைப்பூ, சந்தனக்கட்டை, விலாமிச்சம் வேர் பெருங்குமிழன்வேர் தனித்தனி இருகழஞ்சு வீதம் எடுத்து இரண்டு படி தண்ணிரில் சேர்த்து முறைப்படி காய்ச்சி வடிகட்டி அளவுப்படி தினம் அருந்தச் சுரம் தீரும். 'உழக்கு நீரை உண்பது வே' என்று மேற்பாட்டில் கூறியது. ஒரு வேளைக்கு ஓர் உழக்கு உண்ண வேண்டும் என்பது பொருளன்று. காய்ச்சி வடிகட்டிய கியாழத்தின் அளவு ஓர் உழக்கு என்பது,நான் பொருள்.

உண்ணுமொரு சிலேத்து மத்துக் குடம்புதான் கனத்துத் தூக்கம்
எண்ணுமே பலவுவாய் தான் அருவருத் திறக்க மில்லை
வண்ணமே வெளுத்து மூக்கில் நீர்வரு மிரும லுண்டாம்
அண்ணலே குடி நீர்க்கான அவிசத முத்தக் காசே. 182

பொருள்:— உடம்புகனத்திடும், வாயின் சுவை காட்டுந் தன்மை பழுதுற்றிடும் (சுவையே தெரியாது என்பது குறிப்பு), அல்லது பற்பல சுவைகளைத் தோற்றுவிக்கும்; ஊண் செல்லாது, உடல் வெளுத்திடும்; மூக்கில் நீர்வடியும்; இருமல் காணப்படும். இதன் தீர்வுக்கான குடிநீர்க்கு ஆனது கோரைக் கிழங்கு. (அடுத்த செய்யுளில் தொடரும்).

முத்தக்கா சுடனே சுக்குச் சிறுவழு தலையு மூலம்
உற்றமைப் பூடு மூலம் உள்ளதோர் சிறுதேக் கோரொன்
றற்றயீர் கழஞ்சு ரெண்டு படிதண்ணீர் காய்ச்சி யுண்ணப்
பற்றறச் சுரமே யேகும் பருகிடீர் பருகி டீரே. 183

பொருள் :— சுக்கு, சிறுவழுதுணைவேர், கரிசாலைவேர், கண்டு, பாரங்கி ஒவ்வொன்றும் இருகழஞ்சு வீதம் இரண்டு படி நீரில் போட்டு முறைப்படி காய்ச்சி இறுத்து வடிகட்டி அளவுப்படி அருந்துவீர்களாக.

விகற்ப வாதம் விடும் பித்த சேத்துமம்
அகற்ற ஏழுநா ளானபின் மாத்திரை
செகத்தில் நன்னாரி மிளகுடன் திப்பிலி
நிகர்த்த வாய்விளங் கம்பெருங் காயமே. 184

**பொருள் :—** இயல்புக்கு மாறுபட்ட வாதம், பித்தம், கபம் இவைகளை அகற்ற ஒரு மாத்திரை (கூறுவேன்) நன்னாரிவேர், மிளகு, திப்பிலி, வாய்விளங்கம், பெருங்காயம், (அடுத்த செய்யுளில் தொடரும்).

காயமுட னதிவிடைய மிந்துப்புச் சாதிக்காய் கடுக்காய் சுக்கு
நேயமுடன சமதகம் வெங்காயஞ் செங்கொடியு நிசமா யோரொன்
றுயவிரு கழஞ்சுநிறை யதன் பிறகு நேர்வாள மதனைச் சுத்தித்
தூயதுசெய் தறுகழஞ்சு யிவையெல்லாம் பொடியாக்கித் தூள்
[செய்யாயே. 185

**பொருள் :—** அதிவிடயம், இந்துப்பு, சாதிக்காய், கடுக்காய், சுக்கு, அசமதாகம், வெங்காயம், செங்கொடிவேலி வேரப் பட்டை ஒவ்வொன்றும் இருகழஞ்சளவு எடுத்து வைத்துக் கொள்க. அதன் பிறகு தூய்மை செய்த வாளம் ஆறுகழஞ்சும் எடுத்து மேற்படி சரக்குகளைத் தனித்தனி தூள் செய்து ஒன்றாய்க் கூட்டி.

தூள் செய்வாய் இருபத்தஞ்சு நாழிகைத் துகைக்குப் பின்பு
ஏழரை நாழிமட்டும் எலுமிச்சஞ் சாற்றை விட்டு
மீளவு மரைத்துக்குன்றி மணியென நிழலில் மேவத்
தாழ்வில்லா யிளவெந்நீரில் சுக்கதன் பொடியைச் சேரே. 186

**பொருள் :—** இருபத்தைந்து நாழிகை (சுத்த நீரால்) அரைத்துப் பின் ஏழரை நாழிகை எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்துக் குன்றியளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க. இதற்குத் துணைமருந்து சுக்குப் பொடி சேர்த்த இள நீரும் வெந்நீரும் ஆகும் (இப்பாடலில் சிலசொற்கள் சிதைந்துள்ளன).

பொடிதனில் விட்ட நீரை யிறுத்தொரு குளிகை பேர்ந்து
விடியுமுன் னுரைத்துட் கொள்ளும் மேவும் பத்தியமதனை நீகேள்
அடிகையாய்த் தயிருஞ் சோறு மப்படி மூன்று நாள்தான்.
இடுவிடு சுரமு மேகும இறையவ ரியம்பி னுரே. 187

**பொருள் :—** இந்த மாத்திரையில் ஒன்றைப் பொழுது விடியும்முன் முற்கூறிய நீரில் உட்கொள்ளவும். இதற்குப் பத்தியம் (மருந்துணவு) கூறுவேன் கேள். தயிரும் சோறும் மூன்று நாள்கள் உண்ணச் சுரம் தீரும், இது இறைவனார் கூறியதாம்.

சேத்துமத் தாலே வந்த குணங்களும் பேருஞ் செப்பி
ஆற்றுமந் தன்னில் சேர்ந்த வாறுக ளறிவிப் பேன்கேள்
காற்றினால் மழையி னாலுங் கனமழை நனைவி னாலும்
சாற்றிய சுரத்தி னாலும் வாசுகி தோன்றுந் தானே. 188

**பொருள் :—** சேத்தும தோடம் காரணமாகத் தோன்றிய நோய்களுக்குப் பெயரும் குறிகுணங்களும் கூறி, உடலில் தோன்றிய விதங்களையும் அறிவிப்பாம், கேட்டுக் கொள்வீராக; மிகுந்த காற்றாலும், மழையினாலும், கனத்த மழையில் நனைவதாலும் உண்டான காய்ச்சலால் வாசுகி என்னும் பிணி தோன்றும்.

**குறிப்பு :—** வாசி என்பது மூச்சு. இது மூச்சைப் பற்றிய நோய் என்றும் சுவாசகாசம் எனவும் இரைப்பு நோய் எனவும் கூறப்படும் நோய் என்றும் கொள்க.

வாசுகி யிரைச்சல் புகைச்சல் மந்தாரம் வறட்சியோ டீளைசீழ்க்
[காசம்
மாசமு முனிந்த கோழையோ டிழியும் வருசயித் தியமொடு ரத்தம்
பேசிய மருந்தீ டென்னுள மாந்தை பிரிவெனுஞ் சுவாசமே காசம்
தேசமீ துலவு கோடையும் வாடைச் சேத்தும நோய்களென
[வுரை செய்தார், 189

**பொருள் :—** வாசுகி என்னும் நோயின் வகைகளைக் கூறியது :— (1) இரைச்சல் (இரைப்பு என்று வழக்கிலுள்ளது) (2) புகைச்சல் (3) மந்தாரம் (மந்தார சுவாசம், மந்தாரகாசம், மந்தார சுவாசகாசம் என வழக்கிலுள்ளவை காண்க) (4) வறட்சி (5) ஈளை (6) சீழ் (7) காசம் (இருமல்) (8) கோழை வாசுகி அல்லது சைத்திய வாசுகி (9) இரத்தம் (10) மருந்தீடு (11) உளமாந்தை (12) பிரிவு (13) கோடை (14) வாடை எனப் பதினான்கு வகையான இரைப்பிருமல் நோய் (தமிழ் நாட்டில்) வழங்கி வந்தது. இவைகளைச் சேத்தும நோய்களென்று கூறுவர்.

## குளிர்சுரம் வருமுன் தோன்றும் குறிகள்

தமக்குள வியாதி யதுக்குள குணங்கள் சாற்றினூர்தவமுடை
[முனிவோர்
அமைக்கொண்டு தங்க ளிளைப்புறுமயக்க மதுவலா விருமல்
[நொந்திடுகும்
பின்புள சுவாசம் வாத சேத்துமமும் பிறிதியா யின்பயித் தியமும்
குமைக்குமே யுடம்பைக் கடுத்து நொந்திடுமேற் குளிருடன்
[காய்ச்சல் வந்திடுமே. 190

**பொருள் :—** தவத்தைக் குறிக்கோளாகக் கொண்ட முனிவர்கள், நோய்களையும் அவைகளின் குறிகுணங்களையும் கூறியுள்ளார்கள். ஒய்ச்சல், மயக்கம், இருமல், உடம்பைத் துவைத்தது போன்ற நோக்காடு தோன்றிடுமாகில் குளிருடன் காய்ச்சல் வந்திடும் என்பதே முன்னறிவிப்பாம்.

## இரைப்பிருமல் நோய்கள் தோன்றுமுன் காணும் குறிகள்

வந்திடும் வெள்ளோக் காளம் வாயது தித்திப் பாகும்
நொந்திடும் பிடரி மண்டை மந்தமும் மிளைப்பி னேங்கும்
முந்தவே தலைதா னைந்து சரீரமு முகமுங் குத்தும்
கந்தரந் தொண்டை நாசி கர கரென்றுடனே தும்மல். 191

**பொருள் :—** வெள்ளோக்காளம் காணல்; வாயில் இனிப்புச்சுவை காணல்; தலை, பிடரி, மண்டை ஆகிய இடங்களில் வலி காணல்; முகத்திலும், உடல் முழுமையும் குத்தல் காணல்; சுறுசுறுப்பின்மையும், பசி மந்தமும் காணல்; களைப்புண்டாகி அதிகரித்தல்; கழுத்து, தொண்டை, மூக்கு ஆகிய இடங்களில் கரகரத்தல்; (உட்புறத்தினவுகாணல்) இவை கண்டவுடன் தும்மல் உண்டாதல்.

தும்மலு மிருமலுந் தோன்றுங் காசநோய்
நன்மையாய் வியாதி தீர்ந்தொழிய நல்குவார்
செம்மையா யின்பரங் கிரியிற் செல்வனூர்
உம்மையா யொருபெரும் யோக மோதுவாரே. 192

**பொருள்:—** மேற்கூறப்பட்ட தும்மலுக்குப் பின் இருமல் தோன்றிடில் இதுவே இரைப்பிருமல் என்பர். திருப்பரங்குன்றில் வீற்றிருக்கும் செவ்வேள் மேற்கூறிய காச நோய்கள் தீர்ந்திட உண்மையான பெரிய மருந்து முறையை ஓதலுற்ருர்.

ஓதுவ தேலமு மொளிருஞ் செந் தொட்டி
நீதிவா லுழுவையும் நிகர் நீலாஞ்சனம்
ஆதியாய்க் கருஞ்சீ ரகங்கார் போகமும்
வேதிதீர் கடலழிஞ் சிப்பட்டரை மேவுவார். 193

**பொருள் :—** ஏலம், செந்தொட்டி, வாலுழுவைபரிசி, நீலாஞ்சனக்கல், கருஞ்சீரகம், கார்போகரிசி, கடலழிஞ்சிப் பட்டையொடு.

மேவு காக்கை நவாச்சாரம் வேண்டுவார்
ஆவி யாயின வங்காளப் பச்சையும்
தாவிய வொன்றே டொன்பது தன்னையும்
ஓவிய ஓரொன்று நாற்கழஞ் சொக்குமே, 194

**பொருள் :—** காக்கணன்வேர், நவாச்சாரம், வங்காளப் பச்சை இவை பத்தும் வகைக்கு நாற்கழஞ்சாக எடுத்து,

ஒக்குமே சங்கங் குப்பி எலுமிச்சை ஓரி ரண்டுந்
தக்கதோர் சாறு விட்டு அரைத்து நீயுருட்டத் தானே
சிக்கெனக் கழற்சி போலே மாத்திரை செய்யா தேனே
பத்தியாய்க் காசத் தார்கள் கொள்வது காண்பிப் பேனே. 195

**பொருள் :—** சங்கங்குப்பி, எலுமிச்சம்பழம் இவைகளின் சாறுகள் தனித்தனி சமஅளவு விட்டுத் தனித்தனியாக அரைத்துக் கழற்சிக்காய் அளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்க. காசநோயாளிகள் பத்தியுடன் இதனையருந்தும் முறையைக் காண்பிப்பேன் கண்டுகொள்வராக.

சாணுநீர் பாலிலுங் கழித்து நெய்யிலும்
பேணிய தயிர் வெந்நீர் பின்னெலும் பிச்சையும்
ஊணிய தொன்றிட னேவலி யோரொன்றில்
பானெனும் மாத்திரை யொன்றில் பாதியே. 196

**பொருள் :—** தூயநீர், பால், நெய், தயிர் (தயிரூறிய நீர் கொள்ளல்முறை), வெந்நீர், எலுமிச்சைச்சாறு ஆகியவைகளில் ஏதேனுமொன்றில் மேற்படி மாத்திரையை வேளைக்கு அரை மாத்திரையாய்க் கொடுக்கவும்.

பாதியீயும் பொழுது வீருகின்ற பக்குவம்
ஓதிய மாத்திரை பன்னிரண் டுகொள்
நீதி முன்னூன்கு நாள் நேரம் ரெண்டுமே
யீதிடை விடாமலே யீவை யருந்துமே. 197

பொருள் :— வேளைக்கு அரை மாத்திரை வீதம் பன்னிரண்டு நாள்களுக்கும் பன்னிரண்டு மாத்திரைகளை இடைவிடாமல் சாப்பிடவும்.

அருந்திய அவிழ்த மதற்குப் பாதியாம்
பொருந்திய தேனுமாம் வேறு போதிப்பார்
திரும்பிய நோய்களுக் கறியச் செப்புவார்
மருந்து சீனக்காரம் பொரிசல மன்னுதோல். 198

பொருள் :— அருந்திய மருந்திற்குப் பாதியளவு தேன் அருந்தல் நலமாம்; நோய் குணமடைந்து சில நாள் சென்று மீண்டதாயின், சீனக்காரம் வெங்காரம், வெட்டிவேர் இலவங்கப்பட்டை,

மன்னிய கடுக்காயுஞ் சலப்பட்டையும் கையீ ருள்ளி
பன்னியே பிடிதானென்று பத்துட னிடித்து நன்றாய்
இன்னமே புதுப்பாண்டத்தில் இட்டுச் சிறுநீரை வாரு
முன்னமே ஞாயிறுக்குக் கொள்வது பின்னாள் மூன்று. 199

பொருள் :— கடுக்காய், வசம்பு, கையாந்தகரை, வெங்காயம் ஆகியவைகளை வகைக்கு ஒரு பலமாய் எடுத்து இடித்து ஒரு புதுப்பாண்டத்திலிட்டுச் சிறுவர்களின் சிறுநீரை விட்டுக் கொதிக்க வைத்து ஞாயிறு தொடங்கி மூன்று நாள்கள் உட்கொள்ள.

மூன்று ஞாயிறுக்கு மும்மூன்றென்பது முடிந்த நாளில்
தோன்றிய ஏங்கல் தீர்ந்து தோன்றாமல் தூரப்போகும்
மீண்டும் வேறிரைச்சல் காசந் தீர்கின்ற விவரங்கேளாய்
சான்றநற் கானகத்தில் அழிஞ்சிவேர் நிம்பைச் சாற்றில். 200

**பொருள் :—** இவ்வண்ணம் மூன்று ஞாயிற்றுக்கிழமை களில், மேற்படி மருந்தை ஒன்பது நாள்கள் உட்கொண்டால், (இந்த ஏங்கல் இரைப்பு என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது போலும்) இரைப்பு நோய் திரும்ப வராமலே நின்றுபோகும். வேறுவகை இரைப்புகள் தீரும் வகையைக் கூறுவேன் கேட் பாயாக: அழிஞ்சில் வேரை (பட்டையை) வேம்பின் சாற்றில்,

சாற்றினிலரைத்து நிம்பைச் சாற்றரைப்படியிற் போட்டுச்
சேர்த்தொரு சேரையாவின் பாலுடன் செம்பில் மூன்றும்
வார்த்துவைத் தொருநாளூற மற்றைநாளதனைக் கொள்ளத்
தோற்றிடு மிரைச்சல் காசஞ் சீழ்விழுங் கோழை தோன்றும்.

**பொருள் :—** அரைத்து மேற்படி வேம்பின் அரைப்படி சாற்றில் கலக்கி, ஒருசேர் ஆவின் பாலைக் கூட்டி, ஒருநாள் ஊற வைத்து மறுநாள் உட்கொள்ள, இந்தச் சுவாச நோய் கண்டவர் களின் வாய், மூக்கு முதலிய வழியாய் இருமலுடன் சீழும் விழும்.

கோழையுஞ் சீயு மாக வீழ்ந்திடுங் கொத்துக் கொத்தாய்
நாளது மூன்று கொள்ள நாடிய பையுந் தோற்றும்
வீளிய பைவீ ழாட்டி வில்வம்கூ விளைய ழிஞ்சி
நீளிய வேர ரைத்துக் கொள்வது முன்சொல் நேரே. 202

**பொருள் :—** கோழையும் சீழும் கொத்துக் கொத்தாய் விழுந்துவிடும். நுரையீரலில் இருந்த கோழையும் வெளியாகும். அவ்வண்ணம் வெளியாகாவிடில், வில்வம், விளா, அழிஞ்சில் ஆகிய மரங்களின் வேரைச் சமபாகமாக எடுத்து அரைத்து உட் கொள்ளவும்.

நேரென நிலையாய் நின்று பைவிழும் நிதானந் தானே
வேறென அதற்குப் பின்பு லேகிய விவரம் வேண்டும்
சீரகம் ரெண்டு சுக்குத் திப்பிலி மிளகு வெல்லம்
கூறிடில் பசுவின் நெய்யில் கிளறியே கொள்விப்பாயே. 203

**பொருள் :—** இதை உண்டபின் பைவிழுந்திடும்; அந்தப் பையானது விழுந்தபின்னர், அதன் தீர்வுக்கான இளகங்களின் விவரம் தேவையாகும். இருசீரகம் (சீரகம், கருஞ்சீரகம்) சுக்கு, திப்பிலி, மிளகு இவை ஐந்தையும் தூள்செய்து சமமாக எடுத்து வெல்லமும் ஆவின் நெய்யும் அளவுப்படி சேர்த்து இளகஞ் செய்து உட்கொள்க.

## 81-வாதநோயின் பெயரும் இயல்பும்

வாதவிருத்தஞ் சன்னரோகம் சூரியவாதம் வருவதாய
சீதசந்திரவாதம் சாதிரவாதங் குத்தி சீவாதத்தோடு தொந்திய [வாதம்
ஆதஅவ்வாகுவாத மனுத்தம்ப வாத மச்சவாதம்
மாது சிரோவாத மன்னிய தம்பவாத மட்டலிகை வாத [மென்றே. 204

**பொருள்:—** வாதவிருத்தம், கன்னரோகம் (காது வாத ரோகம்), சூரியவாதம், சீதவாதம், சாதிரவாதம், குத்திவாதம், சீவாதம், சந்திரவாதம், தொந்தவாதம், அவ்வாகுவாதம் (அப்பாகும் என்பது), அனுத்தம்பவாதம், அச்சவாதம் (கண் வாதம்), சிரோவாதம், தம்பவாதம், அட்டலிகைவாதம் என்பனவும்;

ஆனுகவாதம் பீலிகைவாதம் அத்திதம் பட்சாவாதம் வித்து [வாதம்
ஊனுகும் ஹூர்த்தம்பவாதஞ் சுத்தவாதஞ் செவிடு கண்டாமாலை
வானுகும்வாதம் அயில்வாதம் கண்டக மொழிவாதம் குத்து [வாதம் குதியின்வாதம்
தானுகுஞ் சந்துவாதம் சதியின்வாதம் தான் கெண்டைவாத [முழங்கால்வாதமாமே. 205

**பொருள்:—** ஆனுகவாதம், பீலிகைவாதம், அத்திதவாதம், பட்சவாதம், வித்துவாதம், ஊருத்தம்பவாதம் சுத்தவாதம், செவிடு, கண்டமாலை, வானுகுவாதம், அயில்வாதம், கண்டக வாதம், மொழிவாதம், குத்துவாதம், குதியின்வாதம், சந்துவாதம், சதியின்வாதம், கெண்டைவாதம், முழங்கால்வாதம் என்பனவும்;

தொம்பை வாதங் கிரிச்சிவாதம் மண்டைவாதந் துடர் கோரை [வாதம்
தம்பவாதம் மம்ப மடிவாதங்குடல் வாத முருத்திர வாதம் [சையவாதம்
சம்புமுக வாதங் கன்னவாதம் நேத்திர வாதஞ் சருவாங்க வாதம்
வம்புச்சத்தி வாதம் பிறக்கண்ட நீர்க்கண்ட மாறுவாத [மென்றே. 206

**பொருள்:—** தொம்பைவாதம், கிரிச்சிரவாதம், மண்டை வாதம், கோரைவாதம், தம்பவாதம், அடிவாதம், குடல்வாதம், உருத்திரவாதம், சையவாதம், சம்புமுகவாதம், கன்னவாதம், நேத்திரவாதம், சர்வாங்கவாதம், சத்திவாதம், பிறக்கண்ட வாதம், நீர்க்கண்டவாதம், மாறுவாதம், என்பனவும்;

சன்னிவாத மகோதரவாதம் சக்கர வாதத்தோ டெண்ணிய
[சூஸ்திரவாதம்
முன்னமார்ந்த வாதமா மூலவாதம் முயலகவாதங் கூனியவாதம்
[ரத்தவாதம்
மின்னமின் பிரதாருவாத முள்வாத மொடுகுமர கண்டவாதம்
கன்ன குண்டல வாதங் கபாலவாதம் மீனச்சுவாத மண்டூக
[கந்தெம வாதந்தானே. 207

பொருள் :— சன்னிவாதம், மகோதரவாதம், சக்கர வாதம், சூத்திரவாதம், முன்னமார்ந்தவாதம், மூலவாதம். முயலகவாதம், கூனியவாதம், இரத்தவாதம், மின்னிமின் பிரதாருவாதம், உள்வாதம், குமரகண்டவாதம், குண்டல வாதம், கபாலவாதம், மீனவாதம், சுவாதவாதம், மண்டூக வாதம், கெந்தமவாதம் என்பனவும்;

சூலவாதஞ் சூட்டுவாதம் மலட்டுவாதமொடு சுரோணிதவாதம்
கீல் குருத்து வாதங் தேசவாதங் குன்மசூலவாதமாகு
மால்நடுக்குவாத மற்பவாத முலேவாதம் செகவாதமாகுமுண்
மூல அத்திவாத மஞ்சிவாதம் விடைவாத முலர்த்து வாதம்
மர வாதங் கொடி வாதந் தானே. 208

பொருள் :— சூலேவாதம், சூட்டுவாதம், மலட்டுவாதம், சுரோணிதவாதம், கீல்வாதம், கீல்குருத்துவாதம், கேசவாதம், குன்மவாதம், குன்மசூலேவாதம், நடுக்குவாதம், அற்பவாதம், முலேவாதம், செகவாதம், உள்மூலவாதம், அத்திவாதம், மஞ்சிவாதம், விடைவாதம், உலர்த்துவாதம், மரவாதம், கொடி வாதம் என்பனவும்;

கிடைவாதம் புடைவாதம் பிறளுவாதம் கேழ்க்கி லோகமன
[வாதமெண்பத் தொன்று
அடவாகக் குணங்குறி களறிந்து செய்தோர்க் காதித் தணைக்
[கண்ட பனிபோல் நீங்கும்
உடனே தீர்த்தால லதொன்றுற் பவித்து விகடிக்குந் தயிலத்தாலே
[தீர்வன
நடைவாத ராட்சசத்தால் தீரும் வாதம் நாளடைவில் தீர்க்கவிது
[நன்றுதானே. 209

**பொருள் :—** கிடைவாதம், புடைவாதம், பிரளுவாதம், கமனவாதம் ஆக வாதநோய்கள் எண்பத்தொன்றும். அவ்வவ் வாதநோய்களின் குறிகுணங்களைத்தேர்ந்து மருத்துவம் செய்தால் சூரியனைக்கண்ட பனிபோல் எல்லா வாதநோய்களும் நீங்கும். இந்நோயை உடனுக்குடன் தக்சமருந்துகளால் தீர்க்காவிடில் நச்சுநிலை பெற்று வேறுநோய்கள் இதில் இணைந்து இன்னல் தரும். இவை தைலங்களாலும் வாத ராட்சசம் போன்ற மாத்திரைகளாலும் நாளடைவில் தீர்க்க நலமாம்.

## வாதநோய்களின் இயல்பு

வாதவீறு அன்ன மிறங்காது கடுப்புண்டாம் வண்ணமுண்டாம்
மோது கட்டுரோகம் சுரமுண்டா மிருமலுமா முறங்காதென்றும்
ஓது சூரிய வாதமனலாகு நடுக்கமுண்டாம் பொருள் களாய்ந்
தீதெனவே நரம்பிசித்து சந்துகள் தோறுங் கடுக்குந் தினமுந்
[தானே. 210

**பொருள் :—** வாத வீறுள்ளபோது உணவு செல்லாது; உடலில் கடுப்பு (நோக்காடு) உண்டாகும்; உடலில் நிறம் ஏற்படும்; சுரமும் இருமலும் உண்டாகும்; உறக்கங் கொள்ளாது. சூரிய வாதநோயில் உடல் அனல்போலக் காயும்; நடுக்கம் காணும்; நரம்பிசிவு காணும்; என்பின் மூட்டுகள் தோறும் கடுப்பு (வலி) காணும்.

சந்திர வாதமுடம்பு குளிர்ந் தெழுந்தே நடுக்குங் சீதவாய்வாம்
முந்திய குத்திசிவாஞ் சந்துகள் தோறுங் குடைந்து மொளிகள்
[வீங்கும்
வந்திய தொந்த வாதம் நரம்புகளெல்லா மிசித்து வலம் விடாது
அந்துஅவ்வாகு வாதம் வீக்கமுண்டா முடலிற்றிமி ருண்டாமே.

**பொருள் :—** சந்திர வாதநோயில் உடம்பு குளிர்ந்து நடுக்கம் காணும். சீதவாய்வினில் முதலில் குதம் வலி கண்டு இசிவும் காணும்; என்புகளின் மூட்டுகள் தோறும் குடைச்சலும், மூட்டுகளில் வீக்கமும் காணும். தொந்த வாதத்தில் நரம்புகளில் இசிவு காணும்; மலம் வெளியாகாது (மலபந்தங் காணும் என்பது குறிப்பு). அவ்வாகு வாதநோயில் உடலில் வீக்கம் காணும்; தொடு உணர்வு இல்லாமல் போகும்.

## அனுத்தம்ப வாதம்

அனுத்தம்ப வாதமதில் அடிநாவு உள்ளிழுக்க மிகுவாய் கட்டும்
பனித்துளிபோல் கொப்புளமாம் பயமுண்டாந் தலைகனக்கும் சீரோ
[வாதம்
குனித்தமுகமிசிக்கு மன்னியத் தம்பஞ் சலங்கட்டுங் குடைச்ச
[லுண்டாம்
நனித்த அட்டலி வாதம் அடிவயிறு பாரித்து நடுக்க
[முண்டாம். 212

**பொருள் :—** அனுத்தம்ப வாதத்தில் வாயைப் பேச வொட்டாத வண்ணம் கட்டிவிடும்; பனித்துளி போன்ற கொப்புளங்கள் வாயில் காணும்; அச்சமுண்டாகும். சிரோ வாதத்தில் தலைகனக்கும்; தலை குனியும்போது முகத்தில் இசிவு காணும். தம்ப வாதத்தில் சலக்கட்டு (சிறுநீர் இறங்காமை) ஏற்படும்; குடைச்சல் உண்டாகும். அட்டலிகை என்னும் வாதப்பிணியில் அடிவயிறு ஊதிப் போகும்; உடலில் நடுக்கம் உண்டாகும். (இப் பாடல் சிதைந்துள்ளது.)

ஆனுக வாத மசைக் கொட்டாது உடம்பு தன்னை யறிவழிக்கு
மானுப் பீலிகைவாதம் உடம்பெல்லாங் கொப்புளித்து மாற்றுக்
[கொள்ளுந்
தேனுரத்தித வாதம் நாவிசித்துப் பேசாமல் செவிமந்தமாகும்
மூனுர் பட்சவாதம் ஒருபுறமா யிசித்து நடக்கொட்டா
[தன்றே. 213

**பொருள் :—** ஆனுகவாதம் உடலைச் சிறிதும் அசைக்க வொட்டாது; அறிவை மந்திக்கச் செய்யும். பிலீகை வாதத்தில் உடம்பெல்லாம் கொப்புளங்கள் கண்டு உருவை மாற்றிவிடும். அர்த்தித வாதத்தில் நாவைப் பேச வொட்டாமல் இசித்து விடும்; காது கேட்பது மந்தமாகும். பட்ச வாதத்தில் அங்கங்கள் ஒரு பக்கமாய் இழுத்துக் கொள்ளும்; ஆதலால் நடக்காது வொட்டாது.

வித்து வாதமறி வழிக்கு மு –ல் நடுக்கி வாய் நீர்பாரிக்கும்
உத்தலூர்த் தம்ப வாதஞ் செறிந்து மார்படைக்கு வாயு மேலாஞ்
சுத்தவாதம் வயிறு பொருமி மேல்கடுப்புண்டா மலஞ் சலமுஞ்
[சிறுக்கும்
பத்திசெவி டெனும் வாதங் காதுகேளாது முனிபகர்ந்தவாறே. 214

பொருள் :— வித்துவாதம் அறிவை அழித்திடும், உடல் நடுக்கந்தரும். வாய்நீர் மிகுத்து ஊறும். ஊர்த்தம்ப வாதம் மார்பில் அடைப்பு உண்டாக்கும். வாயுவின் அழுத்தம் மேல் நோக்கி எழும். மூச்சுத் தடுமாறும். சுத்தவாதம் என்ற நோயில் வயிற்றில் பொருமல் காணும்; மேல் வயிற்றில் கடுப்புத் (வலி) தோன்றும். மலம்சலம் இரண்டும் குறைந்திடும். செவிடென்னும் வாதத்தில் காதுகேளாது.

கண்டமாலை கழுத்தைச் சுற்றி நரம்பின் வழியே புத்தாய்க்
[கட்டும்
பண்டையில் வாதங் கண்டகமாக வெடுத்தெறிந்து பல்லே
[கட்டும்
விண்டமொழிவாதம் மொழிகடோறுங் கரணைகட்டும் மிசிந்து
[நோகும்
கொண்டகுத்து வாதம் நடைகுறைந்து நடுக்க முண்டாய்க்
[குத்துங்காலே. 215

பொருள் :— கண்டமாலை என்னும் நோயில் கழுத்தைச் சுற்றி நரம்பு வழிகளில் புற்றுகள்போல வளர்ச்சியைத் தரும். கண்டகவாதத்தில் ஆளைத் தூக்கிப் போடுவது போல ஆட்டங் கொடுக்கும்; பல்லைக்கிட்டிக் கொள்ளும். மொழிவாதத்தில் சந்துகள் தோறுந் தூறு உண்டாகிக் கரடு கட்டும்; நாளடைவில் இயங்கும் மூட்டுகள் இயங்காதாய்விடும்; மூட்டுகளில் இசிவுடன் கூடியவலியுண்டாகும். குத்து வாதப் பிணியில் உள்ளங்காலில் குத்தல்காணும், நடைமெலியும், நடுக்கம் காணும்.

குதிவாதம் நரம்பிசித்துச் சீக்கொண்ட புண்போல் நோகும் சந்து
[வாதம்
பதிபாய சந்துகள் தோறுங்குடைந்து கடுப்புண்டாம் படுக்கை
[காட்டும்
சதிவாத மிருந் தாப்போல் பிடரியடி பட்டாப்போல் தள்ளிவீழும்
கெதிபாயக் கெண்டைவாதம் மாட்டியிசிந்து கொளுங் கேளு
[மென்றே. 216

பொருள் :— குதிவாதத்தில் நரம்பில் இசிவும் குதிகாலில் சீழ்கொண்ட புண்போல நோவுமுண்டாகும். சந்துவாதம் என்னும் பிணியில் மூட்டுகள் தோறும் குடைச்சலும் கடுப்பும் காணும்; நோயாளியைப் படுக்கவைத்துவிடும். சதிவாதமென்பது இருந் தாற்போலிருந்து முன்னறிவிப்பின்றிப் புறங் கழுத்தில் பலத்த

அடிதாக்கியது போல அப்பால் தள்ளப்பட்டுத் தரையில் விழ வைக்கும். கெண்டைவாதத்தில் காலின் கெண்டைச்சதையில் ஏதோ ஒன்றை மாட்டி இழுத்தது போன்ற இசிவுதோன்றும். ஆதலால், நடையானது கத்துபாய்வது போல இருக்கும்.

முழங்கால் வாதங்கனத்து வீக்கமாகி முசியாமல் கடுத்து நடக்
[கொட்டாதென்றுந்
துளங்கிய தொம்பை வாதந் துடைகடுத்துக் குடைந்து நோகும்
[வசிவாதம்
பிளங்கிய பிறத்தட்டெலும்பில் குடைந்து கிடைகாட்டும் மண்டை
[வாதங்
களங்க நரம்பிசித்து வீக்கமதாகி வலிக்கு மெனக் கண்டு
[கொள்ளே. 217

பொருள் :— முழங்கால் வாதத்தில் வீக்கம் கனமாகக் காணும்; ஓயாமல் கடுப்புக்காணும்; நடக்கவொட்டாது. தொம்பை வாதப்பிணியில் தொடையில் குடைச்சலும் கடுப்பும் காணும். வசிவாதம் என்னும் பிணியில் புறத்தட்டென்புகளில் குடைச்சல் காணும்; படுக்கத்தள்ளிவிடும். மண்டைவாத மென்னும் நோயில் மண்டைநரம்புகளில் வீக்கமும் இசிவும் காணப்படும்.

கோரை வாதங் குறிக்கிடுப் பென்னேரங் கடுக்கும் நிமிரொட்டாது
சீறுமடி வாதம் அடிவயிறு கனத்து சீழ்க்கொண்டு நோகும்
மூறுகுடல் வாத முழங்கிக் குமுறிப்புரண்டு நோம் பசியாகாது
மேறு முருத்திர வாதம் மார்பையடைச்சிக்கி முரண்டினுப்
[போலாம். 218

பொருள் :— கோரை வாதத்தில் இடுப்பில் எந்நேரமும் கடுப்புக்காணும்; நிமிர்ந்து நிற்க இயலாதுபோகும்; அடிவயிற்றில் சீழ் உற்பத்தியான காரணத்தால் கனத்துக் குத்தலுடன் வலி காணுமானுல் அதுவே அடிவாதமாகும். குடல் வாதப்பிணியில் குடல் புரண்டு குமுறல் உண்டாகி, வாயுவின் ஓட்டத்தால் பெருத்த சத்தத்தையும் உண்டாக்கி நோவையும் கொடுக்கும்; பசி எடுக்காது. உருத்திரவாதம் என்னும் பிணியில் மார்பில் அடைப்பு ஏற்பட்டு மூச்சு முரண்டிக்கொள்ளும்.

அசையா வாத முடம்பு கனத்து நரம்புதனை யிழுத்துக் கொள்ளும்
முசியாத முகவாதங் கடுத்துவிழி சிவந்து முகங் கோணல் செய்யும்
கசிவான கன்னவாதம் புடைத்துச் சிலந்தியாய்க் காதில் சீயாம்
நிசியான நேத்திர வாத மண்டை நொந்து விழிசிவந்து வந்து
[நோமே. 219

**பொருள் :—** அசையா வாதப்பிணியில் உடம்பு கனத்துக் கொள்ளும்; நரம்புகளெல்லாம் இழுத்துக்கொள்ளும். முகவாதத்தில் நிற்காத கடுப்பும், முகக்கோணலும் காணப்படும்; விழி சிவந்திடும். கன்ன வாதப்பிணியில் வீக்கமும் அவ்வீக்கம் கட்டியாய் மாறி காதினுள் உடைந்து காதின் வழியாய்ச் சீழும்வரும். நேத்திர வாதத்தில் மண்டை நோவுடன் விழியும் சிவந்து காணும்.

சருவாங்க வாதம் சந்துகள் தோறுங் கடுக்கும் நடக்க வொட்டாது
அறவே தான் சத்திவாதம் வயிறு பொருமி வாந்தித்து நாக்கும்
[மரமாகும்
பிறசண்ட வாத முடலே திமிர்த்து வணங்கா நிற்கும் பிறங்
[காலுமுது குதோளுஞ்
சிறவேதா னீர்க்கண்ட வாத மெரித்திருக்கும் நிசமதென்ற
[வாறே. 220

**பொருள் :—** சருவாங்க வாதப் பிணியில் உடல் முழுமையும் நொந்து முற்றிலும் நடக்கவியலாதாய் விடும். சத்தி வாத நோயில் வயிற்றில் பொருமல் கண்டு வாந்தி உண்டாகும்; நாக்கு மரம் போல ஆய்விடும். பிரசண்ட வாதத்தில் உடல் மரம் போலத் திமிர்த்துக் காணும், உடல் வளையாது. புறங்காலும் முதுகும் தோளும் நீர்க்கண்ட வாதத்தில் எரிவு கண்டு இருக்கும்.

மாறுவாத மாறுபாகமாய்க் கால்கைகளைய வலித்துக் கொள்ளும்
மீறுசன்னிவாத முகம்வேர்த்துடம்பு கடுத்து மயிர்க் கூச்சை
[யாகும்
சீறுமகோதர வாதம் வயிறு பொருமி மேலுப்பிச முண்டாகும்
கூறு சக்கிர வாதம் நடக்கில் சுழற்றிக் கிடக்குங் குறிகள்
[தாமே. 221

**பொருள் :—** மாறுவாதத்தில் மாறுபாகமாய்க் கால்கையை வலித்துக் கொள்ளும். சன்னி வாதத்தில் முகத்தில் வியர்வை காணும்; உடலில் கடுப்பும், மயிர்க் கூச்சமும் காணும். மகோதர வாதத்தில் வயிற்றில் பொருமலும் மேல் மூச்சும் காணும், சக்கர வாதத்தில் நடக்கும் போது ஆளைச் சுழற்றிக் கீழே கிடத்தும் (தலைச்சுற்றல் காணுதென்பது குறிப்பு).

சூந்திர வாத மூலாதாரத்தில் பவுத்திரமாய்க் கிருமியுண்டாம்
ரத்த மூலவாத மடிபுறப்பட்டே நடுக்கு மசனஞ் செல்லா
[தெத்திரமாய்
முயலக வாதஞ் சலங்கண்டால் தீகண்டா லெடுத்துப் போடுங்
கோத்த ரத்த வாய்நீர் நுரையாய் மெய்மறக்க விக்குமந்தக்
]கொள்கையன்றே. 222

**பொருள் :—** சூத்திரவாத ரோகத்தில் மூலாதாரத்தில் பவுத்திரம் (ஆனரூஷ) அல்லது பகந்திரம் என்னும் நோயும் கிருமிகளும் உண்டாகும். இரத்த மூலவாதத்தில் அடிவெளித் தள்ளும்; உடலில் நடுக்கல் தோன்றும், உணவு செல்லாது. முயலக வாதமென்னும் நோயில் நீரையோ தீயையோ கண்டவுடன் உடலைத் தூக்கித் தூக்கிப் போட்டு வலிப்புண்டாகும்; வாயில் இரத்தம் கலந்த நுரையைத் தள்ளவைக்கும்; உணர்விழந்த நிலையை உண்டாக்கும்.

கூனிய வாதங் கண்டவுடம்பு கடுப்புந் துயிலாத தூக்கமாகும்
மானதனுர் வாதம் புறவலிப்பாகும் பற்கிட்டும் நரம்பு தோன்றும்
வீனிமையாய் உள்வாதம் வளைந்து நரம்பு தோன்றி வலிக்குஞ்
[சற்றறிவு கேடாம்
றனியிமைகள் மேற் கண்ட வாத மிருந்தாற்போல் அழும் வலிக்கு
[மியற்கை யன்றே. 223

**பொருள் :—** கூனிய வாதப்பிணி கண்ட உடலில் கடுப்புக் காணும்; தூக்கம்வராது. தனுர்வாதம் புறவலிப்பாகும்; பல்கிட்டிக் கொள்ளும்; நரம்புகள் புடைத்துக் கொள்ளும். உள்வாத மென்ற நோயில் அங்கங்களில் வளைவு தோன்றி வலியுண்டாம்; அறிவு சிறிதளவு பழுதுபட்டுவிடும். இமையின் மேல் கண்ட வாத நோயினர் வலியின் காரணமாக இருந்தாற் போல் இருந்து அழுவது இயல்பாகும்,

குண்டல வாதங் குடலைப்பற்றி வயிறெலாம் நோகுங் குலைநடுக்கும்
]நின்று
கண்டல மாங் கபால வாதம் பீனச்ச வாதம் தாயநெடு நாட்
[செல்லும்
மண்டு கேசவாத மானைத்தோல் போலுடம் புதிமிரமாகும்
திண்டுலவு யெமவாதம் விக்கலா யெடுக்கு மெனச்
[செப்பினோமே. 224

**பொருள் :—** குண்டல வாதமானது குடலைப்பற்றிக் கொள்வதால் வயிறு முழுமையும் வலிக்கும்; குடலிலே நடுக்கம் காணும்; முள்ளைக் கற்றையாகக்கட்டி வயிற்றில் அப்பியது போன்ற வலி காணும், (கண்டலம்=முள்ளி) கபாலவாதமும் பீனிசவாதமும் குணமடைய நெடுநாட்செல்லும். கேசவாதம் என்ற நோயில் உடலில் யானைத்தோல்போலத் தடிப்பும் திமிரும் உண்டாகும். எமவாதம் என்ற நோயில் விக்கல் மிகுதியாய்க் காணும்.

குலேவாதம் வயிற்றிலிரு புறந்தோறும் புறமா றிட்டுத் தோலிறுகி
மலேவாக நரம்பிசித்து அரோசிகமாய் அன்ன மிறங்காது
[கொள்கையாதல்
தலேயான சூட்டுவாதம் பிரமேகமாய் விந்துப்போல் விழும்
[சேட்டும மாயினிமையாகி
கலேவான மலட்டுவாதங் கெற்பத்தை யபகரிக்கு சீத வர்த்தனே
[யாகாதிதனே நீ கண்டுகொள்ளே. 225

**பொருள் :—** குலேவாதமென்ற நோயில் வயிற்றின் இரு புறமும் மாறி மாறித் தோலிறுகும்; நரம்பிசிவு காணும்; சுவை தோன்ருது; உணவு செல்லாது. சூட்டு வாதத்தில் பிரமேகம் தோன்றும்; நீர்த்தாரையில் விந்து போல ஒழுகும். சேத்தும மாயின் வாயில் இனிப்புக்காணும். மலட்டுவாதத்தில் கருக் கலேந் திடும், அபகரிக்கவும்படும். சீதளம் மிகுதல் இந்நோய்க்குப் பொருந்தாது.

சுரோணித வாதம் பிரவிடையான போதே தொடுக்குந்
[துடர்ந்து நோகுங்
கிருணிகீர்த்தி வாத மெனச் சரீரத்தை யுலர்த்துங் கேச
[வாதந்தான்
பிருணி யெனச் சரீரத்தில் அங்கங்குந் தடிக்கு மந்த பேதஞ்
[சொன்னேங்
குரோணி குணங் குலேவாதம் வலித்து வேர்த்துக் குறுகப்
[பிடிக்குந் தானே. 226

**பொருள் :—** சுரோணித வாதநோயில் பெண் வீட்டு விலக்குக் கண்ட போதிலிருந்து தொடங்கித் தொடர்ச்சியாக வலி காணும். கிராணி கீர்த்தி வாதத்தில் மிகுந்த பேதி காண்பதால் உடல் உலர்ந்திடும். கேசவாதமென்ற பிணியில் உடலில் ஆங்காங்குத் தடிப்புகள் காணும். இதை முன்னமே 215-ம் பாடலிலும் கூறியுள்ளோம், குலேவாத மென்ற பிணியில் குலே யின் உள்ளளவு குறுக்குவதால் காணும் வலி தாங்காது உடல் வியர்க்கும்.

நடுக்குவாதமுடம்பை நடுக்கும் நெடுநா ளிருந்தா லெழும்
[பொட்டாது
தொடுக்குமற்ப வாதமுண்ட அசனஞ் சீரணித்துத் தொப்புளேயுஞ்
[சுத்தியே னேவுண்டாகும்
முடுக்குமுலேவாதம் முலே வீக்கமதாய்த் திரண்டு டைந்து
[முக்கரிக்குந்
தடுக்குஞ்செலவாதம் மலந்தனேக் கட்டித் தீய்ந்து வீழும் செகத்து
[ளோர்க்கே. 227

**பொருள் :—** நடுக்குவாதப் பிணியில் உடல் முழுமையும் நடுக்கல் காணும். இது நாட்படநாட்படப் பிணியாளியை எழ வொட்டாது. அற்பவாதமென்னும் பிணியில் உணவு செரியாமல் தொப்புளைச் சுற்றி வலியுண்டாம். மூலவாதத்தில் மூல முழுமையும் வீக்கங்கண்டு உருண்டை வடிவத்தைப் பெற்றுச் சீழ் ஒரு புறத்தே திரண்டு பின் உடைந்து சீழைச் சொரிந்திடும்.

அத்திவாதம் நாக்குமரம் உடம்பிளைக்கு மத்தி நோவாம்
சித்துவஞ் சிவாதம் நித்திரையில் வெகு மிகுதி யன்னஞ் செரியா
[தென்றும்
நித்தவிடைவாத மலங்குறைந்து தானெழும்பாது நினைவுவேறும்
முத்தஉலர்த்துவாத மனுதினமு முடம்புளைந்து தாக முண்டாம்
வித்தகமாய் அதனை நீயறிய வாய்ந்த வேதத்தின் படித்தமிழாய்
விளம்பினேனே. 228

**பொருள் :—** அத்திவாதத்தில் நாக்கு மரம் போல இருக்கும்; உடல் இளைக்கும்; கண்வலி உண்டாகும். வஞ்சிவாதம் என்னும் பிணியில் உறக்கம் மிகவும் காணும்; உண்ட உணவு செரியாது. விடைவாதத்தில் மலம் குறைந்திடும்; எழுந்து உட்காரவோ நிற்கவோ இயலாது; நினைவு மாறுபடும். அஃதாவது கவனக் குறைவு (மறதி) ஏற்படும். உலர்த்து வாதம் என்னும் நோயினர்க்கு உடலில் வலி மிகுதியாகக் காணும். நீர் வேட்கையும் எரிச்சலும் உண்டாம்.

மரவாதமுடம் பிளைக்குஞ் சாலவுடம்பில் திமிர மதாய்ச்சிரங்
[குண்டாகும்
துறவாதே உண்டிகெடு மேலிளைப்பாஞ் சோர்வாகுந் துயிலாது
[தசையுண்டாகும்
மறவாணடு காமவாதம் வயிற்றில் வாழைக் காய்போலக்
[கிடக்கும்
புறவாதம் உண்டிகெடும் வயிறு பிரண்டு நோயிதன் குணம்
பிறந்தவாறே. 229

**பொருள் :—** மரவாதத்தில் உடல் இளைப்புக்காணும்; உடலில் மிகுந்த திமிர் (மரம் போன்ற உணர்வில்லாத பாகங்கள்) கொண்ட இடங்கள் உண்டாகும்; சிரங்கு (ஒரு வகைக் குட்டம்) உண்டாகும்; ஆகாரம் ஏலாது; மேல் மூச்சுண்டாம்; தூக்கம் சரியாக வராது, அயர்வுண்டாகும். நடுக்காம வாதம் என்னும் நோயில் வயிற்றின் நடுவில் வாழைக்காயைப்போல இறுகிக் கடின மாக இருக்கும். புறவாத மென்ற பிணி கண்டவர்க்கு உணவு உண்ணவியலாது வயிற்றில் புரள்வது போன்ற வலியுண்டாகும்.

கிடைவாத முடம்பெல்லா மதைத்து வீங்கிக் கிடைகாட்டு மெழுந்
[திருக்க வொட்டாதென்றும்
புடைவாத மங்கங்கு புடைத்து வீங்கிப் புண்ணுக்கி யாருதே
[நெடுநாட் செல்லுங்
கடைவாதம் பிறள்வாதம் கடுக்குமிக நடுக்கமுமாய்க் கனத்துக்
[கொள்ளும்
மடைவான எண்பத்தோர் வாதஞ்செய்யு மதன் குணங்கள்
[அறிவோர்க ளறிவுளாரே. 230

பொருள் :— கிடைவாதம் என்னும் நோயில் உடல் முழுமையும் வீக்கம் கண்டு படுக்க வைத்து விடும்; எப்போதும் எழுந்திருக்க வொட்டாது; புடைவாதப் பிணியில் ஆங்காங்கு வீங்கிக் கட்டியாகி உடைந்து புண்ணுகி ஆறுவதற்கு நெடு நாள் செல்லும். கடைவாதம், பிறள்வாதம் ஆகிய இரண்டு நோய்களிலும் உடல் கடுக்கும்; நடுக்க முண்டாகும். இங்ஙனம் குறிகுணங்களைக் காட்டும் எண்பத்தொரு வாதப் பிணிகளின் குறிகுணங்களைத் தெரிந்தவர்கள் அறிவுள்ளவர்களாமே.

## வாத நோய்க்கு எண்ணெய்

நத்தைச் சூரி குதிரைவாலி நல்ல விடத்தேர் நாயுருவி
உத்ததாளி வேப்பம் வேர் உள்ளி வசம்பு மிவைகூட்டிச்
சுத்தமான காரெள்ளெண் ணெயில் சுவற வெரித்து மேல்பூசக்
குத்திக் குடையும் வாதங்கள் குதியைப் பற்றின கூன் கடுப்பு
எற்றிக் கொள்ளும் வாதங்கள் எண்பதுக்கும் எண்ணெயிதே.

பொருள் :— நத்தைச்சூரி, முதியார்கூந்தல், விடத்தேர், நாயுருவி, உத்தாமணி, வேம்பின்வேர், பூண்டு, வசம்பு இவைகளை விதிப்படி கூட்டிக் காரெள் தைலத்திலிட்டுக் காய்ச்சி வடித்து மேலுக்குப் பூசக் குத்தலும் குடைச்சலும் கூடியதான வாத நோய்களும் குதிவாதமும் கூன்வாதமும் மற்றுமுள்ள எண்பது வாதங்களும் குணமாகும்.

## சுரோணித வாதத்துக்கு

எருக்கிலை வேலை நொச்சி புளியிலை சவரிக் கொத்து
நருக்கிய நாலிலொன்று கொள வெள்ளாட்டுப் பா
லுருக்குமா மணக்கி னெண்ணெய் ஒன்றுடன் கலந்து காய்ச்சி
சருக்கெனத் தேகத்திற் பூசத் தூரப்போஞ் சுரோணித வாதம்.

**பொருள் :**— எருக்கன் இலை, வேளை, நொச்சி, புளி, சவரி இலை விதிப்படி நாலிலொன்ருக வற்றக் காய்ச்சிய குடிநீருடன் வெள்ளாட்டுப் பால், சிற்ருமணக்கெண்ணெய் சமமாகக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி உடலில் பூசினல் சுரோணித வாதம் தீரும்.

சங்கங்குப்பி தழுதாழை குமிழம்பழம் சவரிபுளியிலை யெருக்கு
[நொச்சி
இங்கிடுஞ் சாருமணக் கெண்ணெய் நாழியீனும் வெள்ளாட்டுப்
[பாலதுவு நாழி
இங்குவற்றக் கலக்கி வெந்து வடித்த எண்ணெயிது மெய்யில்
[மத்திக்கயிளைக்கும் வாதம்
எங்குமொக்கச் சுரோணித மாயிருந்த வாதம் எண்பதுக்கு மிது
[செய்யீர்காலத் தாலே. 233

**பொருள் :**— இசங்கு, தழுதாழை, குமிழம்பழம், சவரிப் பழம், புளியிலை, எருக்கின்இலை, நொச்சிஇலை, இவைகளின் சாறுவகைக்கு ஒருநாழி, ஆமணக்குநெய்யும் வெள்ளாட்டுப் பாலும் சமமாகக் கூட்டிக் காய்ச்சி வடிகட்டிய தைலத்தை உடலில் தடவித் தேய்த்திடில் இளைப்பைத்தரும் வாதநோய்கள் தீரும். (வாதநோய்க்கு இளைப்புண்டாகும்.)

## வாத நோய்க்கு வேது

காலத்தால் தழுதாழை எருக்குநொச்சி காடியிலே யிடித்து வெந்த
[வேதுதன்னை
ஏலமே மதித்த வெந்நீர்மெய்யி லிதுபொறுக்க விட்டு மத்தித்தால்
சாலவே சந்துபற்றி விடாதவாதஞ் சரீரமெங்குங் கலந்துடம்பை
[முடக்கு வாதம்
மூலமே போமென்று முன்னேர்சொன்னர் முடுகவிது செய்யீர் நீர்
[காலத்தாலே. 234

**பொருள் :**— தழுதாழை, எருக்கு, நொச்சி இவைகளின் இலைகளை நசுக்கிக் காடியிலிட்டுக் காய்ச்சினல் எழும் ஆவியை உடலில் படும்படி செய்து (வேது பிடித்தல் அல்லது வியர்வையா வதற்காக ஆவி பிடித்தல்.) பிறகு உடலை முறைப்படி பிடித் தைலம் தடவித்தேய்க்க வேண்டும். முட்டிகளைப் பற்றிய நீங்காத வாதப் பிணிகளும் உடல் முழுமையும் பரவி அங்கங்களை முடக்கு விக்கும் வாதப் பிணிகள்யாவும் வேருடன் அற்றுப் போகும். இது முன்னேர் கூறிய முறையாம். காலந்தாழ்த்தாமல் வேளையோடு இதை உபயோகிக்க வேண்டும்.

கொற்ருன் பிரண்டை வேளைநொச்சி குருட்டுக் கொழுஞ்சி
[சின்னியிலை
சிற்ரு மணக்கி னிலையுடனே சேர்த்து வைத்துக் காடியிலே
உற்ற போதே வேதுகாட்ட உடலில் வாத மெண்பதும்போம்
மற்ரு முரைத்தோம் அற்ருனை அரிய மருந்து சொன்னேமே. 235

பொருள் :— கொத்தான், பிரண்டை, நல்வேளை, நொச்சி, கொள்ளுக்காய்வேளை, சிறுசின்னி, சிற்ருமணக்கு இவைகளின் இலைகளை அரிந்து காடியிலிட்டுக் கொதிக்கச் செய்து வியர்வை காட்ட வாதநோய்கள் எண்பதும் தீர்ந்திடும்.

## வாத எண்ணெய்

காதும் வாத சுரோணிதமாய்க் கருத்தில் முடங்கிக் கிடவாதே
நீதி நிம்ப மேரண்டம் இலுப்பை குருந்து புங்கம்நெய்
ஈதி லிட்டு வேளைச்சா றிருக்கக் குழைத்து வெள்ளாட்டுப்பால்
வாத வாத மெண்பதும்போம் வருந்தி எண்ணெய் வெந்திடிலே.

பொருள் :— வேம்பு, சிற்ருமணக்கு, இலுப்பை இவைகளின் தைலத்தைச் சமமாகக் கலந்து அதில் நல்வேளைச்சாறும் வெள்ளாட்டுப் பாலும் தனித்தனி மேற்படி தைலத்தைக் கூட்டிச் சம அளவாகச் சேர்த்துப் பதமாகக் காய்ச்சிப் பிடித்தைலமாகவும் காதுகளுக்கு இடும் சொட்டுத் தைலமாகவும் பயன்படுத்த எண்பது வாதப் பிணிகளும் தீரும்.

## வாதக் கரப்பனுக்கு எண்ணெய்

வாத கரப்பன் பற்றிற்றென்று வருந்தி முடங்கிக் கிடவாதே
வேதை வேளை நொச்சி கொற்ருன் சிற்ரு மணக்கவுரி
வேது மாகும் வேறிலை வெள்ளாட்டு நீர்பிழிந் தவதிற்
பாதிபாலும் பாதிஎண்ணெயும் வேக விட்டி டுவீரே. 237

பொருள் :— வேளை இலை, நொச்சியிலை, முடக்கொற்ருன் இலை, ஆமணக்கின் இலை, அவுரி (நீலி) இலை இவைகளைச் சமனாய் எடுத்து அரித்து வெள்ளாட்டு நீரிலிட்டுக் கொதிக்க வைத்து அந்த ஆவியை நோயுள்ள இடங்களின் மேல் படச் செய்தால் வாதக் கரப்பன் விலகும்.

மேற்படி சரக்குகளை மேற்படி நீரிலிட்டு வேகவைத்துப் பிழிந்த நீரின் அளவுக்குப் பாதியளவே வெள்ளாட்டுப் பாலும் சிற்றுமணக்கு எண்ணெயும் சேர்த்துத் தைலமாகக் காய்ச்சி வாதக் கரப்பன் உள்ள இடங்களில் மேற் பூச்சாக உபயோகிக்க வாதக் கரப்பன் தீரும்.

எருக்கின் வேர்த்தோல் பூச்சக்காய் சசாயமிட்டு யிதனெ
[டொன்றுப் காய்ந்த கசாயத்துல்
முருக்கிலை வேளைச்சாறு நேர்கலந்து வெள்ளாட்டுப்பால் மூன்றி
[லொன்று கொண்டு
சுருக்குமா யிதிற்பாதி எண்ணெய் விட்டுத் தொகுதியாய் வெந்த
[எண்ணெய் யகம்புற முடலிட
வருத்தமாய் முடங்கியிடுங் கரப்பன் வாத மெண்பதுக்கு மிதுவெ
[யெண்ணெய் சொன்னேமே. 238

பொருள் :— எருக்கின் வேர்ப்பட்டையும் மணிப்புங்கன் காயின் மேல்தோலும் சம எடையாய் எடுத்து முறைப்படி குடி நீரிலிட்டு இறுத்து வடித்து வடித்த குடிநீரின் அளவே முருக்கிலைச் சாறும் வேளைச்சாறும் கலந்ததில் வெள்ளாட்டுப் பால் குடிநீரின் மூன்றிலொரு பங்கும், குடிநீரின் அரைப்பங்கு சிற்றுமணக்கு எண்ணெயும் விட்டுக் காய்ச்சிப் பதத்தில் வடித்த தைலத்தை உட்கொண்டும் மேலுக்குப் பூசியும்வர வாதமெண் பதும் விலகும்.

## தேங்காய்த் தைலம்

முற்றிவற்றுத் தேங்காய் நீர்களைந்து முதுகள்ளிப்பா லிந்துப்புச்
[சவுக்காரத்தைக்
குற்றமிலாச் சேர்த்தடைத்தங் கோளேந்தித்து குலவு கசபுட
[மிட்டங் கரைத்தெடுத்து
உற்ற மஞ்சள் குந்திருக்கம் வெள்ளாட்டுப்பால் உறக்கலக்கி
[யிருநாழி யெண்ணெய் வெந்து
சற்றேயுட் கொண்டு மெய்யில் நிறையப்பூசில் சலிக்குமெண்பது
[வாதஞ் சளைத்துப்போமே. 239

பொருள் :— முற்றின தேங்காயின் முளைக்கண்ணைத் திறந்து நீரை ஊற்றிவிட்டு அதனுள் முதிய சதுரக் கள்ளியின் பாலில் இந்துப்பு, சவுக்காரம் இவ்விரண்டையும் தூள்செய்து கலந்து ஊற்றி நிறைத்து வாய்க்கு அடைப்பான் ஒன்றடைத்து

முழுதும் நன்கு மூடி ஏழு சீலைமண் செய்து கெசபுட மிடவும். அது ஆறினபின் கவனத்தோடு எடுத்துக் கவசத்தைப் பிரித்து உள்ளே இருக்கும் மருந்துடன் மஞ்சள் தூள், பூனைக்கண் குங்கிலியம் சமனுய்க் கலந்து வெள்ளாட்டுப் பாலால் அரைத்து இரு நாழி சிற்ருமணக்கு எண்ணெயில் கலக்கிக் காய்ச்சி, அளவுபடி உட்கொண்டும், மேலுக்குப் பூசியும் வர எண்பது வாதப் பிணிகளும் தீரும்.

### பீச்சு செய்ய தைலம் (Enema)

அரியவாத எண்ணெய்களில் அமராதா கிலதுவே யுட்கொண்டு
உரிய புற எண்ணெயினுல் தாரையேழு நாழி விட்டங்
கரிய வத்தி கட்டிடுகி லரிய வாதம் விட்டோடும்
பெரிய சிகிச்சை சொன்னேம் நாம் பேணியறிந்து செய்திடிலே.

**பொருள் :—** அருமையாகிய வாத எண்ணெய்களை அருந்தியும் பூசியும் வாதப்பிணி தீராதாகில் அதற்குரிய புறஎண்ணெய்களைக் கொண்டு தாரை ஒழுக்கியும், வத்தியில் செலுத்திக் கட்டியும் வரில் வாதப்பிணிகள் தீரும்.

**குறிப்பு :—** பீச்சு (Enema) செய்ய வேண்டிய நோய்களுக்குரிய தைலம் முதலானவைகளைப் பீச்சுக்கருவி என்னும் ஒருவகைக் கருவியின் துணைகொண்டு எருவாய் வழியிலும் நீர்த்தாரை வழியிலும் செலுத்தி அவ்வவ்விடங்களில் மருந்தானது தங்கச் செய்தல் பீச்சு (வஸ்தி=Enema) சிகிச்சை என்று கூறப்படும்.

### வாத சுரோணிதத்துக்கு நெய்

அன்பதின்பலஞ் சுக்குடனே அடுக்குங் காடி அன்பது நாழி
என்பதுகே ளெட்டொன்ருக்கு ஏந்திக் காச்சி வடித்ததனில்
முன்பில வங்க மிளகு மஞ்சள் மூளும் பச்சிலை யிந்துப்பு
தின்பன திப்பிலி யதிமதுரம் அத்தித் திப்பிலி ஏலமிதே. 241

**பொருள் :—** ஐம்பது பலம் சுக்கை ஐம்பது நாழி காடியிலிட்டு எட்டொன்ருய்க் காய்ச்சி வடித்து, இலவங்கம், மிளகு மஞ்சள், பச்சிலை, இந்துப்பு, அரிசித்திப்பிலி, அதிமதுரம், யானைத்திப்பிலி, ஏலம், இவைகளும்,

ஏலமிருவே ரோரொன்று முக்கழஞ்சா யரைத்துக் கொள்
கால நெய்யு முந் நாழிக்கு நாயுருவி கழஞ் சரையாய்ப்
பாலுமிருநாழி கூடவிட்டுப் பஞ்சாய் வெந்ததெனக் கேட்டுச்
சூலஞ் சுரோத குன்மமொடு சுகத்தில் நோயும் போய் விடுமே 242

பொருள் :— வெட்டிவேர், விலாமிச்சவேர் தனித்தனி மூன்று கழஞ்சு வீதம் எடுத்துப் பால் விட்டரைத்து, சிற்றாமணக்கு நெய் மூன்று நாழியுடன் கலக்கி அதில் பசுவின் பால் இரண்டு நாழி கலந்து நாயுருவி அரைக்கழஞ்சு சேர்த்துப் பதமாய்க் காய்ச்சி உண்ண சூலை, காதின் நோய்களும், குன்மமும் தீரும்.

## வாத சுரோணிதத்துக்கு எண்ணெய்

வாத சுரோணித மென்றதற்கு மாற்ற நல்ல வழியிது காண்
கோது நல்ல குளவிந்தங் கூட்டுங் கள்ளிப் பாலுழக்குப்
பாதம் பணியுங் குந்திரிக்கம் பையக் கழஞ்சரை யோரொன்று
சேதப்படாம லரைத்திதனைத் திகழும் முற்றத் தேங்காயில்
காதுங் கண்ணைத் துளைத்துள்ளே கள்ளிப் பாலுடன் மருந்திட்டு
மோதிக் கருங்கானஞ் செரிந்திட்டு முதிரப் புடமிட்டரைத்திதனை
வேத நாழியெண்ணெயுடன் வெந்தங் கிறக்கிக் கடுகுடனே
யாகமெங்கு மிதுகொண்டே யடுத்தடுத்தஞ்சு நாள் தடவி
மேவுஞ் செவிட்டிற் பாதங்கட்டும் மெய்யில் வாரும் வெந்நீரே.

பொருள் :— பூசு மஞ்சளும் குந்திரிக்கமும் (வெண் குங்கிலியம்) வகைக்கு 72 கழஞ்சு தனித்தனித் தூள் செய்தெடுத்து ஒரு உழக்குக் கள்ளிப்பாலைச் சிறுகச்சிறுக விட்டரைத்து மேற்படி பாலில் கலக்கி ஒரு தேங்காயின் கண்ணைத் திறந்து இளநீரை நீக்கி விட்டு மேற்படி கள்ளிப்பால் கலவையை அதனுட் செலுத்திக் காட்டெருவில் பெரும்புடம் போட்டெடுத்து ஒரு நாழி எண்ணெயைச் சிறுகச் சிறுக விட்டரைத்துக் கலக்கிச் காய்ச்சி வடிகட்டாமல் கடுகுடன் கலக்கி உண்டும் மேற் பூசியும் வரவும். இவ்வாறு ஐந்து நாள்கள் செய்க. காதில் சொட்டுகளாய் விடவும். இத் தைலம் தடவித் தேய்த்தான பிறகு வெந்நீரில் குளிக்கவும். இப் பாடலில் வெந்நீரை உடலுக்கு மட்டும் ஊற்றக் கூறப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## வாத சுரோணிதத்துக்கு மோர்க் கூழ்

வேறு சிலை தன்னில் நீர் வாங்கிமீண்டு குறுகப்பா
நீரது தணைவருகிலுந் தண்ணீர் வார்த்து மாகக் காச்சியதிலு
[முதுகுத்திப்

பேருகினுக்கரல் வடித்திதனைப் பேணிக் கொள்ளு மருந்திதனில் [கொள்
வருகிலு முள்ளிமிளகு கடுகு மற்று மரிசியிவை நாலும்
மோரி லொக்கக் கொண்டரைத்து ஓங்கும் புனப்புளியுங் கூட்டி [முருக்கி மதிமோராலே
முருக வெந்த மோர்க் கூழ்ப்பருகிலாப் பாவிகளென் செய்வோம் [பாறும் வாத சுரோணிதமே. 244

**பொருள் :—** பாலைப் பக்குவமாகக் காய்ச்சி பிரை குத்தி மறுநாள் அதனிடமிருந்துண்டான தயிரைச் சீலையில் கட்டித் தொங்கவிட்டு அதிலிருந்து வடியும் நீரைச் சேகரித்து அந்நீரில் தோலுரித்த வெள்ளைப்பூண்டு, மிளகு, கடுகு, அரிசி, புளி இவைகளை மேற்படி நீரால் அரைத்து அதில் கலக்கிக் காய்ச்சிப் பருகவும். இதனுல், சுரோணித வாதம் நீங்கும்.

வத்திக்கொப் பில்லை வருத்தஞ் செகுத்திடு
முத்தமத் தீர்வு உதரநோய்— மொத்தமாய்ப்
போக்கும் மலங்கிருமி புக்ககும்பி வாயுவையும்
போக்குஞ் சுரமும் புகல். 245

**பொருள் :—** பீச்சு (Enema) சிகிச்சைக்கு ஒப்பான மருத்துவம் இல்லை என்க. வருத்தத்தை உடனே ஒழித்திடும் உத்தமமான வழி இதுவே. வயிற்று நோயை உடனே தீர்த்திடும். மலத்தையும் மலக்கிருமிகளையும் மொத்தமாக வெளிப்படுத்திவிடும். வயிற்றில் செரிக்கச் செய்யும் இடத்தில் செறிந்த வாயுவைப் போக்கிவிடும். சுரத்தையும் போக்கும்.

## குடல் வாதத்துக்குக் குடிநீர்

முதியார் கூந்தல் கொடுவேலி முருங்கைக் கிழங்கு முசுமுசுக்கை
பொதியா நின்ற கொள்ளதனைப் பொருத விட்டுக்கொடிக் கழலுங்
கொதியா நின்ற வுலைதன்னில் குடிக்கக் கொடுக்கக் குடல் வாதம்
விதியாய் வந்து தோன்றிடினும் விட்டுப் போகை நிச்சயமே. 246

**பொருள் :—** அம்மையார் கூந்தல், சித்திரமூலவேர்ப் பட்டை, முருங்கைவேர்ப்பட்டை, முசுமுசுக்கை, கொள், கழற்சி வேர்; இவைகளை முறைப்படி நீரிலிட்டுக் கொதிக்கவைத்துக் கியாழமிட்டு விதிப்படி வடித்துக் கொடுக்கக் குடல் வாதம் திண்ணமாய்த் தீர்ந்திடும்.

இலைக் கள்ளியி னிலைமேலே யிலை நால் விட்டுப் பறித்து
மலைக்கு வெற்றிலை பாக்குடனே மன்னிப்பத்து நாள் தின்னக்
கலைக்குங் கைவிட் டென்றேகை கண்டமருந்து மிது தானே
குலைக்கு மிந்தக் குடல் வாதங் கூட்டுமையைப் போக்கிடுமே.

**பொருள் :—** இலைக்கள்ளிச் செடியில் நுனியில் உள்ள நான்கு கொழுந்துகளை விட்டு அதன் கீழ்உள்ள ஒரு இலையை நாளுக்கு ஒருவேளை வெற்றிலைப் பாக்குடன் மென்று தின்னவும். இப்படிப் பத்து நாள்கள் உண்டுவ்ரின் இது குடல்வாதப்பிணியை நிலைகுலையப் பண்ணும் (தீர்த்திடும்) இது கைகண்ட மருந் தென்றறிக.

### வாதக் குடிநெய்

பெருக்காவீங்கி வலிக்குமாகில் பின்னுங் கொள்ள மருந்தினிக் [கேள்
நெருக்கத் தட்டித் தழுதாழை நேரே சாறுழக் குண்டாக்கி
பெருக்க எண்ணெய் சமன் வெந்து பிலங்கா நிற்கும் வாதங்கள்
சுருக்காஞ் சாற்றி லெட்டுநாள் கொள் சொல்லிப் போம் வழி [காணேமே. 248

**பொருள் :—** பெருகிய வீக்கமும் வலியும் (வாதத்தால்) உண்டானல், தழுதாழைச்சாறும் சிற்ருமணக் கெண்ணெயும் தனித்தனி ஒரு ஆழாக்கு வீதம் சேர்த்துத் தைலம் காய்ச்சி வடித்துக் கொண்டு, அளவுப்படிக்கு மேற்படி சாற்றை முறித்துக் கொண்டு, மேற்படி தைலத்தில் சம அளவாய்க் கலந்து கலக்கி காலை வேளைகளில் மட்டும் எட்டு நாள்கள் உண்டுவர வாதப் பிணி அகலும்.

### வேறு

காதும் வாத வலியுடனே காலத் திருந்த காருளியே
மோதுங் குமிழம் பழமாயிரங் கொள் முற்ற நொச்சி தழுதாழை
ஓதும் வேரைப் பலமிடித்து தூணி நீரெட்டொன்றுக்கி
காதுஞ் சாறு மூன் ஞழி கவரியதனைக் கொதியிட்டே.

**பொருள் :—** துன்புறுத்துவதான வாதப் பிணியகல குமிழம் பழம் 1000, நொச்சி, தழுதாழை தனித்தனி 1000 பலம் எட்டுக் கொன்றுகச் சிதைத்து ஒரு தூணி நீரிலிட்டு முறைப்படி குடிநீர் செய்து வடிகட்டி ஒருதைலப் பாத்திரத்திலிட்டு அதனுடன் மேற்படி மூன்று சரக்குகளின் சாறுகளைத் தனித்தனி மும்மூன்று நாழி யூற்றிக் கலக்கி அடுப்பேற்றி.

கோதுங் கோட்டமில வங்கங் கொள்ளு மரத்தை யிலாமிச்சம்
மாது வாழு மரமஞ்சள் மாவா தோரொன் றுருபலங்கொள்
ஏது மரைத்திரு நாழி தன்னில் எண்ணெய் வெந்து நக்கியிடில்
போதும் வாதம் மெய்யதனில் போன வழியுங் காணுமே.

**பொருள்**:—மணமுள்ளகோட்டம், இலவங்கம், சிற்றரத்தை, விளாமிச்சுவேர், மரமஞ்சள், தனித்தனி ஒரு பலமாக எடுத்துத்தூள் செய்து மேற்படி சாறு ஏதேனு மொன்றை விட்டரைத்து இரண்டு நாழி எண்ணெய் (சிற்றுமணக் கெண்ணெய் என்று கொள்க.) கூட்டிப் பதமாய்க்காய்ச்சி வடித்து முறைப்படி உட்கொள்க. வாதப்பிணி போன வழி தெரியாமல் போய்விடும்.

## வேறு

ஏத்தமெருக்க பழத்தறல் சாறிரு நாழியுடன் குந்திருக்கங்
கூத்தங் குளவிந் தன்னிரண்டுங் கூசாமற் கொள் ளுறக்கழஞ்சு
மேத்த மெலிமிச்சம் பழச்சார் காடி யெண்ணெ யோரொன்றுரு [நாழி
யாத்தி வெந்த எண்ணெய் நக்க அயிலும் வாத மெண்பதும்போம்.

**பொருள் :**— பக்குவமாய்ப் பழுத்ததும் வெடிக்கும் முன்னேயுமான எருக்கன் காய்களைக் கொணர்ந்து முறைப்படி குடிநீரிட்டு வடித்தது இருநாழி, மேற்படி பழுப்புச்சாறு இருநாழி எலுமிச்சம்பழச்சாறு ஒருநாழி, காடிஒருநாழி, சிற்றுமணக் கெண்ணெய் ஒருநாழி எல்லாவற்றையும் ஒன்றுய்க்கலந்து அதில், குந்திருக்கம், கூத்தன்குதம்பை, மஞ்சள் ஆகியவை வகைக்கு ஒரு கழஞ்சாக மேற்படி சாற்றில் ஏதேனுமொன்றில் அரைத்துக் சலக்கிக் காய்ச்சிப் பழத்தில் வடித்துச் சொட்டுக் கணக்கில் சுவைத்து உட்கொள்ள வாதப்பிணிகள் எண்பதும் அகலும்.

## முப்பிணிக் குடிநீர்

விடுமே சுக்குச் சேவகன்பூடு வெட்டிக் கொள்ளு மிவையிரண்டும்
நடுமே முக்கழஞ் சொன்று நாழிநீரி லிடித்திட்டுத்
தொடுமே காச்செட் டொன்றுக்கித் தோன்று மாலை குடுத்திடுகில்
நெடுமே வாத பித்த மொடு நீடுஞ் சேற்றுமம் போய் விடுமே.

**பொருள் :—** சுக்கும், சிற்ருமுட்டி வேர்ப்பட்டையும் சம அளவாக எடுத்து நன்ருய்ச் சிதைத்து (தனித்தனிமூன்றுகழஞ்சு வீதம்) ஒருநாழி நீரிலிட்டு எட்டிலொன்ருகக்காய்ச்சி காலை மாலை கொடுத்திடில் முப்பிணி (முத்தோடம்) நீங்கும்.

### எண்ணெய்

மன்னும் வாத வலியுடனே மாய்த்து திரியு மதியிலிகாள்
முன்னங்களரில் முளைத் தெழுந்த முற்றி நின்ற உகாய் வேகுந்
தன்னுந் தைவேளை குப்பை மேனிச் சாறுங் கொழுஞ் சியதுகூட்டி
என்னுங் கரிப்பட்டை யெனு மாவிலிங்கை நன்னுதலே. 253

**பொருள் :—** களர் நிலத்தில் விளையும் உகாவேர்க் குடிநீர் தைவேளை, குப்பைமேனி, கொள்ளுக்காய் வேளை இவைகளின்சாறுகள், சம அளவாகக்கூட்டி, அதில் மாவிலிங்கப் பட்டை,

நண்ணுந்தேவ தார மஞ்சள் நாடுமுள்ளி வசம்பு சுக்கு
உண்ணுங் கழஞ்சு ஓரொன்று மோங்குமெண்ணெ யிருநாழி
தன்னிலெலும் பிச்சம் பழச்சாறு நாழி யுடனே வெந்திட்டுத்
தின்னப்பழுதா வாதந் தீருஞ் செய்யீர் நிச்சய மிதுகொண்டே.

**பொருள் :—** தேவதாரு, மஞ்சள், பூண்டுத்திரி, வசம்பு, சுக்கு ஆகியவற்றைத் தனித்தனி ஒவ்வொரு கழஞ்சு எடுத்து அரைத்து மேற்படி நீர்மங்களுடனும் ஒருநாழி (சிற்ருமணக்கு) எண்ணெயுடனும் கலந்து காய்ச்சிப் பக்குவமாக வடித்து உட் கொள்ள வாதப்பிணிகள் யாவும் தீரும்.

### எண்ணெய்

நாறுந் தும்பை தன்சாறும் நல்லா மணக் கெண்ணெய்
[குந்திரிக்கம்
கூறு மிந்தக் குளவிந்தங் குரிய சுண்ணும் பிதனேடே
ஏறும் வெய்யிலில் வட்டகை வைத்து நக்கி மெய்யிலப்பு வீரே
ஆறுங் கண்டீர் வாத மெல்லா மரிய மருந்து சொன்னேமே.

**பொருள் :—** தும்பைச்சாறு, ஆமணக்கெண்ணெய் இரண்டையும் சம அளவாகக் கூட்டி அதில், குங்கிலியம், மஞ்சள், காரமுள்ள சுண்ணும்பு இவைகளை அளவு முறைப்படி மேற்படி திரவத்திலிட்டுச் சூரிய புடம் வைத்து மேற்படி தைலத்தை முறைப்படி மேலுக்கும் பூசி உள்ளுக்கும் அருந்த எல்லாவாதப் பிணிகளும் நீங்கும்.

## எண்ணெய்

கொற்றான் கொழுஞ்சி கொடிவேலி கூட்டு மாயில் முக்குரவு
மற்றார் சாரடை மாவுலிங்கை மருந்தும் நொச்சி குறுந்தொட்டி
சிற்று மணக்க நெருஞ்சில் வீழி சேந்த வேளை சிறுவழுதிலை
முற்றார் முன்னை முதியார் கூந்தல் மூளுங் கழலிவை முற்றக்
[காய். 256

**பொருள் :—** கொத்தான், கொள்ளுக்காய்வேளை, சித்திர மூலம், (மூன்றுவகைப்பூக்கள் பூ க்ககூடிய) மூன்று வகைக் குரா, சாரடை, மாவிலிங்கு, நெருஞ்சில், வீழி, நல்வேளை, சிறுவழு தலை, முன்னை, முதியார்கூந்தல், கழற்சி, சிற்றாமணக்கு இவை களின் சமூலத்துடன்;

முற்றக்காயும் பெற்றீராகிலும் வேரு மொருபல முருக்கிநிறுத்
துற்றக்காடி யிருதூணியுட னபுகு முள்ளியும் நாற்பலமும்
வற்ற விடித்தெட் டொன்றாக்கி வடித்துக் கொள்ளுஞ் சாற்றினிற்
[கேள்
மற்றார் நொச்சியுகாச் சிவதை அருந்துஞ் சிற்றாமணக் கம்வேர்
உற்றார் நிறுத்தங் கோரொன்று ஒரு பலமாக யிடித்திட்டுச்
செற்றார் தண்ணீர் பதின்னாழி சேர விட்டொன்றாய்க் காய்ந்து
சிற்றாமணக்கு எண்ணெய் நாழி சேத்துங் கள்ளிப் பாலுழக்கே. 257

**பொருள் :—** மேற்கூறிய கழற்சியின் காயுடன், கழற் கொடியின் வேரும் தனித்தனி ஒவ்வொரு பலம் எடுத்து இரு தூணிகாடியிலிட்டுக் காய்ச்சிக் கியாழம் எட்டில் ஒன்றாகச் சுருக்கி வடிகட்டிக் கொண்டு அதனுடன் நொச்சி, உகா, சிவதை, ஆமணக்கு இவைகளின் வேர் வகைக்குப் பலம் எடுத்து முறைப் படி பத்து நாழி தண்ணீரில் இட்டு ஒரு நாழியாக வற்றக்காய்ச்சி முன்கூறிய கியாழத்துடன் கலக்கி மேலும், சிற்றாமணக் கெண்ணெய் ஒரு நாழியும், கள்ளிப்பால் ஒரு உழக்கும் மேற்படி நீர்மங்களுடன்

சேற்றுமங் கள்ளிப் பாலுழக்குச் சேருமுள்ளி யிருபலமுங்
கற்றாவின் நெய் நாழியுடன் கலந்து யிதனிற் பெருங்காயந்
துற்றார் திரிபலை திரிகடுமுடன் வெந்து வடித்து நக்குவீரேல்
பற்றாதாகில் குடல் வாதம் பறக்கு மட்ட குன்மமுமே. 258

**பொருள் :—** உரித்த பூண்டிதழ் இரண்டு பலம், பசுவின் நெய் ஒரு நாழியும் கலந்து அதில் பெருங்காயம், திரிபலை, திரிகடு இவைகளைத் துவையலாய் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி முறைப்படி உண்க. இதனுல் குடல் வாதமும், எண்வகைக் குன்மங்களும் தீரும்.

## எண்ணெய்

முற்றத்தேங்காய் முற்றினதன் பால் கொண்டு முதுகள்ளிப்
[பாலுழக்கு எண்ணெய் நாழிவிட்டு
பற்றுமஞ்சள் இந்துப்புக் குந்திரிக்கம் பதின்கழஞ்சு பொடிய
[தனிலிட்டு
உற்றுவெந்து உள்நக்கி மெய்யிற்பூசி யூறவெந்த தண்ணீர்
[மெய்க்கு விடுவீராகில்
அற்றிடும்வாத சுரோணித கரப்பன் அரியரனுணையிது
[செய்திடீரே. 259

**பொருள் :—** நல்ல முற்றிய ஒரு தேங்காயின் தனிப் பாலுடன் ஓர் உழக்குக் கள்ளிப்பாலைக் கூட்டி அதில் மஞ்சள், இந்துப்பு, குங்கிலியம் தனித்தனி பத்து கழஞ்சு வீதம் தூள்செய்து மேற்படி பாலால் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடித்த தைலத்தை முறைப்படி அருந்தியும், மேலே பூசி வெந்நீர் வார்த்துப் பிடித்து உருவியும் வந்தால் வாத சுரோணிதமும் கரப்பானும் ஒழிந்திடும். இது அரியரன் ஆணையென்பர்.

## இதுவும் எண்ணெய்

ஆயில் கொற்ருன் கொடி வேலி சாரடை மாவிலிங்கை யமுக்குரா
[நெருஞ்சி நொச்சி குறுந் தொட்டி வீழி
காயது கேள் களவ கூத்தன் வேளை சிற்ருமணக்குக் கருது சிறு
[வழுதலை வேர் காடியிரு தூணி
ஏயு முள்ளி நாற் பல மிட்டெட்டொன்ருக யிதில் விடுக மருந்து
[கடு விந்துப்பு வெண்காரந்
தேயு நுதல் மடவாளே எண்ணெயிரு நாழி செவிதாகவே
[வெந்து நக்கத்தீரும். 260

**பொருள் :—** ஆயில், கொத்தான், சித்திரமூலம், சாரடை, மாவிலிங்கு, அமுக்குரா, நெருஞ்சில், நொச்சி, சிற்ருமுட்டி, வீழி, கூத்தன், குதம்பை (மூக்கொற்றிப்பூண்டு), வேளை, சிற்ருமணக்கு,

சிறுவழுதுணேவேர், தோலுரித்த பூண்டு இவைகளைச் சமபாக மாக எடுத்து இருதூணிக் காடியிலிட்டுக் காய்ச்சி முறைப்படி கியாழமிட்டு எட்டுக்கொன்றாக வடித்து அதனுடன் இருநாழி சிற்றாமணக்கெண்ணெய் கூட்டி அதில் கடுக்காய், இந்துப்பு, வெங்காரம் இவைகளை அரைத்துக் கலக்கிக் காய்ச்சிச் சாப்பிட்டு வர எல்லா வாதப் பிணிகளும் தீர்ந்திடும்.

## குடல் வாதத்துக்கு எண்ணெய்

பையார் பம்பந் திவிபுடனே பறிக்கு நொச்சியுத் தமதாளி
கையோன் தானுந் தழுதாழை காயுஞ் சிற்றிலை யாமணக்த
கொய்யா தோரோன் றுரிகொள்ளுங் கொற்று ஞெடுவெற் றிலைச்
[சாறு
மெய்யாந் திரிகடு வசம்பு மஞ்சள் மேவுங் குழல்சேரு மான்
[குழலே. 261

**பொருள் :—** பம்பந்திராய், நொச்சி, உத்தாமணி, கையாந் தகரை, தழுதாழை, குன்றி, சிற்றாமணக்கு, கொற்றான், வெற்றிலை இவைகளின் சாறுகள் தனித்தனி ஒரு உரி (இரண்டாழாக்கு) கூட்டி, அதில் திரிகடுகு, வசம்பு, மஞ்சள், கழற்சி வேர்ப் பட்டையும்.

சேருமான் கழலுங் கழல் பருப்புஞ் சேரக் கழஞ்சரையோ
[ரொன்று
வாரு மெண்ணெய்க் கிருநாழி வருத்துங் கள்ளிப் பாலுழக்கு
தீர வெந்த யெண்ணெய் நக்கத் தீருங் குடலில் வாதமது
சோர்கிப் போகும் வழிகாணேம் சொன்னேஞ் சொன்னேஞ்
[சொன்னேமே. 262

**பொருள் :—** கழற்சிப்பருப்பு, ஒவ்வொன்றும் அரைக் கழஞ்சு வீதம் எடுத்துத் துவையலாய்ச் சேர்த்து இருநாழி எண்ணெயும் ஓர் உழக்குக் கள்ளிப்பாலும் சேர்த்துக் காய்ச்சி வடித்த தைலத்தைப் பருகக் குடல் வாதம் தீரும்.

**குறிப்பு :—** சிற்றிலை என்பதைச் சிலர் கடுமரம் (கடுக்காய் மரம்) என்றும் சிலர் நெய்ச்சிட்டிப் பூண்டு எனவுங் கொள்வர்.

## குடல் வாதத்துக்குக் கியாழம்

கழல்மணி வெள்ளை யுள்ளி கடியதோர் முருங்கைத் தோலு
மழலினில் விஞ்சு சுக்கு மகிமையால் காய்ச்சிக் கொண்டால்
குழலிடை யோசை போலே குமிறிடுங் குடல் வாதங்கள்
பழகிய சூலை குன்மம் பாய்குறி கொள்ளு முன்னே. 263

**பொருள் :—** கழற்சிப் பருப்பு, தோலுரித்த வெள்ளைப் பூண்டுத்திரி, முருங்கைவேர்ப்பட்டை, தோல்நீக்கிய சுக்கு இம் மூன்றையும் சமமாய் எடுத்து விதிப்படி கியாழஞ் செய்துண்டால் குடல் வாதம், பழைய சூலைநோய்கள், குன்மம் ஆகியவை தீரும்.

**கைவந்தது :—** மேற்படி மருந்துச் சரக்குகளைக் கோழி முட்டை வெண் கருவாலரைத்து வடைபோல வில்லை செய்து சிற்றுமணக்கு நெய்யில் சிவக்க வேகவைத்துக் காலையில் மாத்திரம் சிறிது வெதுவெதுப்பாய் இருக்கும்போதே அந்த வடையைத் தின்று மேற்படி சுட்ட சிற்றுமணக்கெண்ணெயையும் உட் கொள்ளவும். உப்பு, புளி நீக்கிய— பத்தியம். விதை வாதம், நீரண்டம், அடிபட்ட விதை வீக்க வலி முதலியன தீரும். மேற் படி மருந்தை வாரம் ஒரு முறையாக 3, 5, 7 வாரங்கள் உட் கொண்டால் வீங்கிய அண்டங்களும் சுருங்கும்; மேற்கொண்டு வீக்கம் அதிகரிக்காமலும் இருக்கும்.

## எல்லா வாயுவுக்கும் குடிநீர்

முதியார் கூந்தல் கொடிவேலி முருங்கைவீழி வாலு ழுவையுங்
கொதியாங் கழல்வேர் சாரணையுங் கூட்டி நீர்வேலிப் பருத்தியுடன்
முதிதான சுக்குப் பெருங்காயம் மூண்டே சாய்ச்சி முழங்கிடவே
சதியாய் நீர்தா மருந்துவீரேல் சமத்து வாய்வு மேகிடுமே. 264

**பொருள்: —** முதியார் கூந்தல், சித்திரமூலி வேர்ப்பட்டை முருங்கை வேர்ப்பட்டை, வீழி, வாலுழுவையரிசி, கழற்சிவேர், சாரணைவேர், உத்தாமணி, சமூலம், சுக்கு, பெருங்காயம் இவைகளை முறைப்படி குடிநீர் இட்டு அதை அருந்தினல் எல்லா வாதப் பிணிகளும் தீரும்.

## நரித்தலை வாதத்துக்கு எண்ணெய்

விடத்தேர் பிரண்டை யோரொன்று மீருமல் தேசிப் பழத்தளவு
தடத்தே யரைத்துப் பனைவெல்லந் தானேர் பொடிகள்
[கலந்திட்டு
நடத்தே மிகவு நல்லெண்ணெய் நன்ருய்க் காய்ச்சிமுக் கழஞ்சு
[கொள்ள
நடந்தே போம்நரித் தலை வாதம் நாமெய் யறிந்து செய்தோமே.

பொருள் :— விடத்தேர், பிரண்டை இரண்டையும் சம அளவாய் எடுத்துத் தனித்தனியே எலுமிச்சம் பழத்தளவு அரைத்து உருண்டை செய்து இரண்டும் சேர்ந்த எடைக்குப் பனைவெல்லத் தூள் கலந்து அடுப்பேற்றிக் கிண்டி, தேவைப்பட்ட அளவு நல்லெண்ணெய் ஊற்றிக் கையில் ஒட்டாத பக்குவமாய்க் கிளறி எடுத்து வைத்து வேளைக்கு மூன்று கழஞ்சு வீதம் உட் கொள்ள நரித்தலை வாயு தீரும்.

## இருபத்தொருவகை அழலின் (பித்தம்) பெயரும் இயல்புகளும்

அழல் பித்தஞ் சுழல்பித்தம் அளவன்றி மயக்கும் பித்தம்
கிழல் பித்தம் மிருளாய பித்தம் கீர்த்த மதங் கொண்ட சித்த
[விப்பிரமை பித்தம்
விழலா மலபித்த மஞ்சகர பித்தம் விஞ்சு சுளிப்பித்த மென
[வினவிச் சொன்னூர்
கழுப மலரனைய குவிமுலை நன்மாதே கடுகிய தோர் பித்த மின்னங்
[கூறுவேனே. 266

பொருள் :— 1. அழல் பித்தம், 2. சுழல் பித்தம், 3. மயக்கும் பித்தம், 4. குழல் பித்தம், 5. இருள் பித்தம் 6, மிக்கபுகழ் வாய்ந்த (வலிய) மதங் கொண்ட சித்த விப்பிரமைப் பித்தம் 7. ஆமல பித்தம், 8. அஞ்சகரப் பித்தம் 9. சுளிப் பித்தம். இன்னும் பித்தத் தின் வகை கூறுவேன்.

ஆவறு பித்தம் நேத்திர பித்தமு மவுனமன்றிப்
பாவரு சுக்கில பித்தம் மதிபித்தம் விரண பித்தம்
மேவரு ஓடல் பித்தம் விதனம் போலனத்து பித்தம் வினவுங்
[காமாலைக்
கோவறு தன்னிளம் பித்தம் சத்திபித்தம் கொடிதான அறிவழிந்த
[பித்தந் தானே. 267

பொருள் :— 10. ஆவறுபித்தம், 11. நேத்திர பித்தம், 12. மவுனபித்தம், 13. சுக்கில பித்தம், 14. மதிபித்தம், 15. விரண பித்தம், 16. ஓடல் பித்தம், 17. வேதனையுடன் அனத்தும் (நிலைகொள்ளாத) பித்தம், 18. காமாலைப் பித்தம், 19. இளம்பித்தம், 20. சத்திபித்தம் 21. அறிவழிந்த பித்தம் (இது மிகக் கொடிதென்க)

பித்தத்தில் பிலமுண்டாயிடும்பு பித்தம் பிறவாத நோய் கொள்ளும்
[பித்த மென்று
சுத்தமதா யிருபத்தோ ரொன்றே பித்தஞ் செகமறியக்
[குணமிதனைத் தெரிந்துகொண்டு
உற்றதொரு செந்தூரபற் பங்களாலே உகந்த ரசாயன வகையில்
[ஒன்றுக்கொன்றாய்
வித்தகமா மருந்து செய்யில் பித்தம் போகும் விதமுடையீரிதன்
[குணத்தை விளம்புவேனே. 268

பொருள் :—பித்தத்தில் பித்தம் மிக்க இடும்புப் பித்த நோய் என்று கூறப்பட்ட இருபத்தொரு நோய்களையும் அவைகளின் குணங்களையும் தெரிந்துகொண்டு அவைகளுக்கு ஏற்றதான செந்தூரம், பற்பம், இரசாயனவகைகளால் மருத்துவம் செய்தால் எல்லாப் பித்தப் பிணிகளும் தீர்ந்திடும்.

அழல் பித்தமுடம் பெல்லா மனலாய் வீசும் அதிகமதாய்த் தாகமு
[மிகவுண்டாகும்
சுழல் பித்தம் நடக்கையிலே கிறு கிறென்று
சுற்றிவிழுக் காட்டுமன மருவறுக்கும்
பழகு மயக்கும் பித்த மடிக் கடிமெய் மறந்து மயக்கமாமே. 269

பொருள் :—அழல் பித்தத்தில் உடலில் சுடுகை மிகவாகும். அருகில் நின்றாலே அனல் வீசும். மிக்க நீர் வேட்கை உண்டாகும். சுழல் பித்தத்தில் நடக்கும் போது ஆளை மொத்தமாகச் சுழற்றிக் கீழே விழச்செய்யும்; சோற்றை வெறுக்கச் செய்யும். மயக்கம் பித்தத்தில் அடிக்கடி (ஒரே நாளில் பலதடவைகள்) மெய் மறக்கச் செய்யும்.

குறிப்பு :—இப்பாடலில் சிதைந்த மூன்றடிகளே கிடைத்துள்ளன.

இருளாக வெடுத்த பித்தங் கண்கள் ரெண்டு மூடநினைவின்றி மன
[மெழுந்திராது
உருளான கிழல் பித்த மிருதய மடைத்து நடுக்கி நினைவழிந்து
[பேசாமல் செய்யும்
மருளாத கிளர் பித்தம் பிரலாபஞ் செய்து வாய்தீர்ந்து பேசாமல்
[மனநினைவு முண்டு
தருளாமல் பின்தேறும் நினைவுற்ற தெல்லாம் தான் பேசி
[யிருக்குங்கண்டாய் தன்மைதானே. 270

**பொருள் :—** இருள் பித்தத்தில்—இருகண்களையும் மூடினால் நினைவுமாறும்; மனவெழுச்சி உண்டாகாது. கிழல் பித்தத்தில் இதயத்தில் அடைப்புக்காணும்; நடுக்கமும் நினைவிழத்தலும் காணும்; வாய் பேச ஒட்டாமற் செய்யும். கிளர் பித்தம் என்ற நோய் வாய் விட்டு மிகவும் புலம்பலுடன், அழச் செய்து பின் வாய் பேசாமல் இருக்கச் செய்திடும். ஆனால் மனத்தில் நினைவு (ஒழியாது) இருக்கும். சிறிது பொழுது சென்ற பின் தெளிவு ஏற்பட்டுத் தன் நினைவுக்கு வந்தவைகளை யெல்லாம் பேசிக் கொண்டே இருக்கச் செய்யும். இதுவே அதன் தன்மையென்று கண்டு கொள்வாயாக.

ஆகியதோர் சித்தவிப் பிரமஞ் செய்யும் அடிக்கடிதான் நினைவு
[வேருகச் செய்யும்
போகிறதோர்,சுரணமுண்டாய் மெலிவு முண்டாய் பொய்யதனை
[மென்மேலும் பொருந்தச் சொல்லும்
தாகிய தோரமல பித்த மடிவயிறுந் தானெரியு முண்டதொரு
[அன்னந்தன்னைப்
பாகிய தாய்ப் புளித்தேப்பந் தானுமிட்டுப் பண்பாக வாந்தியது
[செய்யுந்தானே. 271

**பொருள் :—** சித்தவிப்பிரம பித்தத்தில் அடிக்கடி நினைவு மாறும்படி செய்யும்; தொடு உணர்வு போகும்; உடல் மெலியும் பொய்களை மேன்மேலும் கூறும். அமலபித்தத்தில் அடிவயிற்றில் எரிச்சலுண்டாகும். உண்ட உணவைச் செரிப்பிக்காமல் புளி யேப்பத்தை உண்டாக்கும்; வாந்தியையும் எடுப்பிக்கும்.

நேத்திரமாம் பித்தமது வருகும்போது நிலையான தலைநோவாய்ச்
[சரீரம்நொந்து
தோத்திரமாய் மெய்வெதும்பி மூக்குவாயில் சுகமான அபானத்தி
[லிரத்தம்வீழும்
ஆத்திரமாய்ப் பிறவாதம் நோய்கொள்ளும் பித்தம் அரிதான
[மேகமுண்டாய் நாரியர்க்கு
வேர்த்துறக்க மானதுபோல் மெய்வெதும்பி மெலிவான அடி
[வயிறு புண்போல்நோகும். 272

**பொருள் :—** நேத்திரபித்தம் தோன்றும் போது தலைநோய் நீங்காது நிலைத்து நிற்கும்; உடல் முழுமையும் நோகும்; உடலில் அழற்சி தோன்றி மூக்கு, வாய், கீழ்வாய் ஆகிய வழிகளில் குருதி விழும். பெண்களுக்கு மேகம் உண்டாகி உடம்பெல்லாம் வியர்த்து, மெய்வெதும்பி, உறக்கத்தைப் போலச் சுணக்கத்தை உண்டாக்கும். அடிவயிறு புண்ணைப் போல நோகும்.

நோகுமது சணம்பிறந்து உதிரம்வீழ்ந்து நோக்காயப் பெரும்
[பாடு என்றுசெய்யும்
ஏகுமது சுக்கிலபித்த மிரத்தம்வீழ்ந்து எழிலாக அறிவழிக்கு
[மதுவுமன்றி
லோகமதில் சகரபித்தம் வெதுப்புமுண்டாய் குளிர்செய்து
[துயிலாமற் செய்யுங் கண்டாய்
வேகமுட னறிவழிந்த பித்தந்தானும் விகாரமுண்டாய்
[அனுபோகம் வேண்டிச்செய்யும். 273

**பொருள் :—** கணச்சூட்டை உண்டாக்கி இரத்தம் வீழும் படியான பெரும்பாடென்ற நோயைத் தோற்றுவிக்கும். சுக்கில பித்தத்தில் நீர்த்தாரை வழியாகச் செந்நீர் வீழும்; அறிவு அழியும். சகரபித்தத்தில் வெப்ப முண்டாகும்; குளிர்கண்டு தூக்கமில்லாமல் செய்யும். அறிவழிந்த பித்தத்தில் இயல்புக்கு மாறுன துய்க்கும் உணர்வை உணடாக்கும்.

தொல்லுலகில் சுளிபித்த மெய்யிலேதான் சுளிசுளிவாயெரித்ததுவு
[முறங்கொட்டாது
வெல்லுவதுகடினந்தான் ஆவறுபித்தம்விதனமாய் நின்றிடத்தில்
[நிற்கொட்டாது
சொல்லுமது மறிவழிக்கு நேத்திரமாம்பித்தம் சுகமுள்ள காச
[முண்டாய்க் கண்மங்கல் செய்யும்
எல்லையில்லாச் சத்திபித்த மேகமாகி நீரிழிவுக் கிரிச்சமது
[மிகவுண்டாமே. 274

**பொருள் :—** சுளிப்பித்தத்தில் உடல் எங்கும் சுளிசுளி யென்கிற எரிவைத் தந்து தூக்கத்தைக் கெடுக்கும். ஆவறு பித்தத்தில் நிலையாக ஓரிடத்தில் நிற்கவொட்டாமல் திரியவைக்கும்; வரிசைப்படி பேசும் உணர்வை அழித்துவிடும். நேத்திரபித்தத்தில் கண்ணில் காசம் உண்டாகிக் கண்பார்வை குன்றும். சத்திபித்தத்தில் வரையறையின்றி வாந்தியை உண்டாக்கும். மேகம் இதனுடன் இணைந்ததானால் நீரிழிவோ மூத்திரக் கிரிச்சரமோ தோன்றும்.

இரணபித்தஞ் சிங்கியெனச் சிரங்கதாகி மிக்கவது மீறியே
[புண்ணுண்டாகும்
அரணைமுது போலிருக்கும் நாசிநீர்வீழ்ந்து அடிக்கொருகால்
[அடங்கியே நிற்குமென்னக்
கரணமுள யிடும்புபித்தப்பிடரியிற் பனிச்சையுண்டாய்க்
[கனக்கவே யுடைந்துமது கோவையாகும்
திரணமுள்ள மதிபித்தம் நீர்கட்டிமலங்கட்டிச் சிவப்புண்டாயஸ்தி
[யில் சுரமுண்டாமே. 275

**பொருள் :—** இரணபித்தத்தில் சிங்கி எனக்கூறப்பட்ட சிரங்குதோன்றிஅவ்விடங்களில் புண்ணுண்டாகும்; அரணைமுதுகு போலமேல்தோல்காணும்; மூக்கின் வழியாக நீர் வடிந்துகொண்டு இருக்கும்; ஒருசமயத்தில் அடங்கியும் இருக்கும். இடும்பு பித்தத்தில் பிடரியில் பனிச்சை யென்ற ஒருவகை இரண நோயை உண்டாக்கும். அது கனத்துப் பின் உடைந்து கோவை யென்ற இரண நோயாகும். மதிபித்தம் என்ற நோயில் நீர்க்கட்டும் மலக்கட்டும் உண்டாகும்; மலம், மூத்திரம், கண் முதலான இடங்களில் செந்நிறமுண்டாகும்; என்புசுரம் காணும்.

சுரமுடனே வாய்கசப்பாய் மூர்ச்சையாகிச் செகமறிய
[வாந்தியாயி ரத்தம்வீழும்
இரவுபகலுறங்காமல் வாய்குழறல் இனியவயி றெரியுமது முகத்தில்
[மங்கா
மவுனபித்தஞ் சுரமுடனே கோபமுண்டாய் வயிறுபோகித்
[தொலையாது அதிசாரமாகும்
கரகமல முடையதோர் திருவினளே கடியதொரு இளம்பித்தங்
[கூறுவேனே. 276

**பொருள்:**—மதிபித்தத்தில் வாய்க்கசப்பும் மூர்ச்சையுமுண்டாகும்; வாந்தியாகும்; அதில் இரத்தம் விழும்; இரவும்பகலும் உறங்கமுடியாமல் பேச்சுக்குழலும்; வயிற்றில் எரிச்சலுண்டாகும்; முகத்தில் மங்கு என்னும் ஒருவகைத் தோற்பிணி உண்டாகும், மவுனபித்தத்தில் சுரமுண்டாகும்; சினம் உண்டாகும்; வயிறு போகும் (மிகமிகக் கழிச்சலாகும்.) தீராத அதிசாரக் கழிச்சலாக முடியும்; கையில் தாமரையை உடைய திருப்போன்றவளே! மிகக்கடினமான இளம் பித்தத்தைக் கூறுவேன் கேட்பாயாக.

கூறுவே னிளம்பித்தம் பஞ்சைப்போலே கோகிலம்போல் தனித்
[தனியே பேசிக்கொள்ளும்
வீறுடனே தன்னைப்போல் தானேபேசி வேதித்து மனந்தேற்றி
[நிலையில்நிற்கும்
ஆறுடனே அனத்தனத்திப் பேசும்பித்தம் அதுவல்லா தெழுந்
[திருந்து ஓடல்பித்தம்
கூறியதோ ரிக்குணங்கள் கண்டுகொள்வாய் குவலயத்தில் குறு
[முனிவ னுரைத்தவாறே. 277

**பொருள் :**— இளம்பித்தத்தில் பலவீனன் போலப் பேச்சுக் காணும்; குயிலின் தொனி போலக் கீச்சென்று இருக்கும்; தனக்குத் தானே மிக்க எழுச்சியுடன் பேசிக்கொண்டும் தனக்குத்தானே சமாதானம் செய்துகொண்டும் அமைதியுறும். வருந்தி வருந்திப் பேசும்; எழுந்து ஓடும்; இக்குணங்களைக் கூறியது அகத்தியர் என்பதைக் கண்டுகொள்வாயாக.

அம்பல மமலமல் லல்பித்தம் ஆசய வாத ரேசம்
பின்புன மதமுந்தாபம் பேசிய தீத நிர்த்தம்
முன்பல கரப்பன் பித்தம் முதுவிசி அய்ய பித்தம்
வன்பிர லாபரேசம் வாருதி சிறுபஞ் சுத்தம். 278

**பொருள் :**—அம்பலம், அமலம், அல்லல் எனப்பட்ட பித்தநோய்கள், ஆசயவாதரேசம், மதம், தாபம், அதீதநிர்த்தம், கரப்பன் பித்தம், முதுவிசி பித்தம், ஐய பித்தம், பிரலாபரேசம், வாருதி பித்தம், சிறுபஞ்சுத்த பித்தம்;

சுத்தமே பரிதம் மூர்ச்சை சுப்பிர மனமே சோபம்
உத்தஅற் புதமுன் மாதம் உத்திர தம்பத் தோடும்
மற்றசந் திரசொயந்தான் தவிலியங் கபாலி பித்தம்
வித்தகர வச மென்று...... 279

**பொருள் :—** பரிதம், மூர்ச்சை, சுப்பிரமனம், சோபம், அற்புத பித்தம், உன்மாதம், உருத்திரத்தம்பபித்தம், சந்திர கொயம், கபாலி பித்தம், வித்தகார வச்சம்;

பார்சிரக் கம்பம் உச்சி ரேகமே பாத சோபம்
சீர்கடி சோபஞ் சந்திர சோபமே திமிர பித்தம்
ஆரங்க தம்ப ராகம் அதிசிறி சாங்க மாகும்
நேருமுத் திரக பித்தம் நாற்பதாய் நிதானஞ் செய்தார். 280

**பொருள் :—** சிரக்கம்பம், உச்சி ரேகம், பாதசோபம். கடி (இடை) சோபம் (சோபம் என்பது வீக்கம் என்று கொள்க), திமிர பித்தம், அங்கதம்பராகம், சிறிசாங்க பித்தம், உத்திரக பித்தம் என நாற்பது வகையாகப் பித்த நோயை வகுத்துள்ளனர்.

### பித்தம் நாற்பதுக்கும் கூழ்ப்பாண்ட நெய்

செய்தார்கூழ்ப் பாண்டச் செயல்கிருதத் தின்வகையை
நெய்யா யடும்படிதான் நேர்செப்பி— வையகத்தில்
பூசனி நெய் யென்றும் புகழ்சூ ரணம்பற்பம்
காசினியோர் நோய்தீர்க்குங் காண். 281

**பொருள் :—** (வெண்பூசனி நெய் யொன்று செய்யும் வகை விரித்தல்) அதனைப் பூசணி நெய்யென்று கூறிப் பற்பம், தூள் முதலானவைகளைக் கூட்டிக் கொடுத்து நோய்களைத் தீர்ப்பார்கள் என்று அறிவாயாக.

தீர்க்குங்காண் சீந்தில் திறந்தாழை யின்விழுது
ஆர்க்குமாம் பூசனிக்கா யந்தநீர் —காக்குமே
கொற்றுன் குமரியொடு கஞ்சத்தின் தன்வளையம்
ஏற்குங் கரும்பொடிள நீர். 282

**பொருள் —:** சீந்தில் தண்டு; தாழைவிழுது, வெண்பூசனிக்காய், கொத்தான், சோற்றுக்கற்றுழை, தாமரைவளையம், கரும்பு இவைகளின் சாறுகளும் இளநீரும்;

இளநீர் நிலப்பனை யாவிரையின் துளிர் யேகநந்தி
வளமான வேலிப்பருத்தி வல்லாரையும் வாய்த்த தண்ணட
அளகாய் அமுர்தத்தின் வள்ளியின் மூலமு மானசங்கும்
பழமாய கதலியின் மூலமும் பேய்ப்புடோல் பார்த்துரையே. 283

**பொருள் :—** நிலப்பனங்கிழங்கு, ஆவாரைத்தளிர், ஒற்றைநந்தியாவட்டை, உத்தாமணி, வல்லாரை, ஆதண்டை இலை, சீந்தில் கிழங்கு, சங்கிலை, வாழைக்கிழங்கு, பேய்ப்புடல்;

பார்த்துரையே நன்கிளி மூக்குமூலம் பகர் காலியுடன்
ஏர்த்தசிறு தும்முட்டிக் காயதன் சாறும் யிதுநாலஞ்
[சொன்றுய்ச்
சேர்த்ததி லே.ரொன்று சேருறக் குறுணி திரும்ப நெய்தான்
வார்த்திடுநீ படிநாலி லொன்றுக மருந்தினுள்ளே 284

**பொருள் :—** ஆகாசக்கருடன்கிழங்கு, பூனைக்காலி, சிறு தும்மட்டிக்காய் ஆகிய இவ்விருபது சரக்குகளின் சாறுகளையும் ஒவ்வொன்றுக்கு ஒரு சேராக மொத்தம் ஒரு குறுணிச் சாற்றைக் கூட்டி அதில் நான்கிலொன்று பசுவின் நெய் கூட்டி அம் மருந்தினுள்;

மருந்தினில் பால் பதக்கே அளந்தேவிடு மத்தியொன்றுய்த்
திருந்திய கோட்ட மதிமதுரத்துடன் தெய்வதமாம் நற்பால்
பொருந்திய பச்சிலை ரேணு கஞ்சந்தனம் போற்றுதுரு
வருந்திய மஞ்சட்டி செண்பகப்பூ லவங்கத் தோலுடனே. 285

**பொருள் :—** பசுவின் பால் ஒரு மரக்கால் கூட்டி அதில் கோட்டம், அதிமதுரம், பால்சாம்பிராணி, பச்சிலை, ரேணுகம் (கடுக்காய்), சந்தனம், இரும்பின்துரு, மஞ்சிட்டி, செண்பகப்பூ, இலவங்கப்பட்டை;

உடன்சாதிக் காயொக்க வேலமுங் கட்ட ஒளிகளுநீர்
அடர்நாகப் பூகண்டங் காலியு ரோகிணை ஆயிலப்பை
மடமாதர்ப்பூ சிற்ற மல்லிகைவேரும் மகிழ்நெருஞ்சி
அடைவா யெலும்பிச்சை கோரோசனையுடனே அறியே. 286

**பொருள் :—** சாதிக்காய், ஏலம், செங்கழுநீர்க்கிழங்கு, சிறுநாகப்பூ, கண்டங்கத்தரி, கோரோசனம், ஆயில்பட்டை, அப்பக்கோவை, மடமாதர்ப்பூ(?) சிற்றுமல்லிகைவேர், மகிழம்பூ. நெருஞ்சில், காட்டுஎலுமிச்சைவேர், கோரோசனே;

அறியே மருந்திவை யோரொன்றொரு பலமாக வரை
நெறியாகக் கஷாயமது தனிலே கரை நேர் நெருப்பில்
குறியாக வைத்தெரிநீ பதத்தில்வடி கொள்ளுளுக்குப்
பிறியாத பித்தம் பிரமேக சங்கையும் போயொளிக்கும். 287

**பொருள் :—** இவை (கற்க) மருந்துகளென அறிக. ஒவ்வொன்று ஒருபலமாக எடுத்து முறைப்படி அரைத்துக் கலக்கிப் பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்க. உள்ளுக்குச் சாப்பிட நீங்காத பித்தப்பிணிகளும் பிரமேகப்பிணிகளும், சிந்தனையின் பலவீனமும் தீரும்.

ஒளியான பூசனி நெய்யுட்கொள் பித்தமறும்
வெளியாய் மறுபித்தம் மேவாது — வளிபடுமே
சித்தக் கலக்கந் திகழும் வயிற்றெரிப்பு
சுத்தமாய்த் தீர்ந்து தொலையும். 288

**பொருள் :—** புகழ்மிக்கதான இப்பூசனி நெய்யை உட்கொள்க. பித்தப்பிணிகள் தீர்ந்திடும். மறுபடி பித்தப் பிணிகள் தொடரா. மனக்கலக்கம், வயிற்றின் எரிச்சல் தீர்ந்திடும்.

### உடம்பு எரிப்புக்குப் பூசனி நெய் (வேறு)

பூசனிக்காய் வெள்ளரிக்காய் கருப்பஞ்சாறு புதுநெல்லி நீர்வள்ளிக்
[கிழங்கின்சாறு
மூசுமுசுமுசுக்கையிளநீர் மட்டைச்சாறு இருநாழி நெய்நாழி
[தேவதாரம்
மாசரத்தை சிறுதேக்குத் திப்பிலியுங் கோட்டம் மாஞ்சியதி மதுரம்
[பச்சிலைநாகப்பூ
வேசிந்துப் பிலவங்க மேலம்பாலில் அரைத்துவெந்த நெய்
[நக்கவுடம் பெரிப்புப்போமே 289

**பொருள் :—** வெண்பூசனிக்காய், வெள்ளரிக்காய், கரும்பு, நெல்லிக்காய், நீர்வள்ளிக்கிழங்கு, முசுமுசுக்கை, வாழை மட்டை இவைகளின் சாறுகள்; இளநீர், இவை வகைக்கு இரண்டு நாழி கூட்டிக் கலக்கி அதில் பசுவின் நெய் ஒரு நாழி கூட்டி, தேவதாரம், சிற்றரத்தை, சிறுதேக்கு, திப்பிலி, கோட்டம் சடாமாஞ்சி, அதிமதுரம், பச்சிலை, சிறுநாகப்பூ, இந்துப்பு, இலவங்கம், ஏலம் இவைகளைப் பாலில் அரைத்துக் கலக்கிக் காய்ச்சிப் பதத்தில் வடித்து அருந்தவும், உடலெரிவு தீரும்.

## வேறு

உற்றூர் காண உடம் பெரித்துங் குழன்று நடந்து திரியாதே
கற்றுவின்பால் முசுமுசுக்கைச் சாறிரு நாழி பதக்குப்பால்
கற்றுழைச் சோற் றினிற் கடுக்காய் இட்ட சாறு இரு நாழியிது
வற்றுமற் காய்ச்சி செம்பாதி யாக்கி வெண்ணெய் விழுங்கிடுமே.

**பொருள் :—** முசுமுசுக்கைச்சாறு ஒரு நாழியும் கற்றுழைச் சோற்றில் கடுக்காய்த்தூளை இட்டுப் பிசைந்து இறுத்தெடுத்த சாறு இருநாழியும், பசுவின்பால் ஒரு பதக்கும் (இரண்டு மரக்கால்) சேர்த்துக் காய்ச்சிச் சாறுவற்றிப் பாலும் சுண்டியபின் வெண்ணெய்ப் பதமாய் ஆனவுடன் இறக்கி வைத்துக்கொண்டு முறைப்படி சாப்பிட்டு வர உடம்பெரிவு தீரும்.

நீலக் கருப்பஞ் சாறிள நீர் யேலம் நெருஞ்சி யதிமதுரம்
கோல வெள்ளரி வித்துடனே கூடக் கலக்கிக் காய்ந்து குடி
மூலமான வுடம் பெரிப்பு முதிர்ந்த பித்த மடமோடுஞ்
சால நல்லமருந்து சொன்னோம் சதிராய் வெந்து செய்திடிலே.

**பொருள் :—** கருப்பஞ்சாறு, இளநீர், ஏலம், நெருஞ்சில், அதிமதுரம், வெள்ளரிவித்து ஆகியவைகளை முறைப்படி காய்ச்சிக் குடிக்கவும். மூல எரிவு, உடல் எரிவு, முற்றிய பித்தமடம் என்னப் பட்ட புத்திமந்தம் தீரும்.

## வேறு

கற்ற பூசனிக்காய்க் குடலும் கருதும் ஆவாரை அல்லியுடன்
உற்ற மரை யின் வளைய முடன் ஒது நன்னாரி யின்வேரும்
கற்றுழை தக்கோலஞ் சாதிக்காய் வெந்த நெய்யை நக்க
[வெனில்
முற்கா லத்தது பித்தமும்போம் மூட்டோடேபோம் முடம்
[பெரிப்பேச. 292

**பொருள் :—** வெண்பூசனிக்காய்க்குள்ளிருக்கும் குடற் பாகத்தொடு, ஆவாரைப்பூ, அல்லிப்பூ, தாமரை வளையம், நன்னாரி வேர், கற்றாழைச் சோறு, தக்கோலம், சாதிக்காய் இவைகளை முறைப்படி கூட்டிக் காய்ச்சிய நெய்யை உண்டுவரப் பித்த நோயும், உடலில் உள்ள எரிவும் தீரும்,

## தலைச்சுழல் பித்தத்துக்கு

பாலைவேர்சிறு கீரைவேர் பொன்னாங்காணி பரியாக அரைத்து
[நெய் யிற்கலக்கி
ஏலமோடில வங்கம் அதிமதுரமும் இவையுமிதி லேயரைத்துக்
[கலக்கிக்கொண்டு
காலமே வெந்திறக்கி நெய்நக்கினால் கண்ணிலுள்ள தோடங்கள்
[விட்டுப்போகும்
மேலலவே தலைசுழற்றும் பித்தம்போகு மிதுபருகில் ஆயிழைக்குக்
கருப்பந்தோன்றும். 293

**பொருள் :—** பாலை வேர்ப்பட்டை, சிறு கீரைவேர், பொன்னாங்காணிவேர் இவைகளை (பால் அல்லது) நீர் விட்டரைத்துப் பசுவின் நெய்யில் கலக்கிப் பின், இலவங்கமும் அதிமதுரமும் அரைத்து மேற்படி நெய்யுடன் கூட்டிக் கலக்கிக் காய்ச்சி வடித்த நெய்யைத் தினம் அளவுப்படி சாப்பிட கண்ணில் தோன்றிய நோய்கள் தீர்ந்திடும். தலைச் சுற்றல் தீர்ந்திடும், மகளிர் இதைச் சாப்பிட்டு வந்தால் மலட்டு நோய் நீங்கிக் கருவுண்டாகும்,

## சீந்திற்கடுகு இளகம்

சீந்திசந் தனம் பதினாறு சிறந்த நெல்லி அதற் கிரட்டி
கரந்தவே லிலா மிச் சங் கருதியேல மிருபலமும்
வாந்த நீரு மிரு தூணி வற்றக் காய்ச்சிப் பால்குறுணி
சாந்த விள நீர் சதாவேரியும் சரிதாங் கொன்றைக் கரிப்பானும்,

**பொருள் :—** சீந்தில் தண்டு, சந்தனம் வகைக்கு 16 பலம், நெல்லிமுள்ளி 32 பலம், வேலிப் பருத்தி, விலாமிச்சு வேர், ஏலம் வகைக்கு இரண்டு பலம், இவைகளை இருதூணி நீர் கூட்டிக் காய்ச்சி வற்றவைத்து வடிகட்டி வந்த குடிநீர் ஒரு மரக்காலாக்கி, பால் ஒரு குறுணியும் இளநீர், தண்ணீர்விட்டான் கிழங்கு கொன்றை, கரிசாலை இவைகளின் சாறுகள் சமனாகவும் சேர்த்து.

கோட்டிக் கிழங்கு நரிப் பயறுங் குளிர்ந்த சந்தனங் காரகிலும்
வாட்டிய சாரலு மிலவங்கம் வரியமதுரம் புழுகு சட்டம்
நாட்டிய குந்திரும் நறும்பிசினும் நல்ல தகரங் கற்பூரம்
சூட்டிய கோட்டங் கச்சோலம் சுருதி கைதை நாகப்பூ
புன்னை செண்பகம் நன்னாரி புல்லி மஞ்சி சாதிக்காய். 295

**பொருள் :—** கொட்டிக்கிழங்கு, நரிப்பயறு, சந்தனம், அகில், எள், இலவங்கம், அதிமதுரம், புனுகுசட்டம், குந்திரிக்கம் (புனைக்கண் குங்கிலியம்), நறும்பிசின், தகரை, கற்பூரம், கோட்டம், கிச்சிலிக் கிழங்கு, தாழம்பூ, சிறு நாகப்பூ,

கன்னி தாமரை செங்கழுநீர் கடிதாய் முந்திரி பேரீஞ்சு
வன்னி யிஞ்சி யிலாமிச்சம் வகுத்த முத்தம் நன்னாரி
சன்ன திரிபலை சிறுதேக்குச் சார்ந்த ரோகணி யிலுப்பையிவை
இன்னே ரொன்று கழஞ்சுகொண்டு யிதமாய்ப் பாலில் குழம்
[பாக்கில்
நன்னும் பயித்தியம் நீரிழிவும் நல்ல சீந்தில் கடுகிதுவே. 296

**பொருள் :—** புன்னைப்பூ, சண்பகப்பூ, நன்னாரிவேர், சடா மாஞ்சில், கற்றாழை, தாமரை, செங்கழுநீர், முந்திரிகைப் பழம், பேரீச்சங்காய், சித்திரமூல வேர்பட்டை, இஞ்சி, விலாமிச்சு, கோரைக்கிழங்கு, மலை நன்னாரி, கடுக்காய்த்தோல், தான்றிக் காய்த்தோல், நெல்லிமுள்ளி, கண்டுபாரங்கி, கடுகுரோகிணி, இலுப்பைவேர் இவைகளை ஒவ்வொன்று ஒரு கழஞ்சு வீதம் மேற்படி பாலில் கலக்கிக் காய்ச்சிச் சுண்டவைத்துக் குழம்பாக்கிக் கொள்க. இதுவே சீந்திற் கடுகு என்னும் மருந்தாம். இது உண் பவர்களின் பயித்திய நோயையும், நீரிழிவு நோயையும் தீர்க்கும்.

## எலும்புருக்கிக்கு மருந்து

வெய்யமா யெலும் புருக்கி வேதனை செய்யு மாகில்
நில்லடா வென்றில் போதே நிற்கு மென்றுரைக்கக் கேளுங்
கல்லடாப் பாலி னுலேபூனைக் காலியுந் துத்திவேரும்
பையவே யரைத்துப் பாலில் பருகிடீர் பகர்ந்த நோய்க்கே. 297

**பொருள் :—** பூனைக்காலி வேர்ப்பட்டையையும், துத்தி வேர்ப் பட்டையையும் சம அளவாகப் பால் விட்டரைத்துண்ண எலும்புருக்கி நோய் தீரும்.

## எலும்புருக்கி நோய்க்கு நெய்

அறுகஞ் சாறு நானாழி அதிமதுரந்தா னெண் கழஞ்சு
நறுநெய் நாழி பால்நாழி நல்ல பாலை முகிழரைத்து
குறுக வெந்த நெய்நக்கக் கோடா கோடி யுட்டிணங்கள்
வெறுமை கொண்ட வேசியர்போல் வீட்டுப் போகுங் கண்டீரே.

**பொருள் :—** வெள்ளறுகின் சாறு நான்கு நாழி. ஆவின் நெய் ஒரு நாழி, ஆவின் பால் ஒரு நாழி வீதம் இவைகளைக் கூட்டிய கலவையில் அதிமதுரத்தூள் எட்டுக்கழஞ்சும், வெட்பாலை இலை முகிழ்களையும் மேற்படி பாலால் அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிகட்டி உண்டு வரக் கோடிக்கணக்கான உட்டிணப் பிணிகள் வெறுங்கையோடு வந்த ஆடவனை விலைமாது உடனே விட்டு நீங்குதல் போல் நீங்கிடும்.

## அல்குல் சூலைக்குப் புகை

சுக்கு மஞ்சள் வசம்புள்ளி துய்ய மிளகு குங்கிலியம்
ஒக்கக் கொண்டு பொடிசெய்து யோனியி லெண்ணெய் மேற்பூசி
தக்கவுரலில் தணல் வகுத்துச் சமைந்த பொடியை மேலிட்டு
ஒக்க விருத்திப் புகைகாட்ட அல்குல் சூலை யொழிந்திடுமே. 299

**பொருள் :—** சுக்கு, மஞ்சள், வசம்பு, தோலுரித்த வெள்ளைப் பூண்டுத்திரிகள், மிளகு, குங்கிலியம், இவைகளைத்தூள் செய்து வைத்துக்கொள்ளவும். அல்குல்சூலை உற்ற பெண்ணின் அல்குல் பாகத்தில் எள்நெய்யைப் (நல்லெண்ணெய்) பூசி விட்டுக் கல்லுரலில் தணல் உண்டாக்கி அதில் மேற்படி தூளைப்போட்டுப் புகை எழும்பும்போது அப்புகை அல்குல் பாகத்தில் படும்படி உரலின் மேலே ஓர் இருக்கையை ஏற்படுத்திக் கொண்டு உட்கார்ந்து வரவும். புகை அடங்கினால் மறுபடி மேற்படி தூளைச் சிறுகத்தூவிப் புகை எழுப்பிவரவும். அப்படிப் புகையிட்டால் அல்குல் சூலை தீரும்.

## குட்ட நோய்க்கு

வெண்குட்டங் கருங்குட்டம் விரிகுட்ட மிவையாலுங்
கண்கெட்டே யிருந்தார்க்குக் கண்ணுந் தெருவிட
மண்கொட்ட கோட்டத்தில் மாரிகாலத்தில்மழை பெய்யப்
[பலப்பல பூடு அதனை
பண்கொட்டு மென்மொழியாயிலை பறித்துத்தின்பீரேல்
[பருசட்டைத் தலைசற்றைக் குழல்கட்ட லாமே. 300

**பொருள் :—** மாரிக் காலத்து மழையினுலேயும் மண் வளத்தாலேயும் முளைத்து வளப்பமாக வளர்ந்துள்ள பற்பல பூண்டுகளை உண்டுவரக் குட்டவகைகள் தீரும்.

## அழல் வாயுவின் இயல்பு

பக்கம் வலித்து நரம்புப்பிப் பாரிசந் தன்னிலேயிரைத்து
ஒக்கச் சோறுஞ் செரியாமல் துய்ய குலையில் நோவுண்டாம்
மிக்க யேப்ப முண்டாப்போ லினிய வயிறு மேல்நோக்கி
தக்க குரும்பை முலைமாதே தரிப்பீர் பயித்திய வாயுவிதே. 301

**பொருள் :—** இரு பக்கங்களிலும் நோவுண்டாகும்; நரம்புகள் புடைத்துக்கொள்ளும்; விலாப்புறங்களில் ஒலிகாணும்; உணவு செரியாது; குடலிலில் வலி உண்டாகும்; அப்போதைக்கே உண்டாற்போல வயிற்றிலிருந்து மேல் நோக்கி ஏப்பம் உண்டாகும்.

## பயித்திய வளியின் இயல்பு

கந்தொடு தலையு நொந்து தாகமு மிகுதி யாகி
உந்தியும் அழன்று நோகு முடம்பது வெதுப்பு முண்டாம்
வந்திடுஞ் சத்தி யுற்று வாயில்நீர் வறண்டு போகும்
பந்தணி குழலாய் கேளாய் பயித்திய வாதந் தானே. 302

**பொருள் :—** என்பு மூட்டுகளும் தலையும்வலிக்கும்; நீர் வேட்கை மிகுதிப்படும்; தொப்புளில் வெப்பமுண்டாகி நோகும்; உடல் காயும்; வாந்தி உண்டாம்; வாய்நீர் வற்றும். இது பயித்திய வாதமாம்.

## வெறி அழலின் இயல்பு

வாத வெறி யெடுத்தால் மயங்கும்அறிவு தணைப் போக்கும்
காதல் கொள்ளுங் கோபமில்லை கணுக்கள் தோறுங் கடுக்கு
[தென்னும்
பேதம் பேசு மொருநாழி பிள்ளை பிதாவைத் தானுகக்கும்
ஓதுஞ் சிவனை நீறணியும் ஒருகா லுதறி மடக்கிவிடும். 303

**பொருள்:—** வாத வெறி அதிகரித்தால் மயக்கமுண்டாகும்; அறிவைப் போக்கிவிடும்; ஆசைமிகும்; கோபம்கொள்ளாது; சிறு மூட்டுகளில் நோகின்ற தென்னும்; ஒரு சமயத்தில் முன் சொன்னதற்கு முரணுகப் பேசும்; தன்மகனையும் தன்தந்தையை யும் பெருமை பெறப் பேசும்; சிவனைத்துதித்துத் திருநீறு பூசிக் கொள்ளும்; ஒருகாலில் உதறல் கண்டு அதை மடக்கிவிடும்.

வாத பித்த வெறியெடுத்தால் மயங்கிச் சினக்கும் வார்த்தை
[சொலும்
ஓதும் பலகால் கண்சிவக்கும் உறுக்கும் அறிவி னுடன் பேசும்
பேதம் பேசும் அறிவுண்டாம் பிணங்கி நடக்கு மடக்கிவிடும்
பாதி நேர மசைந்துவரும் பாடி யோடி எழுந்திருக்கும். 304

**பொருள் :—** வாதபித்த வெறி அதிகரித்தால் மயக்கம் காணும்; சினங்கொள்ளும்; தன்பாட்டிற்குப் பேசும்; நெடுநேரம் படித்துக் கொண்டே இருக்கும்; அல்லது பேசிக்கொண்டே இருக்கும்; வெள்விழி சிவந்து காணும்; மனம் இளகும்படி அவ்வளவு அறிவுடன் பேசும்; வேறுபடுத்திப் பேசும் புத்தி யுண்டாம்; மாறுபாட்டுடன் சினங்கொண்டு நடந்து கொள்ளும்; பிறர் செயலை அடக்கி விடும்; பாதிநேரத்தில் அசைந்து மெது வாக நடக்கும்; மீதிப்பாதி நேரத்தில் ஓடியாடி எழுச்சி கொண் டிருக்கும்.

வாத பித்தசேத்தும வெறியெடுத்தால் மடக்கிக் கிடக்குமுகங்
[களைத்துவரும்
ஏதும் பேசும் அறிவுடனே யேறிட்டுப் பார்க்குங் கண்மூடுங்
காதல் கொள்ளும் பசியாகும் கண்டா ருடனே நலம்பேசும்
ஏது செய்வேன் சிவனேயெனும் யெரியும்அரு முடன்
[தானே, 305

**பொருள்:—** வாதபித்த சேத்தும வெறி அதிகரித்தால் ஓரிடத்தில் மடக்கிக் கொண்டிருக்கும்; முகத்தில் களைப்புக் குறி காணும்; அறிவுடனே எல்லாம் நன்ருகப் பேசும்; ஏறிட்டுப் பார்க்கும்; உடனே கண்களை மூடிக்கொள்ளும்; ஆசை அதிகரிக் கும்; பசியுண்டாகும்; கண்டவர்களிடமெல்லாம் நலமாய்ப் பேசும்; சிவனே! என்ன செய்வேன் என்று ஏங்கிப் பேசும்; சினக்கும் உடனே அடங்கும்.

பித்தத்தின் வெறியெடுத்தால் பிரட்டைப் பேசுங் காதலுறும்
பத்தியேறுஞ் சுவர்களெல்லாம் பாடுமெச்சில் தனைத் தின்னும்
சுத்திச்சுத்தி மயங்கி விழுந் துணியை யெடுக்குங் கிழித்தெறியும்
மெத்த வார்த்தை பேசிவரு மிடுக்கே வுண்டு கல்லெறியும். 306

**பொருள்:—** பித்தத்தில் வெறிகொண்டால் மாற்றி மாற்றி; பேசும்; ஆசைகொள்ளும்; சுவரைப்பற்றிக்கொண்டு மேலே ஏறும்; பாடும்; எச்சிலைத் தின்னும்; மயங்கிச் சுற்றிச் சுற்றி விழுந்திடும். துணியை எடுத்துக் கிழித்தெறிந்துவிடும்; பேச்சு மிகுத்திடும்; மிடுக்காக இருக்கும்; கல்லெடுத் தெறியும்.

பித்தவாத வெறியெடுத்தால் பிரட்டைப் பேசு முடனஞ்சும்
சத்தத்தோடே கிராணியுறுஞ் சொன்ன வார்த்தை அசத்துவிடும்
மெத்தச் சிவக்குங் கண்களெல்லாம் விழிக்கு மிகவு மறிவுடனே
சத்துநேரம் நலம் பேசும் சண்டைபேசு மதன் குணமே. 307

**பொருள்:—** பித்தவாத வெறி யுண்டானல் மாறி மாறிப் பேசிடும்; உடனே அச்சம் கொள்ளும்; கிராணி நோய் காணும்; சொன்னசொற்களை உடனே மறந்திடும்; கண்கள் சிவந்திடும்; சுய அறிவுடன் விழித்து நோக்கும்; சற்று நேரம் நல்ல முறையில் பேசும் பின் சண்டைபோடுவதைப் போலப் பேசிடும்.

உணர்ச்சி கெட்டிடு மோது மிலச்சைபோம்
பணைத்தெழுந்து பாடுமதி தப்பியங்குங்
கணக்கிரே டறியாதொரு காரியம்
பிணக்கு மாய்விடும் பித்த மெடுக்கிலே. 308

**பொருள் :—** பித்தம் அளவுக்குமீறி ஓங்கினல் அறிவு கெட்டுப்போகும்; வெட்க உணர்வு போய்விடும்; வெகுவாக எழுச்சிகொண்டு பாட்டுகள் பாடும்; அறிவுதடுமாறி நடந்து கொள்ளும்; முரணுங் கொள்ளும்,

### வெறிநோயாளியின் தலையில் ஊற்றும் மருந்து

எண்ணெயில் முலைப்பால் வார்த்து யீராறு பழத்தின் சாறு
நண்ணிய பொன்னுங் காணி நன்னரி முத்தக் காசு
திண்ணிவி லாமிச்சை சீந்தி யின்னிரு வேலி வேரும்
பண்ணியே தலையில் வார்க்கப் பயித்தியந் தீருமன்றே. 309

**பொருள் :—** எள்ளெண்ணெயில் முலைப்பாலைக் கூட்டி (சம அளவு சுன்று கொள்க) அதில் பன்னிரண்டு எலுமிச்சம்பழங் களின் சாறும் பொன்னுங்காணிச் சாறும் அந்த அளவு கூட்டி, நன்னுரிவேர், கோரைக்கிழங்கு, விலாமிச்சுவேர், சீந்தில் தண்டு, சித்திரமூல வேர்ப்பட்டை, உத்தாமணிவேர் இவைகளை மேற்கூறிய சாற்ருல் மை போலரைத்து மேற்படி நீர்மங்களுடன் கலக்கித் தலைக்கு இடையரு ஒழுக்காய் ஊற்றிவரப் பைத்தியப்பிணி தீரும்.

## ஆறுவகை ஐயத்தின் இயல்பு

அதீத சேத்துமம் அடைசேத்துமங்கண்ட சேத்துமம் ஆகத்
[தடங்குஞ் சேத்துமம்
புதிதான விரண சேத்துமம் பொருந்தி யலதீத சேத்துமத்தோடு
குதிவான ஆறுசேத்துமத்தின் குணங்குறிக ளுரைக்கின்றேன்
[கூர்ந்துகேளாய்
அதியான அதீதம் மார்பில் விழுந்தெழுந்து அஞ்சுவகைக்
[காசமது அனுசரிக்கும். 310

**பொருள்:—** உடலில் சேத்தும தோடமானது இடம்விட்டு இடம் தாண்டி முதிர்ந்து ஓங்கி உடலில் வேதனையைத் தோற்று விக்கும். உடலில் இரண்டிரண்டாய் 'பேய்க்கோள்' கட்டிகள் ஆங்காங்கு ஓடிஓடிக் கட்டும். சிரங்கு கொப்புளங்களாகி அவ்வவ்விடங்களில் மேல்தோலின் தொடுஉணர்வு நீங்கியதால் திமிர் ஏற்பட்டும் சொறிகள் உண்டாகி ஒருவகை மந்தம் உண்டாகும்.

சீதமேல் சுவாசமது தானுண்டாகுஞ் சிந்தைகெடுஞ் சரீரத்தை
[யிளைக்கப் பண்ணும்
பூதபுடை சேத்துமம் புன்னரம்புபற்றிப் புடைத்தெழுந்து காயுங்
[கெந்த தாளியாகும்
பாதியதோர் பல்குத்துப் பல்லரணைகாதில் பலசீழுங்
[கண்ணேசை பதங்களாகும்
சாத்கமாங் கண்டசேத்தும மஞ்சும் யிருமலுமாய் வேர்வை
[யுண்டாய் மெய்கனக்கு மன்றே. 311

**பொருள் :—** உண்வைப் பக்குவஞ் செய்து உடலுக்கு ஊட்டும் பாகத்திலுள்ள சேத்துமம் விகாரப்பட்டுக் கிராணி உண்டாகும். அவ்வகைச் சேத்தும மிகுதி சிறுநா (உள்நாக்கு) என்னும் உறுப்பை இயல்புக்கு அதிகமாக வளரச் செய்யும்.

தாண்டுமாகத் தடங்கும் சேத்துமம் முதிர்ந்தெழுந்து தானதுவே
[சரீரத்தில் வாதையாகி
ஈண்டுமது திரண்டிரண்டாய்ப் பேய்க்கோளே கட்டியியல்பிலா
[தேகடைந்து ஓடிக்கட்டுந்
தாண்டியதோர் சிரங்காகித் திமிர முண்டாய்த் நானதுவே
[சொரியாகித் தயங்குமென்பார்
பூண்டமடை சேத்துமங்கிருணியாய் அதிகமாய்ச் சிறுநாவை
[வளர்க்குமிப்பால்
வீண்டதொழு கோசமதா யிருமலுண்டாய் மென்மேலும்
[தீர்க்கமுடன் செயமதாமே. 312

**பொருள்** :— உடலின் கோசங்களில் வீணே சென்றடைவதால் இருமல் உண்டாகும். இக்குற்றம் மேன்மேலும் வளர்வதால் என்புருக்கிநோய் உண்டாய் விடும்.

சயமுடனே காதிரண்டு பிளவையாகி
மெய்க்கட்டும் ஓடுவிப் புருதியாகித்
தசையிலுள்ள சீய்ப்புண்ணாய் நாற்றப் புண்ணாய்த்
தருசாமல் நாள்சென்று ஆறும்பின்பு. 313

**பொருள் :**— என்புருக்கிநோய் உண்டாவதுடன் இரண்டு காதுகளிலும் பிளவை என்னும் ஒருவகைக் கட்டி ஏற்படும். உடலில் கட்டுகள் உண்டாகும். அது நாளடைவில் ஓடுவிப்புருதியாகி விடும். அவை தசைப் புண்ணாகவும், நரம்புப் புண்ணாகவும் ஆகும். புண்கள் ஆற நீண்டநாள் ஆகும். (இப்பாடலில் இரண்டே அடிகள் உள்ளன.)

## வெங்கார சஞ்சீவி மாத்திரை

இயல்ான வெங்கார சஞ்சீவி மாத்திரைக்குப் பேரது சொல்ல
[நீகேள்
இருமூன்று கெந்தகம் வெண்கல மனோசிலை யிரதமரி தாரங்
[காந்தஞ்
செயலான பித்தளைபிரும் புருக்குச் செம்புதிப்பிலி பொரிகாரமுஞ்
செப்பமுடன் முன்சொன்ன காந்தமது இரண்டுபலம் பிறிது ஓர்
[ஒன்று பலமாய்

மயலான குமரிதன் சாறுவிட்டேயரை வலிய அரப்பொடிகள்
[தமமை
மதியதாய் மூன்றுநாள் சென்றபின் சட்டியில் வைத்தே
[கவிழ்த்து மூடித்
துயிலான திலமண் அரைத்தேழு சீலைமண் சுற்றுவி போகாமலே
சொன்னபடி தவருமல் மூன்றுநா ளெரியிடச் சுத்த செந்
[தூரமாமே. 314

**பொருள்:—** வெங்கார சஞ்சீவி எனப் பெயர் பெற்ற மாத்திரையின் முறையைச் சொல்கிறேன் கேட்பாயாக: கெந்தகம் 6 பலம்; வெண்கல அரப்பொடி, மனேசிலை, இரசம், அரிதாரம் தாளகம், காந்தம், பித்தளை, இரும்பு, எஃகு, செம்பு ஆகிய இவைகளில் காந்தம் 2 பலம்; மற்றவை வகைக்கு ஒவ்வொரு பலம், மேற்படி மருந்துச் சரக்குகளை மூன்றுநாள் (72 மணி நேரம்) முறைப்படி கற்ருழைச் சாறுவிட்டு நன்கு அரைத்து வில்லை செய்து உலர்த்தித் தக்கபடி ஓட்டிலிட்டு மேலோடு மூடிச் சீலை செய்து உலர்த்தி மணற்பொறியில் வைத்து விதிப்படி மூன்றுநாள் எரித்திட நல்ல செந்தூரமாய்விடும். (மணற்பொறி--வாலுகா இயந்திரம் என வழக்கிலுள்ளது.)

செந்தூர மானதை யாறவிட் டேபின்பு சேரவெடு பரணிதனிலே
தீராத வல்வினை யதற்கனு பானங்கள் செய்நா விதனை கழஞ்சை
சந்தான சுத்திபசுக் கோசலத்தில் லது தன்னைநனை நாள்
[மூன்ருடு
தப்பாமலேபின் னெடுத்தே யுலர்த்தியதைத் தவருமல் முன்
[போலவே
கொந்தார் விடத்துடன் திப்பிலி பலங்கொண்டு கூட்டியே ரெண்டு
[மொன்ருய்க்
கோதையே வெள்ளுள்ளித் தயிலத்தினலரை கொடுபதஞ்
[சார்ந்து தானல்
இந்திராணியான சிந்தூரந் தனில்கலந் தேகித்து நீ பணவெடை
யியல்பா யு ருட்டிக் சொளும்போ தறுப்பான யெதுக்கு முறையே
[செய்குவாம். 315

**பொருள் :—** அப்படிச் செந்தூரமானதை அடுப்புடனே விட்டு எரிப்பை நிறுத்தி நன்கு குளிர ஆறவிட்டு விடவும். பிறகு, அதை எடுத்துப் பரணியில் அடைத்துக் கொள்க. தீராத நோய்கள் என்று சொல்லப்பட்ட நோய்களின் நீக்கத்துக்கு ஆன துணை மருந்துகளின் முறையை கூறுவேன் அதன்படி செய்க. ஒரு

கழஞ்சு நாபியை, கோசலத்தில் மூன்று நாள்கள் ஊறவைத்துத் தண்ணீரால் கழுவி அதன் நடுநரம்பை நீக்கி உலர்த்திச் சுத்தம் செய்து கொள்க. அவ்வாறு சுத்தம்செய்தெடுத்த நாபியை ஒரு பலம் திப்பிலித் தூளைக் கூட்டி வெள்ளுள்ளித் தைலம் விட்டு அரைத்து, மெழுகு பதமாய் வரும்போது, மேற்படி செந்தூரம் கூட்டி, அரைத்து மாத்திரை உருட்டும் பதத்தில் எடுத்து, ஒரு பணவெடை வீதம் மாத்திரைகள் செய்து பத்திரப்படுத்தவும்.

உரைசெய்ததனில் பணவெடையெடுத்தே உள்ளிதன் தயில
[முடனே
ஒருநாளிரு நேரமாக விந்தப்படி உள்ளுக்கு நீகொ டுத்தால்
விரைவாகவே புண்கள் சூலைபதி னேழுடன் னிருகண்ணில்
[விரண முடனே
மேவுவாயில் கொழுப்பானதைத் தீர்க்கும் மெய்வெடி
[சிலந்திக் குமாகும்
திரைவான மாத்திரை யொன்றெடுத்து உள்ளித் தெளிதயில
[மதனில்வாங்கத்
தீராக்கிரிச்சியொடு வாதமது நிற்குமே திரும்ப ஒருபண
[வெடையுடன்
உரைசீனி வெருகடி திப்பிலியும் அச்சமன் ஒருபத்துநாள் தேனிலே
உட்கொளப் பிரமியங் கல்லடைப்பன்முதல் ஓடும்முப்பத்
[தாறுமே. 316

**பொருள் :—** மேற்படி மாத்திரையை உள்ளித் தைலத்தில் கொடுத்தால், புண்கள், சூலைகள், இருகண்களில் தோன்றும் கிரணங்கள் ஆகியவற்றை விரைவில் தீர்க்கும். வெடிப்புக்கும் சிலந்திக்கும் இது பயன்தரும். நிர்ச்சுருக்கு நோயும் வாதப்பிணிகளும் தீரும். ஒரு பணவெடை மேற்படி மருந்துடன் ஒரு வெருகடி சீனியும் ஒரு வெருகடி திப்பிலித் தூளும் கூட்டியுண்ண ஒழுக்கு நோய்களும் கல்லடைப்புகளுந் தீரும்.

ஆறுபத்தாறுறு சேத்துமஞ் சதையடைப் பஞ்சுயிந்திரியக் கட்டு
அயபித்த நூற்றெட்டு உஷ்ணமுமப்படி அதுநிற்கவே
[பின்புதான்
வேறுசித் தாந்தமொரு மாத்திரை வெள்ளுள்ளி விடுதயில மதனி
[லிடவே
விளைகின்ற உந்தியினி லெட்டெட்டு வாயுவும் மிகுபாண்டு
[நோய் யுமையும்

சீறிய விஷபாகஞ் சேத்துமங் காமாலையுஞ் செய்யபெரு வயிறு
[தானும்
தீருமிந்தப்படி கொண்டால துபின் திரும்ப ஒரு பண
[வெடையுடன்
கூறிய திப்பிலியு மிளகுமிவை இரண்டையுங் கொஞ்சமாய்த் தான்
[வெதுப்பிக்
கூட்டியிப் பொடியுடன் தேனிலிஞ்சிச் சாற்றில் கொள்ளுமிருபது
[நாளுமே. 317

**பொருள் :—** தொண்ணூற்றுறு சிலேத்தும நோய்களும் சதையடைப்பு நோயும் ஐம்பொறிகளின் கட்டுகளும், கப பித்த நோய்கள் நூற்றெட்டும் உட்டிணமும் நீங்கும். ஒரு மாத்திரையை வெள்ளுள்ளித் தைலத்தில் கொடுத்தால், உந்தியில் உண்டாகிற 64 வகை வாயுக்களும், ஐய வகை பாண்டு நோய்களும், நச்சுபாகம், சேத்துமம், காமாலை, மகோதரம் என்ற நோய்களும் தீரும். அதன் பின் திப்பிலியையும் மிளகையும் சமஎடையாய் எடுத்து வெதுப்பி இடித்துத் தூள் செய்து ஒரு பண வடை மேற்படி தூளில் இம்மாத்திரையைத் தேனும் இஞ்சிச் சாறுங் கூட்டி 20 நாள்கள் உண்ணவும்.

இருபது நாளுமிரு நேரங்கொள்ளீ ரொன்பது சன்னி எண்பது
[வாதமெரி வலிகுன்மம்
இயலம்பல் பித்தம் விரி அறுசத்தி முகவாதத்தொடு
மேவு பவுத்திர வினமிகு குடல்வாதம் மண்டையில் நோவு விப்பு
[ருதிபிளவை
அரிசெரி முயலகன் மூர்ச்சை உன் மாதம் ஆகிய பிறவலியும்
[உட்டிணமதில்
பிறவாய வுளவலி அந்திர வாயுவுடன் திரிஅரு குதிவாதஞ்
செவினோவு தீராக் குதிரைவலி செப்பமுடன் இவை யெலாந்
[தீர்வுறு முனியுரையே. 318

**பொருள் :—** இருபது நாள்கள் நாளுக்கு இரண்டு வேளை சாப்பிடவும். ஒன்பது வகைச் சன்னி, எண்பது வாதநோய்கள் எரிகுன்மம், வலிகுன்மம், அம்பலபித்தம், ஆறுவகை வாந்தி நோய்கள், முகவாதம், பவுத்திரம், குடல்வாதம், மண்டை நோய், விப்புருதி, பிளவை, முயலக வலிப்பு, மூர்ச்சை, உன் மாதம், புறவலிப்பு நோய்களும், வெப்பும், அந்திரவாயு, குதி வாதம், காதுநோய்கள், குதிரை வலிப்பு இவைகளெல்லாம் தீர்ந்திடும்; இது அகத்தியர் கூறியதென்க.

## கனக சபையார் புகை—(வேறு)

இதமாங் குளிர்ந்த நீருப்பை யிரத மூன்று வராகனெடை
பதமாங் காரீய மூன்று பரிந்தரி தாரம் வராகனரை
திதமாஞ் சுக்கு வராக னரை சிறிய கடுகு மப்படியே
கதமாம் வெண்பா டாணமரை கதித்த எருக்கங் கரியரையே 319

**பொருள் :—** 1. இரசம், 2. காரீயம் இவை வகைக்கு 3 வராகன் எடை 3. தாளகம், 4. சுக்கு, 5. கடுகு, 6. வெண்பா டாணம், 7. எருக்கின் கரி வகைக்கு ½ வராகன் எடை;

துத்தங் காலாந் துருசுகால் தொகையா யுளதொன் பதுவகையும்
மெத்து வரைத்துப் பொடிபண்ணி வேறென் பதாகக் கிழிகட்டி
பத்தி யுடனே காலை யந்தி பருத்த புளியஞ் சிராய்த் தீயில்
நித்த மோருஞ் சோறுண்டு நிறைப்பு கைப்பீர் நாலரைநாள். 320

**பொருள் :—** 8. துத்தம், 9. துருசு வகைக்கு ¼ வராகன் எடை. இந்த ஒன்பது சரக்குகளையும் முறைப்படி தூள் செய்து சம அளவாக 9. கிழிகளிலே கட்டி வைத்துக்கொள்க. நாளும் காலை மாலை மோரும் சோறும் கலந்து அருந்திவிட்டுப் பெருத்த புளியன் விறகால் உண்டாக்கப்பட்ட தீயில் மேற்படி தூளைத் தூவிப் புகைபிடிக்கவும். இவ்வாறு 4½ நாள்கள் புகை கொடுப்பீர் களாக.

வாயு கலந்து கட்டியுமே வாய்நீர் வடியு மோதுநாள்
தூயவேழு நாளளவுந் துரைபத்தியமோ ருஞ்சோறும்
ஆயவெட்டா நாள்நீரி லழுந்திக்காலை யந்தியினுந்
தூய நீரில் முழுகிடுவீர் சூலையதுகொண் டோர்தாமே 321

**பொருள் :—** சொல்லப்பட்ட அந்த 4½ நாள்களில் வாயு கலந்துவிடும்; கட்டியும் கலந்துவிடும்; வாய் நீரும் ஊறத் தொடங்கும்; அதன்பின் ஏழு நாள்கள் மோரும் சோறுமே அருந்திவரவேண்டும்; எட்டாம் நாள் நீரில் அழுந்தி நீராடல் வேண்டும்; இவ்வளவும் செய்துவரவேண்டியவர்கள் சூலை நோய் கொண்டவர்களே யாவார்.

எட்டா நாளில் தான்தொடுத்து இரண்டு நேர மிருபதுநாள்
மட்டாய் முழுகிப் பத்தியமும் வளரு மீர வெங்காயம்
முட்ட நீர் மோருஞ் சோறுண்டு முசியா துண்டு இருபதின் மேல்
தட்டா திருபது நாளளவுந் தன்பத்தி யத்தின் வகைகேளே. 322

**பொருள் :—** எட்டாம் நாளில் தொடங்கி நாளும் இரண்டு வேளைகள் நீராடி மோரும் சோறும் இருபது நாள்கள் சாப்பிட்டு வரவும். அவ்விருபது நாள்களுக்குப் பிறகு மறு இருபது நாள்கள் வரையில் இருக்க வேண்டிய பத்திய முறையைக் கூறுவேன் கேட்டுக்கொள்க.

முருங்கையிலையு மதன் சிறுகாய் மூரிலவரைப் பிஞ் சுடனே
நெருங்குமரைக் கீரையி னிலையும் நெய்த் தொலியான கருவாடுந்
தருங்கும் நெய்பா லுப்புடனே தயிருங் கூட்டிக் கொளலாகும்
ஒருங்கு நாற்பது நாளைக்கு யுறும்பெண் கோட்டி யாகாதே. 323

**பொருள் :—** முருங்கைக்கீரை, முருங்கைப் பிஞ்சு, அவரைப் பிஞ்சு, அரைக்கீரை, நெய்த் தோலிக் கருவாடு, நெய், பால், உப்பு, தயிர் இவைகளைக் கூட்டிக் கொள்ளலாம். பெண் கூடல் நாற்பது நாள்களுக்குத் தவிர்க்கவும்.

எள்ளி னெண்ணெய் செம் மறியாட் டிறைச்சி பாகற் காய்கடுகு
பள்ள மிலங்கு கத்தரிக்காய் பச்சையான புகைக் குடியும்
தெள்ளுஞ் சந்தன வாடையுடன் சேர்ந்த வாடை ஸ்ரீகோட்டி
விள்ளொ ணுது நாற்பதுநாள் வேண்டி லுப்பை முறிந்திடுமே

**பொருள் :—** எள்ளெண்ணெய், செம்மறியாட்டிறைச்சி, பாகற்காய், கடுகு, கத்தரிக்காய் ஆகியவற்றை உணவுப் பொருள்களில் சேர்ப்பதையும் புகையிலையைப் பச்சையாகவும், கொளுத்திய புகையிலிருந்து எழும் புகையாகவும் பயன்படுத்து வதையும், சந்தன வாடையுடன் உடலின் மணங்கலந்து வீசும் நாற்றம் தாக்குதலையும் பெண்களின் உடல் உறவையும் ஆகியன வற்றை நாற்பது நாள்கள் நீத்திடுக. உப்பு வறுத்துக் கூட்டுக.

இந்தப் படியே புகையது போட் டிருபது நாளு மனது வந்து
சிந்தை யுணரச் சொன்னபடி செய்து மற்ற இருபதுநாள்
சந்த முடைய பத்தியமும் தப்பா திருக்கில் சயமாமே. 325

**பொருள் :—** இவ்வாருகப் புகைபோட்டு இருபது நாள் பத்தியமும், மேலும் இருபது நாள் மறுபத்தியமும் பிசகாமல் இருந்தால் நோயை வெல்லலாகும். (இப்பாடலில் மூன்றே அடிகள் உள்ளன.)

பரிந்த பெரும்பூ சனிக்காயும் பன்றிக் கறியும் முன்னையிலை
அருந்த வேண்டா மோராண்டு அந்தப் படியே நிற்பீரால்
பொருந்து சூலைப் புண்முதலாய்ப் புண்ணென்றேது வகைக்
[குணமும்
திருந்து மிதிற்சந் தேகம்வேண்டாந் திண்ண மிறைவன்
[செப்பியதே. 326

**பொருள் :—** நன்கு முற்றிப் பருத்ததான பெரும் பூசனிக் காய் என்னப்பட்ட சாம்பற் பூசனிக்காய், பன்றிக்கறி, முன்னைக் கீரை ஆகியவைகளை ஓராண்டுகாலம் உண்ணாமல் நீக்கி வைப்பின் சூலைப் பிணிகளும், புண்களும் தீர்ந்திடும்; இதில் யாதொரு ஐயமும் வேண்டாம்.

## நீல கண்ட ரசம்

சாத்திர வேதி நேர்வாளஞ் சரியாய் வெள்ளைக் கவுரியதும்
நேத்திர மற்ற சாறுவிட்டு நேகஅரைத்து உண்டைபண்ணி
சூஸ்திர இஞ்சிநீர் மோரிலிடச் சூழுங் குளிருஞ் சுகசன்னி
நேத்திர சன்னி தீருமிது நீல கண்ட ரசமிதுவே. 327

**பொருள் :—** சாத்திரபேதி, நேர்வாளம், வெள்ளைப் பாடாணம், கௌரி இவைகளை முறைப்படி சுத்தி செய்து கல்வத்தி லிட்டுத் தூள் செய்து ஒன்றுகூட்டி குருவிச்சியின் (புல்லுருவி (அ) புல்லூரி) சாற்றைவிட்டு அரைத்து மாத்திரைகள் செய்து இஞ்சிச் சாற்றிலாவது மோரிலாவது உள்ளுக்குக் கொடுக்க உடலில் காணும் வெப்பு (சுரம்), சுக சன்னி, நேத்திர சன்னி யாகிய பிணிகள் தீரும். நீல கண்ட ரசமென்ற மருந்து இதுவே யாம்.

## நாத விந்து மாத்திரை

இரதங் கெந்தகம் வெண்காரம் மிதமா மிளகு இந்துப்பு
பதமா மீனின் மிருப்பிச்சு பன்னியரைத்து உண்டை செய்து
சதமா மிளகுப் பிரமாணம் சரியே யிஞ்சிச் சாறுடனே
இதமாய்ச் சன்னி தீருமிது விந்து நாத மிதுவாமே. 828

**பொருள் :—** இரசம், கெந்தகம், வெங்காரம், மிளகு, இந்துப்பு இவைகளை முறைப்படி சுத்தி செய்து சம எடையாக எடுத்து இரசம் கெந்தகம் இரண்டையும் முறைப்படி நன்கு கறுக்கும்வரை தொந்தித்து மற்றப் பொருட்களின் தூள்களையும்

சேர்த்து அரைத்து இரால் என்று கூறப்பெறும் மீனின் பித்தப் பையில் உள்ளதான நீரால் அரைத்து மிளகளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திடுக. இதனை இஞ்சிச் சாற்றில் கலந்து தினம் இருவேளை கொடுத்து வந்தால் சன்னி நோய் தீர்ந்திடும். இதுவே நாத விந்து என்னும் மாத்திரையென்று கூறப்பெறுவதாம்.

## தாளக மாத்திரை

கெவுரி துத்த மரிதாரம் கிளர நிறுந்தங் கோர்நிறையாய்
அளவு மத்தஞ் சாற்றதனு லரைத்துப் பயறள வுண்டைசெய்து
தளரி லாவின் பாலிலிடத் தணியாச் சுரமுந் தாந்தணிந்து
விளையுஞ் சேற்றும மழலைகளும் விடுமே தாளக மிதுதானே. 293

**பொருள் :—** கௌரிபாடாணம், பால்துத்தம், தாளகம் இவைகளை ஒரே அளவாக நிறுத்து எடுத்து ஊமத்தை இலைச் சாற்றுல் அரைத்துப் பயறளவாக மாத்திரை செய்திட்டு நிழலில் உலர்த்திக் குப்பியில் வைத்துக்கொண்டு பசுவின் பாலில் ஒரே அளவு போலக் கொடுத்துவர இறங்காது காய்ந்து வரும் சுரம் தணியும், ஐயக்குற்றமும், வெதும்பலும் விட்டுப்போம். இதுவே தாளக மென்னும் மாத்திரையாம்.

**குறிப்பு :—** சிலர் தத்தம் அனுபவப்படி கருவூமத்தைச் சாற்றுலும், மருளூமத்தைச் சாற்றுலும் அரைத்துப் பயன் படுத்துவர்.

## மும்மணிச் சிந்தாமணி

சிவப்புநீலங் கோமேதகம் சிறந்துவச்சிர மப்பிரகம்
அரிதாரம் அறிவா லடங்கும் நவச் சாரம்
சுவத்த சூதங் கெந்தகமும் துய்யசொர்ணம் ஓர்நிறையும்
சவத்த வெள்ளைப் பாடாணம் சரிநேர் வாளந் தனிலிட்டு
திருந்த அரைத்துப் புதனஞ் செய்ய சீர்மும் மணிச்சிந்
[தாமணியே. 330

**பொருள் :—**மாணிக்கம், நீலம், கோமேதகம், வைரம், அப்பிரகம், தாளகம், கட்டப்பட்ட நவாசாரம், சுத்தம் செய்த இரசம், கந்தகம், தங்கம் எல்லாம் சம எடையாகக் கொண்டு வெள்ளைப் பாடாணமும் நேர்வாளமுங் கூட்டி அரைத்து மாத்திரையாகச் செய்க. இது மும்மணிச் சிந்தாமணி என்னும் பெயரை உடையதாம்.

**குறிப்பு :—** இப்பாடல் முழுமையாகக் கிடைக்கவில்லை

## வாத அரக்கன்

கலைவாயிரத மிந்துப்புங் கடிய நாவி வெண்காரம்
மலைவாச்சாறு வல்லாரை யரைத்துக் குன்றி நிறையாக
அலைவா யலற்றுஞ் சன்னிக்கும் ஆகுஞ் சருவ சுரத்துக்கும்
மலைவா ரோகந் தீருமிது வாத வரக்க னிதுவாமே. 331

**பொருள் :—** இரசம், இந்துப்பு, வெங்காரம், நாபி இவை களை வல்லாரைச் சாற்றாலரைத்துக் குன்றியெடையாக மாத்திரை உருட்டித் தக்க அனுபானத்தில் கொடுக்கவும், இது அலறு சன்னிக்கும், எல்லாச் சுரங்களுக்கும் ஏற்ற மருந்தாம், இது வாத அரக்கன் என்னப்படும் குளிகையாம். இதில் குறிப்பிட்டுள்ள இரசம் என்பது கட்டிய இரசத்தை முறைப்படி பற்பம் செய்து கொள்ள வேண்டுமென்ற குறிப்பில் கலையா இரதம் என்று சிறப்பித்துள்ளார் என்க. இப்பெயரால் கூறப்பெறும் மருத்துவ முறைகள் அநேகம் உள, அவைகளிளுள் இது ஒன்று.

## குடிநீர்

சிறுவழுதலை சுக்கு நெருஞ்சிவேர்
யிதுவகைக்கு யிருகழஞ்சு
இருநாழி நீருழக்காக் காச்சி வடித்து
இதில்ஒரு குளிகையிட வாதசுரம் போம். 332

**பொருள் :—** சிறுவழுதுணை, சுக்கு, நெருஞ்சிவேர், வகைக்கு இருகழஞ்சாக எடுத்து இருநாழி நீர் சேர்த்து ஒரு உழக்காகக் காய்ச்சி இறுத்து வடிகட்டி மேற்படி மாத்திரையைக் கொடுக்க வாதசுரம் தீரும்.

**குறிப்பு :—** இப்பாடலில் இரண்டே அடிகள் கிடைத் துள்ளன இது மேற்படி மாத்திரைக்குத் துணைக்குடிநீரென்க.

## குமரிநீறு (பற்பம்)

இருபதுகழஞ்சு கெந்தகமும் மிகுந்த அரப்பொடி பதின் கழஞ்சும்
விரவிச்சேர்த்து மியல்பாக்கு விதமாய் மருதம் பட்டைபதை
உருவக்காடி தனில்துவைத்து உண்ணுஞ் சாற்றில் மருந்தெல்லாம்
நிருதமாகச் சீலைதன்னில் இதுவுமுடிந்து நீகட்டே. 333

**பொருள் :—** கந்தகம் 20 கழஞ்சு, அப அரப் பொடி 10 கழஞ்சு. இரண்டையும் தனித் தனியே நுணுக்கி ஒன்ருகக் கலந்து அரைத்து ஒரு சீலையில் வைத்துக் கட்டுக. மருதம்பட்டையை நன்ருக நசுக்கிக் காடியில் ஊறவைத்து இடித்துப் பிழிந்த சாற்றில்;

சாத்தில் நல்லெண்ணெய் சாரித்துத் தானே முடிந்த மருந்தை
[வைத்து
நீத்து ரெண்டு நாளதுதான் நிகண்டா யூற வைத்தபின்பு
பார்த்ததுக் கேற்பப் பொடிசெய்து பருக வட்டலி லிரதம்விட்டு
தீர்த்து யிரதந் தான்முறிஞ்சு திதமாய்ச் சாற்றில் மருந்தை
[யெல்லாம். 334

**பொருள் :—** சாறு இருக்கும் அளவுக்கு எள்ளெண்ணெயை மேற்படி சாற்றில் ஊற்றிக் கலக்கி அதில் முன் முடிந்து வைத்திருக்கும் மருந்து முடிச்சைப் போட்டு இரண்டு நாள்கள் ஊறவைக்கவும். பிறகு உலர வைத்துச் சாறெல்லாம் தீர்ந்த பின், மறுபடி முன் கூறிய சாற்றில் மருந்தை யெல்லாம் கூட்டி;

எல்லா மருந்து மொன்ருக யிலங்க வரைத்துக் கலையத்தில்
நல்லாத் தப்பி வட்டலிட்டு நலங்கமூடி யுலர்ந்த பின்பு
எல்லா மிப்படித் தான்திரட்டி இருகால் முக்கால் தான்திறந்து
சொல்லத் தீர உலரவைத்தால் துலங்கும் பற்பந் தானுமே. 335

**பொருள் :—** ஒன்ருகக் கலக்கும்படியாக நன்ருய் அரைத்துக் கலயத்தில் போட்டு நன்ருய் உலர்த்தவும். பிறகு திறந்த வெளி வெய்யிலில் உலர்த்தவும். இப்படிச் செய்தால் நீற்றுவிடும்.

இந்தக் குமரி பற்பத்தை இடுவீர் கடலைப் பிரமாணம்
வந்த பயித்திய பாண்டுருவும் மகிழுஞ் சூலை காமாலை
இந்தக் குட்டம் பதினெட்டும் இதுவும் குமரி அறுபதியாம்
சிந்தை மகிழத் தீருமெனச் செப்பி யுரைத்தார் மாமுனியே. 336

**பொருள் :—** இவ்வாறு செய்த குமரி பற்பத்தை வேளைக்குக் கடலையளவாகக் கொடுத்து வந்தால் பித்தபாண்டு உடம்பிலிருந்து நழுவிக் கொண்டு போய் விடும். சூலை, காமாலை, பதினெண் குட்டங்கள் ஆகிய நோய்கள் மிக்க மனமகிழ்வு தரும் அளவுக்குத் தீர்ந்துவிடுமென்று அகத்தியர் கூறினர்.

### குடிநீர்

நீர்முள்ளி சமூலங் கொண்டுவந்து நிரம்பச் சங்கம் பட்டையுடன்
சீரகங் கூடக் கூட்டிச் செழிக்க ஒவ்வொன் றிருகழஞ்சு
கூறியிரு நாழி நீர்விட்டு உழக்காய்க் காய்ச்சிக் கொண்டிடுகில்
பாரினிற் பாண்டு ரோகமது பாறிடும் நினைவி னிற்கொள்ளே. 337

**பொருள் :—** நீர்முள்ளிச் சமூலம், சங்கன் வேர்ப்பட்டை, சீரகம் இவை வகைக்கு 2 கழஞ்சு வீதம் எடுத்து 2 நாழி நீரில் இட்டு முறைப்படி காய்ச்சி இறுத்து வடிகட்டி உட்கொண்டால் பாண்டு நோய் தீர்ந்துவிடும்.

### ஆண்கட்டு மீளமருந்து

பூனைக்காலி நிலப்பனை சர்க்கரை
ஆனைப்பாலி லரைத்துக் குடித்திட
மானைப்போல்விழி மங்கையர்தம்மை
ஊனைப்பாயு முலக்கையு மாகிடும். 338

**ஏட்டில் கண்ட குறிப்பு :—** சர்க்கரை யென்பது பூமிசர்க்கரை; ஆனைப்பாலென்பது அத்திமரத்து வேரை வெட்டிக் கலசம் வைத்து ஊறியபால். இந்த மருந்து அஞ்சு நாள் குடிக்கக் கெடி விழுந்து போன ஆண் கட்டு மீளு மிது கைகண்டது.

**பொருள் :—** பூனைக்காலி வித்து; நிலப்பனங்கிழங்கு, பூமி சர்க்கரைக்கிழங்கு ஆகிய மூன்றையும் அத்தி மதுவினில் அரைத்துக் குடித்துவந்தால் மான்விழி மாதரை மருவக் குறி வலிந்து உலக்கையைப் போலாம்.

### தையல் வசியப் பூச்சு

செங்கருங் குன்றி வித்தும் சீதள வுள்ளி வேரும்
அங்கரி தாரங் கோட்டம் அணிமுலைப் பாலி லாட்டிச்
சங்கரன் தலையில் பூசித் தையலைப் புணர்வீ ராகில்
தங்கமா மேனி நல்ல தையலா ளடிமை யாவாள். 339

**பொருள் :—** செங்குன்றியில் கறுப்புப் புள்ளி உள்ளதான குன்றிமணி விதை, வெங்காயத்தின் வேர், தாளகம், கோட்டம் இவைகளைச் சமமாக எடுத்து முலைப்பால் விட்டரைத்து இலிங்கத்தின் மேல் பூசிக் கொண்டு அது உலர்ந்த பின் மங்கையர் புணர்ச்சியில் ஈடுபட்டால் அம்மங்கை அவ்வாடவனுக்கு அடிமை ஆவாள்.

## விந்து கட்டுப்பட

சந்தனந் தேத்தாங் கொட்டை தன்னுடன் தேங்காய்ப் பூவும்
இந்திரன் திசையில் வாழும் இயல்புள்ள முருங்கை வேரும்
முந்தியாய்ச் சொன்னதெல்லாம் முறைமையா யரைத்துட்
[கொள்ள
விந்துபோய் விழாது கண்டீர் வீழ்ந்திடு பாழியி னாலே. 340

**ஏட்டிலிருந்த குறிப்பு:** பசுவின் பாலிலரைத்துக்கொள்ளவும்.

**பொருள் :—** சந்தனத்தூள், தேற்றான்வித்து, தேங்காய்த் துருவல், கிழக்கு நோக்கிச் செல்லும் முருங்கை வேர்ப்பட்டை இவைகளைச் சம எடையாய் எடுத்துப் பசுவின் பாலால் அரைத்து உட்கொண்டுவர விந்து ஒழுக்கு (கனவில், நினைப்பில், சிறு நீருடன், மலங்கழிக்கும் காலம் என்ற பற்பல சமயங்களில் நேர்வ தெல்லாம்) நின்றுவிடும். அவ்வாறு விந்தொழுக்கு (படுக்கையில்) பெண்ணுடன் உடலுறவு சொள்ளும் போது மட்டுமே நிகழும்.

**குறிப்பு :** 1. பாழி என்பது படுக்கை என்ற பொருளது. பெண்ணுடன் உடலுறவு கொள்வதை வெளிப்படையாகக் கூறாமல் இடக்கரடக்கல் வழக்காய்க் கூறியுள்ளது குறிப்பிடத் தக்கது. 2. இப்பாடலின் ஈற்றடியில் 'விட்டிடப் புளியைத் தின்னே' என்ற பாட பேதத்துடன் காலஞ் சென்ற மாங்காடு வடிவேல் முதலியார் அவர்கள் மேற்படி பாடலைக் கூறியுள்ளதைப் பிரதி எடுத்து வைத்துக் கொண்டது நினைவுக்கு வருகிறது. இதன் செய்கைக்கு முறிப்பு புளியை அருந்துதல் என அறிந்து கொண்டு இம்மருந்தின் செய்கை முழுமையாய்ப் பயன் தர வேண்டுமென்று விரும்புபவர்கள் புளி நீக்கிய உண்டி கொளல் நன்றென அறியக் கிடக்கின்றது.

## சுரக் குளிகை

துத்தந் துருசு நேர்வாளஞ் சூதந் தாளகஞ் சாதிலிங்கம்
மெத்தச் சிவந்த பாடாணம் வெள்ளை நாவி யதிற்பாதி
மற்ற பாக லெருக்கம்பால் வார்த்தே யரைத்து உண்டைசெய்து
சொத்துங் குழலார் பாலிலிடக் குணமாய்ச் சுரங்கள் குணமாமே.

**பொருள் :—** தூய்மை செய்த பால்துத்தம், மயில்துத்தம், நேர்வாளம், இரசம், தாளகம், இலிங்கம், மனோசிலை, வெள்ளைப் பாடாணம் இவைகளைச் சம எடையாக எடுத்துக் கொள்க.

நாபியை ஒரு சரக்கின் எடைக்கு அரைப்பங்காக எடுத்துக் கொள்க. இவைகளைப் பாகலிலைச் சாற்றாலும், எருக்கின் பாலாலும் ஆட்டி மாத்திரை செய்து நிழலில் உலர்த்தித் தாய்ப்பாலில் கொடுத்தால் எல்லாவகையான சுரங்களும் நீங்கிவிடும்,

## வாயு குளிகை

கனத்து மிளகோ டிந்துப்புக் காந்தமிரதம் வெண்கார
மினத்த கழஞ்சிவை போரொன்று மிளகுகாப மரைக்கழஞ்சு
புனித்த வாளமறுகழஞ்சு புகழு முநங்கைச் சாறரைத்து
சினத்த குன்ம வலிதீருந் செலுத்தீரிஞ்சிச் சாற்றுடனே. 342

**பொருள் :—** கெட்டி மிளகு, இந்துப்பு, காந்தம், இரசம், வெங்காரம் இவை வகைக்கு ஒரு கழஞ்சு, இளக்கமாக உள்ள புதிதாய் எடுக்கப்பட்ட பெருங்காயம் ½ கழஞ்சும், தூய்மை செய்த நேர்வாளம் 6 கழஞ்சும் சேர்த்து முநங்கைச் சாற்றால் அரைத்து மாத்திரைகள் செய்துலர்த்தி இஞ்சிச் சாற்றில் கொடுக்கக் குன்ம வலி தீரும்.

## சுர கலிக்கம்

சுக்குடன் திப்பிலி துய்ய கெந்தகம்
ஒக்க ரோகணி யுகந்த மிளகுடன்
தக்க நிம்மச் சாற்றுட னேகஅரை
நக்கன் பூண்டதோர் நனிபெருங் கலிக்கமே. 343

**பொருள் :—** சுக்கு, திப்பிலி, தூய்மை செய்த கெந்தகம், பீதரோகணி, மிளகு இவைகளை எலுமிச்சைச் சாற்றில் அரைத்துக் கபிறு செய்து உலர்த்தி வைத்துக் கொள்க. இதனை முலைப் பாலில் இழைத்துச் சுரநோயினர்க்குக் கண்ணில் கலிக்கமிடவும்.

## பாடாண மாத்திரை

சாதிலிங்க மரிதாரம் தக்க வெள்ளைப் பாடாணம்
பாகற் சாற்றில் நேகரைத்துப் பபறுபோ லுண்டை செய்திதனை
மோரிலிரண்டு உண்டையிடு மூன்று நாளு மிப்படியே
நடுக்குங் குளிருஞ் சுரந்தீரும் நாலுநாள் மாறல் விட்டகலும்
மோருஞ் சோறும் பத்தியங்கொள் மூவாப் பாடண
மாத்திரையே. 344

**பொருள் :—** தூய்மைசெய்த இலிங்கம், தாளகம், வெள்ளைப்பாடாணம் இவைகளைச் சம எடையாக எடுத்துப் பாகலிலைச் சாற்றுலாட்டிப் பயறாவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்க. தினம் இருவேளை மோரில் கொடுத்து மோர்ச்சோறுப் பத்தியம் வைக்கவும். இவ்வாறு மூன்று நாள் கொடுக்க நடுக்குகின்ற குளிர்ச்சுரம் தீரும். நாலு நாள் மாறல் சுரம் தீர்ந்திடும். இதற்குப் பாடாண மாத்திரை என்பது பெயராம்.

## இலிங்கக் குழம்பு

சங்கங் கடுக்கா யொருபலமும் சாதி லிங்க மிருபலமும்
பொங்கும் வெங்கார மூன்றுபலம் புதுநேர் வாள மாறுகும்
மங்க வரைத்துப் பரணிதனில் வாழைப் பழத்தில் கொள்வீரேல்
தங்கும் வலமுந் தாடசம்போம் தண்ணீர் குடிக்கத் தான்போகும்
பொங்கும் வெந்நீர் தான்குடிக்கப் போகும் வயிறு மடைபடுமே.

**பொருள் :—** கடுக்காய் (கொட்டை நீக்கிப் பொடித்தது) *1* பலம், தூய்மைசெய்த இலிங்கம் 2 பலம். பொரித்த வெங்காரம் *3* பலம், தூய்மைசெய்த நேர்வாளம் 6 பலம். இவைகளை நன்றாய் அரைத்துப் பரணியில் அடைத்து வைத்துக் கொள்க. அளவுப்படி வாழைப் பழத்தில் வைத்து விழுங்கவும். அடைபட்ட மலமும் நிரும்போம் (வயிறு சுத்தமாகும்). தண்ணீர் குடித்துக் கொண்டே இருந்தால் கழிச்சலாகிக் கொண்டே இருக்கும் வெந்நீர் உண்டால் பேதி உடனே நின்றுவிடும்.

## கௌரிபாடாண மாத்திரை

நலந்தருங் கெவுரி நாலு நல்ல சீரகமே ஒன்று
சுரந்தணி துருசு ஒன்று துத்தமே இரண்டு நிம்பப்
பலந் தனிலரைத்தங் குண்டை பயறுபோல் பண்ணிக் கொண்டு
அலந்த வெந் நீரிலிட்டால் அருங்குளிர் சுரங்கள் போமே. 346

**பொருள் :—** கௌரிபாடாணம் நாலு பங்கு, நற்சீரகம் ஒருபங்கு சுரத்தைத் (வெப்பத்தைத்) தணித்திடும் மயில்துத்தம் ஒருபங்கு, பால்துத்தம் இரண்டுபங்கு. இவைகளை முறைப்படி சுத்தஞ்செய்து தூள் செய்து ஒன்றாகக் கலந்து எலுமிச்சம் பழச்சாற்றுலாட்டிப் பயறளவுள்ள மாத்திரைகளாக உருட்டி வெந்நீரில் கொடுத்தால் குளிர்சுரம் நீங்கும்.

## மூறைக் காய்ச்சல் குளிகை

எலிப்பகை தன்னை யங்கே எருக்கம்பால் தன்னிலிட்டுச்
சிலிப்புற நாலு நாளுந் சேர்ந்தபின் னெடுத்துப் பாலில்
பலிப்புற வரைத்தங் குண்டை பயறுபோற் பண்ணிக் கொண்டு
நலிப்புற மோரி லிட்டால் நாலுநாள் மாறல் போமே. 347

(எலிப் பகையாவது எலிப்பாடாணம்)

**பொருள் :—** எலிப்பாடாணத்தை வெள்ளெருக்கன் பாலில் நான்கு நாள் ஊறவைத்து அந்தப்பால் விட்டே அரைத்துப் பயறளவு மாத்திரை செய்து மோரில் கொடுக்க நான்கு நாளைய மாறல் சுரம் தீரும். (எலிப்பாடாண மென்பது வெள்ளைப்பாடாணம் என்பர்.)

## சங்கார வயிரவன்

சங்கார வயிரவனு முண்டைகூட்ட சாரடைமுக் காவேளைவேர் [நற்காவளை
பொங்காதவட்டத் திருப்பிதிரி கடுகிேனாடு போதச்சமன் கொடி [வேலி பாதிகூட்டி
தங்காமலிஞ்சிச் சாற்றரைத்துக்குன்றி தன்னளவு உண்டை செய்து [இஞ்சிச் சாற்றில்
பொங்காமலிடச் சோபை யிரைப்புக்காசம் போமெனவே [முனிவர்களும் பொருந்தச் சொன்னார். 348

(தேனிலுங் கொள்ளலாகும்.)

**பொருள் :—** சங்கார வைரவனுக்குச் சேர்க்கும் மருந்துகளாவன : சாரடைவேர், முக்காவேளை வேர், நல்வேளை வேர், வட்டத்திருப்பி வேர், திரிகடுகு சம அளவாகவும், சித்திர மூல வேர்ப் பட்டை ஒரு சரக்கின் பாதியளவாகவும் கூட்டி இஞ்சிச் சாற்றால் அரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும். இஞ்சிச் சாற்றில் கொடுத்திடச் சோகை, இரைப்பு, இருமல் தீர்ந்திடும்.

## சங்கத் தீநீர்

அஞ்சுவகை யுப்பதுவும் பிரத்தேக மோர்பலம்
அழகான திரிட்சாரம் வகையொன்றுக் கஞ்சுபலம்
மிஞ்சுசங்கு துத்தங்கெந் தகம்சவுக் காரம்
விரையவே வகைக்குப்பல மொன்றாக வேதான்

விஞ்சுபடிக் காரம்நவாச் சார மிதுதானும்
மேவியே யொவ்வொன்றில் ரண்டுதுட் டிடையாய்
மிஞ்சவே யெலுமிச்சங் கனிவிட்டரைத்து
மேவுகூழ் போலிரண்டு சாமமு மரைத்து
அஞ்சாமல் வயிரவி யெந்திரந் தன்னி
லடைத் து நீ சாராய மதுபோ லிறக்கிக்
கொஞ்சியே யிதுகொள்ளில் குன்மம்பக்க சூலே
கொடி தாகக் கெடிவிழுந் தோடுங்கண் டாயே. 349

**பொருள் :—** ஐவகை உப்புகளும் தனித்தனி ஒவ்வோர் பலம்; மூன்று சாரங்களும் வகைக்கு ஐந்து பலம்; சங்கு; பாடாணம், பால் துத்தம், கந்தகம், சவுக்காரம் இவை வகைக்குப் பலம் ஒன்ருகவுட்; படிகாரம், நவாசாரம் இவ்விரண்டும் இரண்டு துட்டெடை வீதம் கூட்டி எலுமிச்சைச் சாறு விட்டரைத்துக் கூழ்போல ஆனபின் திராவகப் பாணேயில் அடைத்துத் தீநீர் இறக்கி வைத்துக்கொள்க. அளவுப்படி கொடுத்துவர குன்மமும் பக்க சூலேயும் தீரும்.

## சுரத்துக்கு அரிதார மாத்திரை

பொன்னரி தாரந் தன்னேயுடைத்துப்போடுவ தோடதனில்
—பொற்பென மாயதை உப்பன மாய்வறு
பொன்னுளிர் காவிநிறந்தன் னிட வாகிய
அரிதாரத்தைத் தக்கதேபொடி சீலேதனிலதையே மூடிப்
—பொட்டணமாகத் தருவே நிகராவின்
உன்னிய பாலில் துலாந்திர மாவொரு சாமம்
வேகஉற்றதையே யெடு—மற்றதுநிறைசரி-ஒளிவுள சுண்ணும்பும்
—மன்னிய விரு வகை
வென்னீ ரதிலரை மாத்திரை கடலே யுறும்
மருவிய சுரமே தெதையும் தீர வைத்திடு வெல்லமதில். 350

**பொருள் :—** பொன்னரி தாரத்தைச் சிறுசிறு துண்டுகளாக உடைத்துக் காவிநிறமடையும் வரை வறுத்துப் பின் ஒரு சீலேதனில் கட்டித் தோலாந்திரமாகப் பசுவின் பாலில் ஒரு சாமம் வேகவைத்துக் கழுவி எடுத்து அதன் எடைக்குச் சமமாக கற்சுண்ணம் சேர்த்து வெந்நீரால் அரைத்துக் கடலேயளவு மாத்திரை உருட்டி வைத்துக்கொண்டு வெல்லத்தில் கலந்து கொடுக்கவும்.

வெல்லத்தில் வைத்து விழுங்கச் சுரந்தீரும்
முல்லைப்பூ மாதே மொழியக்கேள்—தொல்லுலகில்
பத்தியமோ வெந்நீர் பருகச் சுரந்தீரும்
சத்தியமே கண்டாய் சரி. 351

(மாத்திரை வெந்நீரிலுங் கொடுக்கலாமே.)

**பொருள் :—** இதை வெல்லத்தில் சாப்பிடச் சுரம் தீர்ந்திடும். வெந்நீர் பத்தியம்.

### சுரநாயகன்

சுக்கெடு கழஞ்சு அஞ்சு சொன்ன நேர்வாள மூன்று
மிக்ககெந் தக மிரண்டு மிளகொரு மூன்றதாகுந்
தக்கவெங் காரநாலு தானமாம் ரசமு மூன்று
சிக்கென யிலைக்கள்ளிச் சாறு வார்த் தரைத்துச் சேரே. [352

**பொருள் —:** சுக்கு ஐந்து, நேர்வாளம் மூன்று, நெல்லிக்காய்க்கந்தகம் இரண்டு, மிளகு மூன்று, வெங்காரம் நான்கு, இரசம் மூன்று கழஞ்சளவாக எடுத்து இலைக்கள்ளிச் சாறு விட்டரைத்துக்கொள்க.

**குறிப்பு :—** (1) மேற்படி மருந்துகள் எல்லாவற்றையும் முறைப்படி தூய்மை செய்து பின் மேற்படி எடையாக எடுத்துக் கொள்ள வேண்டும். (2) ஒவ்வொரு சரக்கையும் தனித்தனியாக நுண்ணிய தூளாக்கிக் கொள்ள வேண்டும். (3) மருந்துகளைக் கலக்கும்போது முதலில் கந்தகத்தைக் கல்வத்திலிட்டுத் தூள் செய்து அதனுடன் இரசத்தை விட்டரைத்து இரசம் நன்கு மடிந்த பின் மற்ற மருந்துகளைச் சேர்த்து அரைக்க வேண்டும்.

அரைத்ததோர் மருந்துக்கெல்லாம் அளவெடை குன்றிபோலப்
பொருத்திடி லாகாதென்று பேசினர் முனிவர் முன்னோர்
உரைத்திடுஞ் சுரங்களுக்கு நாயக னுருண்டை தன்னை
கரைத்திடும் வெந்நீர் தன்னில் காய்ச்சலுங் குளிரும் போமே. 353

**பொருள் :—** இவ்வாறு அரைத்ததைக் குன்றியளவு உருண்டை செய்து சுரப்பிணிக்கு வெந்நீரில் கொடுக்கக்குளிருடன் கூடிய காய்ச்சல் தீரும். இதனைச் சுரநாயகன் என்பர் நம் முன்னோர்களாகிய முனிவர்கள்.

## அட்ட குன்மத்துக்குக் குமரி நீறு (பற்பம்)

நாலு காசெடை அரப்பொடியும் நல்ல காரமிரு கழஞ்சு
சாலுமிரதங் கெந்தகமும் தனியேயொவ் வொன்றிரு கழஞ்சு
ஏலங்குழலா ளம்மிதனி லிளையக் குமரிச் சாறரைத்து
தாலந்தன்னில் தப்பிவைத்தால் தழலாயெரியுங் கண்டீரே. 354

**பொருள் :—** அய அரப்பொடி 4 காசெடை, வெங்காரம் 2 கழஞ்சு, கெந்தகம், இரசம் 2 கழஞ்சு. இவைகளைக் குழிக் கல்லில் இட்டுச் சோற்றுக்கற்றாழைச் சாற்றால் ஆட்டி ஒரு தாலத்தில் தப்பி வைத்தால் நெருப்புப்போல் எரியும்.

கண்டீர் குன்ம மெட்டுவகை கடிய பித்தம் பாண்டு ரோகம்
உண்ட வுடலில் புளித்தேப்பம் உடலில் கலந்த பிணிதீரும்
பண்டே சுக்கு மிளகுடனே பரிந்த திப்பிலி யிந்துப்பு
கண்டே சொன்னேன் கனங்குழலே கருதித் தேனிற் கொள்வீரே.

**பொருள் :—** எட்டுவகைக் குன்மம், மிகக் கடினமான பித்த நோய்கள், பாண்டு, புளி ஏப்பம் முதலான உடற் பிணிகள் தீரும். இதற்குத் துணைமருந்தான சூரணம்: சுக்கு, மிளகு, திப்பிலி, இந்துப்பு இவைகளை முறைப்படி தூள் செய்து ஒன்று படக் கலந்து வைத்துக்கொண்டு மேற்படி குமரிப் பற்பத்துடன் உண்ணவும்.

**குறிப்பு :** (இந்தச் சூரணம் வெரு கடியும் பற்பமரைப் பணவெடையுங் கொடுக்க எண்வகைக்குன்மமுந் தீரும்.

### சஞ்சனம்

சீகை விதையுந் திரிகடுகுஞ் செய்ய கிராம்பு கட்டெறும்புத்
தோகை கேளு முட்டையுடன் சுகமாய் நிம்மப் பழச்சாற்றில்
பாக மொருநா ளரைத்துருட்டிப் பரிவாய் முலைப்பால் கண்ணிலிடத்
தாக மாறல் குளிர்வெதுப்புஞ் சன்னி தலைநோய் போய்விடுமே.

**பொருள் :—** சீகைவிதை, சுக்கு, திப்பிலி, மிளகு, கட்டெறும்பு முட்டை சம எடையாக எடுத்து எலுமிச்சைப் பழச் சாற்றால் அரைத்து உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு முலைப்பாலில் உரைத்து கண்களுக்குக் கலிக்கமிடத்தாகச் சுரம், மாறல் சுரங்கள், குளிர் சுரங்கள், சன்னிகள் ஆகியவைகளில் காணும் தலைவலி குணமாம்,

### நசியம்

விடுமிளகு பொடியுடனு மணக்கி னெண்ணெய்
மிகநசியம் பண்ணத்தோட சுரமுந் தீரும்,
கடுகியவே லிப்பருத்திச் சாறுதன்னிற்
கதிக்கவே திப்பிலியை நசியம் பண்ணத்
தொடுகவந்த சன்னிசுரந் தோடந்தீரும்
தூயவெள் ளுள்ளியிந்து பாகற்சாற்றி
லிடுநசியந் தோடசுர மெல்லாந்தீர
இப்புவியோர்க் குரைநீயுங் கடுகத்தானே. 357

**பொருள்** :— மிளகுப் பொடியுடன் ஆமணக்கு எண்ணெய் விட்டுக் குழைத்து மூக்கில் உறிஞ்ச (நசியம்) தோடச்சுரந் தீரும். வேலிப்பருத்திச் சாற்றில் திப்பிலித் தூளைக் குழைத்து நசியம் பண்ணச் சன்னி சுரங்களும் தோடச் சுரங்களும் தீரும். வெள்ளைப் பூண்டுத் திரியையும் இந்துப்பையும் சமமாக எடுத்துப் பாகலிலைச் சாற்றால் மத்தித்து மூக்கில் உறிஞ்ச எல்லாவகைத் தோட சுரங்களும் தீர்ந்திடும்.

### கலிக்கம்

கடுக்காய் தான்றி யுட்பருப்புக் கடிய சயிந்தம் பெருங்காய
மிடுக்காந் திரிகடு கோசலத்தின் மேவ வரைத்துக் கயறுருட்டி
அடுக்காம் நிலப்பனைச் சாற்றி லழகு முலைப்பா லானுலும்
விடுப்பாய் கண்ணி லுரைத்திடவே பின்னிட் டோடுஞ்
[சன்னிவகை 358

**பொருள்**:- கடுக்காயின் உட்பருப்பு, தான்றிக்காயின் உட்பருப்பு, இந்துப்பு, பெருங்காயம், முக்கடுகு ஆகியவைகளைச் சம எடையாக எடுத்துக்கோமூத்திரம் விட்டு அரைத்துக்கயிறு செய்து துலர்த்தி நிலப்பனைக்கிழங்குச் சாற்றிலாவது தாய்ப்பாலிலாவது இழைத்துக் கண்ணுக்குக் கலிக்கமிடச் சன்னிவகைகள் யாவும் தீர்ந்திடும்.

### சன்னிக்குக் கலிக்கம்

வாகை விதையுந் திரி கடுகும் வலிய இந்து சமன்கூட்டி
பாக நிம்மப் பழச்சாற்றிற் பரிவாய ரைத்துக் கயிறு ருட்டி
வேக மான கண்ணிலிட வெருவிச் சன்னி விட்டோடுந்
தோகை கேளும் வடுகனிட துடுக்கஞ் சனந்தா னிதுவாமே. 359

**பொருள்:—** வாகைவிதை திரிகடுகு, இந்துப்பு இவைகளைச் சமஎடையாக எடுத்துப் பழச்சாற்றுலாட்டிக் கயிறு செய்துலர்த்தி வைத்துக் கொள்க. இவ்வஞ்சனத்தால் சன்னிக் குற்றம் தீரும்.

**குறிப்பு :—** இவ்வகைக் கலிக்கங்களைத் தாய்ப்பாலிடுவது பொதுவிதி. சிறப்பாக ஏதேனும் வேறு துணைமருந்துகள் கூறப் பெற்றிருந்தால் அவைகளிலும் கலிக்கம் தீட்டலாம்.

### கழிச்சல் மருந்து

திருகு கள்ளி வேர்ப்பட்டை திகழ்பசுப் பாலில ரைத்துலர்த்திப்
பரிவுடனே காற்கழஞ்சு பாக்கி னுடனே தின்பீரால்
வெருவி யிதுவே தான்கழியும் மீறு மேயா லாதன்மேலே
மருவு பசும்பாற் சோறுண்டு மணமாங் கெந்தம் பூசுவதே
இது நாலா மாறலுந் தீர்க்கும். 360

**பொருள் :—** திருகுகள்ளி வேர்ப்பட்டையைப் பசுவின் பால் விட்டரைத்துக் காற்கழஞ்சுள்ள சிறு வில்லைகளாய்ச் செய்துலர்த்திவைத்துக கொண்டு வெற்றிலைப் பாக்குடன் சாப் பிட வயிறு கழியும். அதிகமாய்ப் பேதியானுல் பால் சோற் றைச்சாப்பிடவும். வயிற்றில் மணமுள்ள சந்தனத்தைப் பூசிக் கொள்க.

### மலக்கட்டுக்குப் பற்று

மத்தங்காய் விதையோ டந்த வடிவுடைத் தணலிற் பாய்ச்சிப்
பொத்தென வெந்த வாறே பொருந்தநல் லேலங் கூட்டிச்
சுத்தமே யரைத்து வாங்கிச் சொன்னதோர் வயிற்றிற் பூசக்
கட்டின மலமுந் தீரும் கழன்றிடுங் கட்டெல் லாமே. 361

**பொருள் :—** விதையுடன் கூடியதான முழு ஊமத்தன் காயைத் தணலில் போட்டு வேகவைத்து எடுத்த அந்த எடைக்குச் சமமாய் நல்ல ஏலரிசியைக் கூட்டி நன்ருக மசிய அரைத்து வயிற்றின் மேலே பூசவும், மலக்கட்டுத் தீரும்.

### தாளிச வடகம்

அரத்தையொடு இல்வங்கம் லவங்கப் பத்திரி அதிமதுரந்
[திரிகடுகு லவங்கப்பட்டை
உரைத்த யிருசீரகமும் திரிபலமும் உயர்ந்ததா ளீசமேல முத்தக்
[காசு

பருத்தசடா மாஞ்சி யிலா மிச்சை வேரும் பருநாதகேசரமுந்
[திப்பிலிமூலந் தான் சமனாய்
வரைத்தக்கிராக் காரமுடன் சர்க்கரையுஞ்சமனாய் வடகங்
[கழற்சிப் பிரமாண முண்டை செய்யே. 362

**பொருள் :—** இலவங்கம், இலவங்கப் பத்திரி, அதிமதுரம், திரிகடு, இலவங்கப்பட்டை, நற்சீரகம், பெருஞ்சீரகம், திரிபலை, தாளிசபத்திரி, ஏலம், கோரைக்கிழங்கு சடாமாஞ்சி, விலாமிச்சுவேர், நாகப்பூ, திப்பிலிமூலம், அக்கராகாரம் இவைகளைச் சமனாய்ச் சேர்த்து இவைகளின் எடைக்குச் சமனாகச் சர்க்கரையைக்கூட்டிக் கழற்சிக்காய் அளவு வடகம் செய்க.

செய்தபின்பு தேனதனால் நெய்யேயாதல் திகழ் வெந்நீராலிதைத்
[திதமாய்க் கொள்ளில்
எய்திடும் நோய்தனைக்கேளு மிருமலீளை யிசைந்தஅத்தி
[சுரமாலை புளித்தேப்பந்தான்
பையஅசீ ரணவாயு வுடம்பெரித்தல் பலமூலக் கடுப்புடனே
[பறந்துபோமே. 363

**பொருள் :—** அவ்வாறு செய்த வடகத்தைத் தேனிலோ, நெய்யிலோ, வெந்நீரிலோ அருந்தச் செய்தால், வந்ததாகிய இருமல், கபம் (ஈளை) என்புசுரம், புளித்தேப்பம், செரியாவாயு, உடலெரிவு, மூலக்கடுப்பு முதலியன தீரும்.

### கக்கல் சுர குளிகை

உத்தமமா மரிதாரங் கெவுரிதுத்தம்
ஊமத்தஞ் சாரரைத்து உண்டைசெய்து
மெத்தியிடும் பயறளவு இஞ்சிசுக்கு
விரகி முலைப்பாலி லுரைத்துநன்றாய்ச்
சத்திசெய்யுஞ் சுரந்தனக்கு முருங்கைக்கஞ்சி
சாராதே உப்பொழிந்த கஞ்சிதானே. 364

**பொருள் :—** சுத்திசெய்யப்பெற்ற தாளகம், கௌரிப் பாடாணம்; பால்துத்தம் இவைகளை ஊமத்தன் சாறுவிட்டரைத்துப் பயறளவு மாத்திரை செய்க. இஞ்சி, சுக்கு, முலைப்பால்

ஆகிய துணைமருந்துகளில் கொடுக்க வாந்தியுடன்கூடிய சுரம் தீரும். முருங்கைக் கஞ்சியும், உப்புச் சேர்க்காத கஞ்சியும் மருத்துணவாம்.

### நான்காம் மாறல் சுரக் குளிகை

மனோசிலை கெவுரி கெந்தம் வளர்ந்தரி தாரஞ் சுத்தி
தனதுசுண் ணும்புத் தண்ணீர் தக்கநற் பாகல் சாற்றில்
மனமது மகிழ்ந்தரைத்து வத்திடும் பயறுபோலக்
கனலிஞ்சி முலைப்பால் தானே கஞ்சியாட் டதன் பாலாமே. 365

பொருள் :— மனோசிலை, கௌரி, கந்தகம், அரிதாரம் (சுண்ணும்பில் சுத்தி செய்ததாம்). இவைகளைப் பாகலிலைச் சாற்றில் அரைத்துப் பயறளவு மாத்திரை செய்க. இஞ்சிச்சாறும் முலைப்பாலும் துணைமருந்தாம். உப்பில்லாக் கஞ்சியும், ஆட்டுப் பாலும் உணவாம்.

### உப்புச் செந்தூரம்

செய்திடும் போது கேளாய் தெங்கின்பால் நாழியுப்பு
மெய்பட நாழி காட்டு மேதியின் பாலுழக்கு
செய்பெருங் காயங் கூட்டித் திரிபலை யிவையோ ரொன்று
மெய்படக் கழஞ்சு கூட்டி மெத்தன வெரித்துப் பாக்கே. 366

பொருள் :— தேங்காயைத் துருவியெடுத்த தனிப்பால் ஒரு நாழி, சோற்றுப்பு ஒருநாழி, எருமைப்பால் ஓர் உழக்கு, பெருங் காயம் முப்பழம் (கடுக்காய், நெல்லி, தான்றி) இவை வகைக்கு ஒருகழஞ்சு வீதம் கூட்டிக் கலக்கிச் சிறுதீயாக எரித்து உப் பாக்கிக் கொள்க.

இடுவெரு கடிய தாக இடுவதி லுறுதி கண்டால்
விடுவன நோய்கள் கேளாய் மிகுந்ததோ ரகுவை சோபை
பெறுவயி றுதர வெப்புப் பேசிய பாண்டு ரோகம்
மடுமகோ தரங்கள் தீரும் மருந்துநீ விரைந்து செய்யே. 367

பொருள் :— இதை முவ்விரல் அளவாக உட்கொள்க. இதனல் தீரும் நோய்களைக் கேட்டுக் கொள்வாயாக. அகுவை சோகை, பெருவயிறு, உதரவெப்பு, பாண்டுநோய்கள் மகோதரங் கள் தீரும்.

## பெருவயிற்று நோய்க்கு மருந்து

பெருவயிறு நீரிற் கோவை பின்புசெய் மகோதரந் தீர
வருமருந்து கள்ளிப்பால் கடுக்காய்ப் புல்லின்
வருகட்டி மிளகுகளிப் பாக்குச்சேர
எருமைப்பால் பழச்சாற்றி லரைத்துக்கொள்ள
ஏற்றவயி றதுகழியு முடம்புநோகாப்
பருகவே மற்றுநாள் மருந்துதன்னைப்
பரிவுடனே யின்னதென்று பகர்கின்றேனே. 368

**பொருள் :—** பெருவயிறு என்றும், நீர்க்கோவை யென்றும் மகோதரமென்றுங் கூறப்படும் நோயானது தீர மருந்து : கள்ளிப் பால், கடுக்காய், கரும்புவெல்லம், களிப்பாக்கு இவைகளைச் சமனாகக் கூட்டி எருமைப்பாலாலும் எலுமிச்சம் பழச்சாற்றாலும் அரைத்து முதல் நாள் உட்கொள்ளவும். இம்மருந்தால் மலம் கழியும். உடலில் வலி ஏற்படாது. மறுநாள் உண்ணும் மருந்து கூறுவேன் கேட்பாயாக.

மற்றுநாள் மருந்துகொள்ளக் குப்பைமேனி வளர்கொன்றை சிறிய
[காஞ் சொரிதானுமே
உற்றிரதங் காந்தமொடு சாதிலிங்கம் உகந்தவெங் காரநிம்மச்
[சாற்றரைத்துப்
பற்றறவே யிவைகூட்டி யுள்ளேகொள்ளப் பாருலகில் சலங்கழியும்
[வீக்கம்வாடும்
உற்றுறவே நீயிதனை நிசமதென்று உகந்துகொள்ள மகோதரமு
[மோடுந்தானே. 369

**பொருள் :—** குப்பைமேனி, கொன்றை, சிறுகாஞ்சொரி இவைகளின் வேர்ப்பட்டை, இரசம், காந்தம், இலிங்கம், வெங் காரம் ஆகியவைகளைச் சமமாக எடுத்துப் பழச்சாற்றாலரைத்து முறைப்படி உட்கொள்ள நீர் கழியும் வீக்கங்கள் விலகும். மகோதரம் தீரும்.

தாரணியில் வியாதியுந்தான் தீருமட்டுந் தவறுமல் முன்கொடுத்த
[மருந்துதன்னை
யேரணியு முருங்கையிலைச் சாற்றுள்காய்ச்சி யிதனுடனே ஏரண்ட
[எண்ணெய்கூட்டிப்
பேரணியும் பேயன்றன் பழத்தைகூட்டிப் பிசைந்தெடுத்துக்
[கொடுக்கவது கழியும்நன்றாய்க்
காரணியும் பூங்குழலாய் மூன்றுநாளுங் கருதியிந்த வகை
[செய்தால் நன்மையாமே. 370

**பொருள் :—** இப் பிணி தீரும்வரைக்கும் மேற்படி மருந்தை உண்க. முருங்கைக்கீரைச் சாறும் சிற்றுமணக் கெண்ணெயும் சமஅளவாய்க் கூட்டி முறைப்படி காய்ச்சிய எண்ணெயில் பேயன் வாழைப்பழத்தைப் பிசைந்து உட்கொள்ள மலம் கழியும். கருத்தோடு இம் முறையைச் செய்துவந்தால் நன்மையாம்.

## மருந்துணவு

ஆகாதமருத்துணவாங் கறியைச் சொல்வேன் ஆடுபன்றி கோழி
[யுடன் முயலுந்தானும்
வாகொன்றுங் கதலிக்காய் மோருமாகா மருந்துதன்னே யாளும்
[வகை யறிந்துகொள்ளப்
போகின்ற வியாதிகேள் வயிற்றில்வீக்கம் பொருமலாம் பெருவயிறு
[மகோதரந்தா
னேகின்ற தம்பிரநீர்க் கோவைதானு மிப்படியே மருந்துதனே
[யிதமாய்ச்செய்யே 371

**பொருள் :—** ஆடு, பன்றி, கோழி, முயல் இவைகளின் இறைச்சியும், வாழைக்காயும், மோரும் உண்ணலாகாது. வயிற்றுவீக்கம், பொருமல் (உப்புசம்), பெருவயிறென்னும் மகோதரம், பிற நீர்க்கோவை ஆகிய பிணிகள் தீர்ந்திடும்.

## மிடறு பாட

நாறுங் கரந்தை நற்கடுக் காய்சுக்குத்
தேறு வசம்பிரமி திப்பிலிதேன்— கூறெழு
மின்னரை யாய்க்கூட்டி விழுங்கெழு நாளளவுங்
கின்னரசத் தம்மாகுங் கேள். 372

**பொருள் :—**சிவகரந்தை, கடுக்காய்த்தோல், சுக்கு, வசம்பு பிரமி, திப்பிலி இவைகளைத் தேன் வார்த்தரைத்து ஏழுநாள்கள் உண்டுவர வீணையின் ஓசைபோலத் தொண்டை மீண்டும் பாடத் தொடங்கும்.

சுக்கு திப்பிலி பிரமி அமுக்கிரா
ஒக்க நாலு முருங்கையுங் கூட்டியே
நக்கு தேனுடன் நாதனைப் போற்றியே
அக்க டக்குர லானந்தம் பாடுமே. 373

**பொருள் :—** சுக்கு, திப்பிலி, பிரமியவழுக்கை, அமுக்குராக் கிழங்கு இவை சமபாகமாகவும் இவைகளின் எடைக்குச் சம பாகம் முருங்கை வேர்ப்பட்டையும் கூட்டித் தேனுடன் உண்ண எருமைக்கடாவின் குரல் போன்றதான கட்டைக் குரல் மெல்லிய மகிழ்ச்சி தரத்தக்க குரலாக மாறிப்பாடும்.

ஆடா தோடை கோட்டந் திப்பிலி
வாடா நெல்லி வசம்பு கடுக்காய்
கோடா தேனிற் குழைத்துக் கொண்டிடிற்
பாடா மிடறும் பண்பா டிடுமே. 374

**பொருள் :—** ஆடாதோடைஇலை, கோட்டம், திப்பிலி, நெல்லிவற்றல், வசம்பு, கடுக்காய்த்தோல் இவைகளைத் தூளாய்ச் செய்து தேனில் குழைத்துண்ணப் பாடவியலாத தொண்டையுள்ள வர்களுக்கும் தொண்டை நலமாகி மீண்டும் பாடும் தன்மையைப் பெறுவர்.

சுக்க டாகடுக் காயோடு திப்பிலி
வக்க டாவா லுருவையுங் கூட்டியே
நக்க டாஒரு மண்டலந் தேனுடன்
அக்க டாமிட றுனந்தம் பாடுமே. 375

**பொருள் :—** சுக்கு, கடுக்காய்த்தோல், அரிசித் திப்பிலி, வாலுருவையரிசி இவைகளை முறைப்படி தூள் செய்து தேனில் உண்ணக் குரல் தெளிவாகி மீண்டும் பாட வரும்.

## சோபைச் சுர இயல்பு

நெஞ்சுவற்று முடம்பெரிக்கும் நேயமுடனே தவனமுமாம்
பஞ்சுபோல விழிபரந்து பகருமுன்னே சுரமுண்டாம்
நஞ்சாமமிர்த மானதெல்லாம் நடக்குங்கைகா லெரிவெடுக்கும்
துஞ்சாமொழியீர் மடமானே துய்யசோபைச் சுரமிதுவே. 376

**பொருள் :—** தொண்டையின் நீர்ப்பசை வற்றிவிடும்; உடலில் எரிச்சலுண்டாகும்; தண்ணீர் அருந்தவிருப்பமுண்டாகும்; பஞ்சு காற்றில் பறப்பது போல நிலையாமல் விழி சுழலமிடும்; உட் சுரம் காயும்; அமுதமான பொருள்களெல்லாம் விடத்தன்மையைத் தரத்தக்கதாய்விடும்; கைகால் எரிவு தோன்றும்; இக்குறிகுணங்க ளெல்லாம் சோபைச் சுரத்தினதாம் என்றறிக

## வறள்சோபை இயல்பு

உடம்பது வெளுக்கு மாகி லுறுதிகெட் டுதிரம்வற்றும்
விடமது போல வேறி மேனியும் வெளுத் ததைக்கும்
இடம்படக் காலுங் கையு மிழுத்துடன் கடுத்து நிற்கும்
வடமதே யொத்த மானே வறள்சோபையின் குணமி தாமே. 377

**பொருள் :—** உடல் வெளுத்திடும்; குருதிக் குறைவுண்டாகும். விடமேறுவது போல வெளுப்பு வண்ணம் உடலில் மேன்மேலும் ஏறும்; வீக்கமும் ஏறிக் கொண்டேவரும்; கைகால்களில் இழுப்பும் வலியும் தோன்றிவிடும். இவை வறள் சோபையின் குணமாம்.

## ஊதுசோபையின் இயல்பு

மெத்த வுடம்பு மிகவூதும் வெளுக்குங் கைகா லப்படியே
நத்தஞ் சுண்டிப் பசுநிறமாம் நல்ல நயன மஞ்சணிக்கும்
பித்தங் கூடிக் குளிருண்டாய்ப் பெருத்து மிகவே யடர்ந்துவரும்
மத்தம் புதைக்குங் குணமானே அறிகா ணூது சோபையிதே. 378

**பொருள் :—** உடல் மிகமிக வீங்கும்; வெளுப்பேறும்; கைகால்களும் அவ்வண்ணமே வீங்கி நிற்கும்; செந்நீர் வற்றிப் பசுமை நிறம் பெறும்; கண்ணில் மஞ்சள் நிறம் தோன்றும்; பித்த தொந்தத்தால் குளிர் உண்டாகும்; வீக்கம் பெரிதாகிச் செறிந்து கொண்டே வரும். இவையே ஊதுகாமாலையின் குணங்களாம்.

## பாண்டு வரும்வகை அறிதல்

வாதபாண்டு நோயே தானும் வந்திடும் பரிசு கேளாய்
சாதம்நீ ரிச்சையற்றுத் தன்னிறங் கருகிவாடிச்
சூதுசேர் சொருபமுண்டாய்ச் சுரோணிதம் வற்றவற்ற
ஆதரவாமனைத்தும் அதிசய மாகுங்கண்டாய். 379

**பொருள் :—** வாத பாண்டுநோய் வரும் விதத்தைக் கூறுவேன் கேட்டுக் கொள்வாயாக. குருதி நாளுக்கு நாள் வற்றவற்ற உண்ணும் உணவின் பேரிலும் பருகும் நீரின் பேரிலும் விருப்பம் குறைந்து விடும்; உடல் நிறம் கறுத்து வாட்டம்தரும்; அல்லல்தரும் உருவையடையும்; உடலின் ஊட்டத்துக்குக் காரணமானவை எல்லாம் காணமற்போய்க் கொண்டே இருக்கும்.

தம்விழியு தடுநாக்குஞ் சரீரமு மலமு நீருஞ்
செம்மையாய் நிறங்கள்கெட்டுச் சிதைந்திடும் புத்திதானும்
விம்மிடும் வயிறும்போத வீங்கிடும் புறங்கால்தானும்
கம்மிடுங் கைகாலோயுங் கதித்திடும் வாதங்கண்டாய். 380

**பொருள்** :— விழி, உதடு, நாக்கு, உடல், மலம், நீர் இவைகளின் நிறம் நன்ருகக் கேடடையும் (இயல்பான நிறங்கள் மாறுதலடைந்து வேற்றுமைப்படும்); வயிறு உப்பும்; புறங்கால்கள் மிகவும் வீங்கிடும்; குரல் இயல்பானதாய் இல்லாமல் கம்மிப் போகும்; கைகால்கள் ஒய்ந்து போய்விடும். இவை வாதத்தின் உயர்வால் தோன்றியன.

## நோய் தோன்றும் வகை

கருதிய மீனின் முள்ளும் கலந்துமி நெல்லின் வாலும்
மருவிய எலும்புங் கல்லும் மங்கையர் மருத்தி னீடும்
பருகிய பழஞ்சோற் ருலும் பழமல நிறைகை யாலும்
மருவிய மயிர்க ளாலும் வந்திடும் நோயி தாமே. 381

**பொருள்** :— இந்தநோயானது, மீன்முள், உமி, நெல்லின் காம்பு (வால்), என்பு, கல், பெண்கள் இடுமருந்துகள், பழைய சோறு, மயிர் கலந்துள்ள உணவு ஆகியவைகளை உண்பதாலும், மிகமிகப் பழைய சோற்றை உண்ணல், பழையமலம் குடலில் நிறைவதாலும், தோன்றக்கூடியது.

புறவரை யுண்கை யாலும் போதநீ ருண்கை யாலும்
சுருளவே முடக்கிக் கொண்டு சுகமறக் கிடக்கை யாலும்
மருளவே மேடு தன்னில் மனமுறக் கிடக்கை யாலும்
பெருகவொண் டொடி யினுலும் பிறக்குநோ யென்று காணே. 382

**பொருள்** :— மிகுதியாக உணவு கொள்வதாலும், அதிகமாக நீர் குடித்தலாலும், தாராளமாய் நீட்டிப் படுக்காமல் முடக்கிக் கொண்டு உடலுக்கு நலமில்லா வகையில் படுத்துக் கிடப்தாலும், மேடுபள்ளத்தில் மனமுவந்து படுத்துக் கிடப்பதாலும், பெண்சேர்க்கைப் பெருக்கத்திலுலும் இந்நோய் பிறக்கும்.

## மகோதரம் வரும் வகையறிதல்

மகோதர மான போது வயிறது ஊதிக் கொள்ளும்
மகோதர மான போது வயிற்றடி புறங்கால் வீங்கும்
மமோதர மான போது வரண்டுவா யுலர்ந்து கொள்ளும்
மகோதர மரன போது வந்திடும் இயல்பு கண்டாய். 383

**பொருள் :**— மகோதரம் என்னும்பெருவயிறு தோன்றினல் வயிறு பருத்திருக்கும், அடிவயிறும், புறங்காலும் வீங்கும், வாய் வாண்டு நாவுலர்ந்துவிடும்.

வடிந்துகண் சிவந்து கொள்ளும் வாயுவுந் திசைக ளோடப்
படிந்துநீர் போத வாங்கும் பசியன்றிக் கனத் திருக்கும்
விடிந்தபோ தெழுந்திருந்தால் வினவிடு மூதிக் கொள்ளும்
கடிந்திடு மகோ தரத்தின் கணக்கிவை யறிந்து கொள்ளே. 384

**பொருள் :**— கண்ணில் நீர்வடியும்; விழிகள் சிவக்கும்; வாயு உடலின் எல்லாப் (10) பக்கங்களிலும் ஓடிப்பரவும். நீரை மிகுதியாக உட்கொள்ளச் செய்யும்; பசியில்லாமல் உடல் கனத்திருக்கும்; படுக்கையைவிட்டு விடியற்காலையில் எழுந் திருக்கும் போது முகம் ஊதல் கொண்டிருக்கும்.

## நோய் தோன்றும் வகை

செரித்துறங் காதிருந்து திகழவே உண்கையாலும்
தரிப்புறக் கிடப்பதன்றித் தளர்ந்துகீழ் கிடக்கையாலு
மருத்திடுங் கிரிகையாலும் மதிபல தெண்டிப்பாலும்
பெருத்திடு முதரந்தன்னில் பிறந்திடும் நோய்கள்தாமே. 385

**பொருள் :**— தொடர்ச்சியாக உறங்காமல் இருந்து மிக்க உணவு கொள்வதாலும்; உடலின் நோக்காட்டால் தரையில் கிடப்பதாலும்; மிகுந்த களைப்புண்டாகிக் கிடப்பதாலும், மருந் தீட்டாலும், நீண்டநாள் தண்டனைக்குட்பட்டுக் கிடத்தலாலும் பெரிதான வயிற்றில் நோய்கள் உண்டாகும்.

## நலப்படா நோய்நிலை

ஊசிபோ லுடம்புநொந்து உடம்பெல்லா நரம்புதோன்றிப்
பாசிபோல் கண்சிவந்து பசியின்றிக் கனத்திருக்கும்
கூசிட வுண்டாமிந்தக் குறிகளுண் டானபோது
பேசிய சாவுந் திண்ணம் பேசிடா தெழுந்துபோகே 386

**பொருள் :—** உடலில் ஊசிகுத்துவது போன்ற வலியும்; உடம்பெல்லாம் நரம்புகள் புடைத்துக் கொண்டு புலனுதலும். கண்சிவந்து அல்லது பசுமையாகக் காணப் பட்டுப், பசியின்றி உடல் கனத்தும் பிறர் கண்டு அஞ்சிக் காணக் கண் கூசும்படியான மேற்படி குறிகள் கண்டால் அந்நோயாளி இறப்பான் ஆகையால் யாதொன்றும் கூருமல் (மருந்துகொடாமல்) சென்றிடுக.

வருமல சலமும்வற்றி மயக்கமுண் டானபோது
பொருமலு மிருமல்தானும் போகவே துரந்துநிற்கும்
பருகிடுந் தண்ணீர்போதப் பஞ்சிடுங் கண்ணும்வாயும்
வருமிவை குறிகள்கண்டால் மரணமென் றறிந்துகொள்ளே. 387

**பொருள் :—** மலமும் சிறுநீரும் சுருங்கிவிடும்; மயக்க முண்டாகும்; வயிற்றின் உப்புசமும், இருமலும் அதிகரிக்கும்; அதிகமாகத் தண்ணீர் குடிக்கும்; கண்ணும் வயும் பஞ்சடைந்து விடும். இக்குறிகள் கண்டால் அவை மரணக் குறிகளென்று தெரிந்துகொள்க.

இடையும்பின் கலையினேடு மெதிர்ப்படச் சுழியவாங்கும்
பிடைபுறங் கைகீழ்வீங்கிப் பிதற்றிடும் புத்திதானும்
தடைபடக் கண்ணீர்சாருந் தாவுறுங் இயல்புவேருய்
வடிவற நாற்றங்கண்டால் மரணமென் றறிந்துகொள்ளே. 388

**பொருள் :—** இடகலையும், பிங்கலையும் காலத்தாலும் நடையாலும் மாறுபட்டு நடக்கும். மூச்சுச் சுழித்துவாங்கும். உடலின் பின்பாகங்களும், புறங்கைகளும், உடலின் கீழ்ப் பாகங்களும் (தொப்புளுக்குக்கீழ் உள்ள உடலின் பாகங்கள்) வீங்கிடும். வாய் பிதற்றும். புத்தி பேதலிக்கும். கண்களில் நீர் வழியும். குற்றம் உற்ற மற்ற இயல்புகளும் வேறு கூடினுல், உடலில் பிண வெடி நாற்றமும் கண்டதாயின் மரணம் ஏற்படு மென்பதை அறிந்துகொள்க.

காலொடு புறங்கைவீங்கிக் கனக்கவே போர்த்திவீங்கிச்
சாலவே கண்சிவந்து தனஞ்சயன் கீழேயானல்
போலவே வயிறுவீங்கும் பொருமிடு முழலையாகும்
காலனுஞ் சாவுதிண்ணங் கடுகிநீ விட்டுப்போகே. 389

**பொருள் :—** கால், புறங்கை இவைகளைக் கனக்க மூடிக் கொண்டு வீங்கிக் கண் மிகச் சிவந்து தனஞ்செயன் என்னும் வாயு கீழ்நோக்கினுல் ஏற்படும் வீக்கம் போல வயிறு வீங்கும். வயிற்றில் உப்பலும், மிக்க வெம்மையுங் காணுமாயின் இறத்தல் உறுதியென்க.

முதுகொடு வயிறுவீங்கி மூலமே தாதுகெட்டுத்
திதமுறு செவிகண்வாயுஞ் செயவநற் பரிசங்குன்றி
முடுகுமவ் வாறுமூன்றில் முதியவன் கீழேயாகில்
விதியுவன் வசமதென்று விட்டுநீர் அகலப்போகே. 390

**பொருள் :—** முதுகும் வயிறும் வீங்கி மூலாதாரம் சீர்கெட்டு, விந்துகெட்டு, செவி, கண், வாய், பரிசம் இவைகளின் வன்மை குறைந்து மூன்று நாடிகளும் வேகமாய்த் துடிக்கும்போது வாத நாடி கீழ் நோக்கி ஓடினுல் அவன் உயிர் விதியின் வசப்பட்டுவிட்டது என்று அறிந்து கொண்டு மருத்துவம் செய்யாமல் அப்பாற் சென்றுவிடுக.

வீங்கிடுங் காலுங்கையும் விம்மிடும் வயிறுபோத
வாங்கிடுந் தண்ணீர்தானும் வறளிடும் நாவும்பல்லும்
தாங்கிடு மலமும்நீரும் தவறிடுஞ் சொற்கள்மற்றும்
ஏங்கிடும் புலன்களைந்தும் இதுகண்டால் விட்டுப்போகே. 391

**பொருள் :—** கால் கைகள் வீங்கிடும்; வயிற்றுவீக்கம் மிகுத்துக் காணும்; நீர்வேட்கை மிகுந்து மிக்க நீரைப் பருக வைக்கும். நாவும் பல்லும் வரண்டு விடல், மலமும்நீரும் (வெளியாகாமல்) தங்கிவிடல், சொன்மாருட்டம் காணல், ஐம்புலன்களும் வன்மை குன்றிடல் என்னும் குறி இயல்புகள் காணப்பட்டால் மருத்துவத்துக்கு ஏற்காதே கைவிடுக.

நாடிகள் பத்துமூன்றும் நற்றவப் பேறுங்கெட்டு
ஓடுநாள் ஏழுமூன்றும் ஒன்றுடன் விழியுங்கெட்டு
மூடிய விருள்பரந்து மூர்ச்சைவந் தடுத்தபோது
கூடிய சாவு திண்ணங் குறித்துநீ விட்டுப்போகே. 392

**பொருள்:—** பதின்மூன்று நாடிகளும் (இடகலை, பிங்கலை, சுழிமுனை, காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்புடை, புருடன், குகு, சங்கினி இப் பத்திேைடு வாத, பித்த, கபம் என்பன)

இருபத்தியொருநாள் பழுதுற்று விழியின் பார்வை கெட்டு இருள் கப்பியவாறு, மூர்ச்சை என்று கூறப்படும் மயக்கநிலை ஏற்பட்டால் இறப்பது திண்ணமாம் என்க.

பரிசமெய் யறிந்து கொண்டு பரந்திடும் போதுங்கேளீர்
மலமுடன் சலமுமுண்டாய் வாயுவுங் கீழேபோகில்
செயமிவை யாகுமென்னத் தீர்க்கமா யுணர்ந்துகொண்டு
பயமற விடுவதென்று பரிந்துநீ மருந்துசெப்பே. 393

**பொருள் :—**(மயக்க நிலையில் இருந்தபோதிலும்) தோலின் தொடுஉணர்வுமட்டும் நல்லவண்ணம் காணப்படினும், மலம்நீர், அபானவாயு ஆகியவை கீழ்நோக்கி இழிந்தாலும் (மயக்க நிலையைக்கண்டு) பயப்படாமல், மருந்து செய்வதால் வெற்றி உண்டாகுமென்பதை உணர்ந்து வைத்தியம் செய்க.

நாலிரண் டெட்டுத்தானம் நலம்பட வீங்கினுலும்
சாலவே மலமுநீருஞ் சடக்கென விடுமேயாகில்
கோலவே வேண்டாமிந்தக் குறிகளுண் டானபோது
சீலமா மருந்தறிந்து சிக்கெனத் தெரிந்துசெய்யே. 394

**பொருள் :—** எட்டிடங்களும் மிகவும் வீங்கி இருந்த போதிலும் நீரும் மலமும் விரைவில் (யாதொரு சிக்கலும் இல்லாமல்) வெளியாகிக் கொண்டிருக்கும் நோயாளிக்கு யாதொரு ஐயப்பாடு மின்றி வைத்தியம்செய்பலாம். செய்யும்மருத்துவத்தை விரைந்து பயன்தரத்தக்க மருந்துகளைத் தேர்ந்தெடுத்து உபயோகம் செய்து குணத்தைக் காட்டவேண்டும்.

வாசம்நீர் பசியுமுண்டாய் மலமொடு சலமுமுண்டாய்
வீசிமேல் வயிற்றதைப்பு மெத்தெனக் குழைந்திருக்கில்
கூசிட வேண்டாமிந்தக் குறிகளுண் டானபோது
மாசிலா நாளைக்கொண்டு மருந்துசெய விரும்பிடாயே. 395

**பொருள் :—** வாயில் ஊறும் நீரும் நல்லபசியும் உண்டானவனும், மலசலம் இயல்பாயுண்டாகி வெளியாகிவரும் தன்மை உடையவனுகியும் உள்ள ஒருவனுக்கு வயிற்றில் வீக்கங் கண்டிருந்தால் அவ்வீக்கம் கல் போல் இன்றிக் குழைவுடன் இருக்குமானல் நோயின் தன்மையைக் குறித்து அஞ்சாமல் ஒரு நல்ல நாளில் மருந்து செய்ய விருப்பப்படுவாயாக,

### எளிய புளி இளகம்

மருவு முக்குறுணிகாடி வளர்புளி யிலையுமவ்வா
றிருமையோர் பலமிரும்பு இவைகாய்ச்சி யெட்டொன்ருக்கி
பருகிய தேனும்நாழி பழவெல்லம் பலமதாறு
கருதிய பசுவின்நெய்யும் கதித்திடா துழக்குக்கூட்டே. 396

**பொருள் :—** முக்குறுணிக் காடியில் முக்குறுணி புளியந் தளிரை இடித்துப்போட்டு அதில் பழைய இரும்பு ஒரு பலத்தைப் போட்டு அடுப்பேற்றிக் கொதிக்கவைத்து ஊற்றிய காடி எட்டுக்கு ஒன்ருய் வற்றியவுடன் அக்கியாழத்தை இறுத்து வடிகட்டி அதில் தேன் ஒருநாழி, பழைய வெல்லம் (மூன்ருண்டு சென்றது மிகவும் நல்லதாம்) ஆறுபலமும், ஓர் உழக்குப் பசுவின் நெய்யுங் கூட்டி அதில்;

### கற்கம்

கூட்டிடு கடுகுவள்ளி கூறிய மிளகுதானும்
நாட்டிலொவ் வொன்றுதன்னை நலம்பட வுழக்காய்ச் சேர்த்துப்
பூட்டுமுற் கியாழந்தன்னில் போட்டிதைக் குழம்பாய்க் காய்ச்சித்
தேட்டமாம் பதத்திஞேடும் சேர்த்திள கமதாய்வையே. 397

**பொருள் :—** கடுகு, வள்ளிக்கிழங்கு, மிளகு ஆகியன வகைக்கு ஓர் உழக்காகத் தூள் சேர்த்து மேற்படி கூட்டு நீர்மத்தில் பாகு காய்ச்சிப் போட்டு இளகமாகச் செய்க.

வைத்ததோர் இளகந்தன்னை வளம்பெறக் கொள்ளும்போது
அத்திடுஞ் சோபைமூன்று அடைவினி லறிந்துசெய்ய
பத்திய பாகையாகப் பாத்திடு இளகந்தன்னை
சுத்திடுஞ் சோபை யெல்லா மெட்டுநாள் தனிற்றீருமே. 398

**பொருள் :—** இவ்விளகத்தை உட்கொண்டால் மூவகைச் சோகை நோய்களும் எட்டு நாளில் குணமாய்விடும். புகை, புளி, பெண் நீக்கவும்.

### காய்ச்சல் புளி இளகம்

மருவும் புளியிலை நூறுபலந் தண்ணீர் காடியது வகைக்
[கொண்ணுழி
ஒருக்டுக் காய்தான்றி கொடிவேலிசங்கு சாட்டரணை யோடு
வருவகையு மொவ்வொன்று ஆறுபலங் கூட்டிடா மலகந் தானும்
இருபலத்தி ஞேடு செறிவாகவிரும்பு மறுபது பலந்தா னியல்பாய்க்
[கூட்டே. 399

**பொருள்**:— புளியின் (தளிர்) இலை 100 பலம், தண்ணீரும் காடியும் வகைக்கு எட்டு நாழி கூட்டி அதில் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், கொடிவேலி வேர்ப்பட்டை, சங்கங் குப்பி வேர்ப்பட்டை, சாரடைவேர் வகைக்கு 6 பலமும், நெல்லி வற்றல் இரண்டு பலமும், இரும்பு 60 பலமும் சேர்த்து;

கூட்டிய மருந்துதனையிடித்து மூன்று நாள் காய்ந்த பின்பு
[குணநாலாநாள்
நாட்டமுட னுபசுரச நீர்முள்ளி பொடுதலையும் நாழியோடு
கோட்ட நொச்சி சங்கு சாட்டரணைகையாந் தகரை கிளாக் குப்பை
[மேனி
தேட்டமுள்ள கொடிவேலி இது வகைகள் வகைக்கோர்சா றுழக்
[காய்ச் சேர்த்தொன்றுக்கே. 400

**பொருள்**:— மூன்று நாள் அடுப்பேற்றிக் கொதிக்க வைத்து நாலாம்நாள் இறுத்து வடிகட்டி, நீர்முள்ளிச் சமூலச் சாறும் புளியிலைச் சாறும் வகைக்கு ஒரு நாழி வீதம் கூட்டியும், நொச்சி, சங்கு, சாரடை, கரிசாலை, கிளா, குப்பை மேனி, கொடிவேலி இவைகளின் இலைச்சாறு வகைக்கு ஓர் உழக்குச்சாறு வீதமும்;

சேர்த்த இஞ்சி நாரத்தம் பழச்சாறு மொவ்வோர்படி தேனும் நாழி
ஆர்த்த திரிகடுகு இருசீரகம் சயிந்துலவணங் கற்கடக சிங்கி
பார்த்த லவங்கப் பட்டை ஏலமிவை வகையோர் பலம் பழைய
[வெல்லம் பலமாகக் கற்கம்
ஏத்தயிருபத்து நாலுபலங் கூட்டி இளகமாய் எடுத்துக்கொள்ளே

(இந்த இளகம் அனைத்து வீக்கங்களையும் தீர்க்கும்).

**பொருள்** :— இஞ்சிச் சாறும் நாரத்தம்பழச்சாறும் வகைக்கு ஒவ்வொருபடி வீதமும்; தேன் ஒருநாழி; சுக்கு திப்பிலி; மிளகு, சீரகம், பெருஞ்சீரகம், இந்துப்பு, கற்கடகசிங்கி, இலவங்கம் பட்டை, ஏலம் இவை வகைக்கு ஒருபலமும், பழைய வெல்லம் இருபதுபலமுமாகக் கூட்டி இளகம் செய்து கொள்க.

## காமாலை, பாண்டு நோய் மருந்து

மிருவச்சோரு மரப்பொடியும் மருதம்பட்டைச் சாறுடனே
வெருவும்வெய்யில் சுவறவைத்து வேறேயாக விதைபோக்கி
கருகநிறம் போல் வறுத்திதனைக் கடுக்காய் நாற்பது பொடி செய்து
பருகீர்கலந்து நெய்யுடனே பசலைப்பாண்டுரு போய்விடுமே. 402

**பொருள்:—** அயஅரப் பொடியை மருதம்பட்டைச் சாற்றில் ஊறவைத்து வெயிலில் உலர்த்தித் தூள்செய்து அதனுடன் விதைபோக்கிய 40 கடுக்காய்த்தோலைக் கறுகவறுத்து இடித்து மேற்படி அயத்தூளுக்குச் சமஅளவு கலந்து உண்டுவரவும். துணைமருந்து: நீர், நெய் இரண்டும் ஆம். பசலை நோயும் பாண்டு நோயும் தீரும்.

மட்டிவெட்டி மருதம்பட்டை வாங்கிச் சாறிரு நாழிகை தன்னில்
அட்டியுழக்கே அரப்பொடியு மதனிற்கலந்து உலந்தக்கால்
தட்டியரைத்துப் பின்னுமொரு தாவிக்கூட்டு மருந்தினிற்கேள்
வட்டத்துத்தி செந்நாயுருவி மலரும்மல்லிகை கையாந்தகரை
பொட்டுப் பொட்டு இந்நாலும் பொருந்தக்கூட்டித் துவைத்திதனை
விட்டுப்பிழிந்தசா றிருநாழி மீண்டுமிதனை மருந்தில்விட்டு
கட்டுப்படாமல் வருபதத்தில் கடுகவரைத்துக் கலத்தலப்பி
பட்டுப்படாமல் வெயிலுலர்த்திப் பதத்திலெடுத்துப் பற்பமாக்கித்
தொட்டுத்தின்னுந் தேனோடே தூலித்திருக்குஞ் உடம்பாகில்
முட்டுப்பட்டு விட்டோடு முதிர்ந்த பாண்டொடு சோபையுமே.

**பொருள் :—** இருநாழி மருதம் பட்டைச் சாற்றில் ஓர் உழக்கு அரப்பொடியை ஊறவைத்து வெய்யிலில் உலர்த்திக் கல்வத்தில் அரைத்தும் மேலும் கூட்டும் மருந்துகளைக் கேட்பாயாக. வட்டத்துத்தி, செந்நாயுருவி, மல்லிகை, கரிசாலை ஆகிய இந்நான்கையும் சமஅளவாய்ச் சேர்த்து இடித்துச் சாறு பிழிந்து இரு நாழி மேற்படி மருந்துடன் கலந்து வெய்யிலில் வைத்துப் பின் அடுப்பிலேற்றிப் பதமாக வறுத்துப் பின் கல்வத்திலிட்டு மேற்படி சாறுகளால் அரைத்து அரைத்து வில்லைசெய்து உலர்த்திப் பற்பமாக்கிக் கொள்க. தேனுடன முறைப்படி உண்க. வீங்கிய உடல் வற்றி நோய் விட்டுவிடும். பாண்டும் சோபையும் தீர்ந்துவிடும்.

## பித்தபாண்டு நோய் மருந்து

கொட்டுங்கிட்டப் பொடியிருநாழி கூட்டுமோரை யிதில்விட்டு
சுட்டுமெருக்கம் பழுப்பதனை யிடித்தேவடித்துப் பொடியுழக்கு
தொட்டுத் தோன்றுஞ் சுக்குமிளகு சொல்வேன் நெல்லி [மொழிமஞ்சள்
இட்டங் கரைத்துப் பொடியாக்கி இரவைக் குண்டத்தின் மேல் [தின்ன
விட்டுப் போமே பித்தபாண்டு வேண்டிக் கொள்ளீர் விரகுடனே.

**பொருள் :—** இரும்புக்கிட்டத்தூள் இரண்டு நாழியெடுத்துப் புளித்த மோரைவிட்டு, அதனுடன் எருக்கன் பழுப்பைச் சுட்டுத் தூளாக்கி, அத்தூள் ஓர் உழக்குச் சேர்த்துப் பலமுறை அரைத்து அரைத்து உலர்த்திவரவும். சுக்கு, மிளகு, நெல்லி வற்றல், மஞ்சள் இவைகளின் தூள்முறைப்படி மேற்படி இரும்புக் கிட்டத்துடன் கலந்து முறைப்படி உட்கொண்டுவரப் பித்த பாண்டு தீரும்.

## சோகை வாயுவுக்குப் பிரண்டை, கடுக்காய்

கிஞ்சுகம் பிரண்டை வேளை பொடுதலை கீழாநெல்லி
வஞ்சமில் கரிப்பான் நொச்சி வனக்கள்ளி யருக்கன் மேனி
அஞ்சவே துவைத்தோர் சார யரைப்படி யரிதாஞ் சித்திர
மிஞ்சிசா றடைவே ரொவ்வோர் விளாங்கனி யளவாய்க் கூட்டே.

**பொருள் :—** பலாசு, பிரண்டை, வேளை, பொடுதலை, கீழாநெல்லி, கரிசாலை, நொச்சி, கள்ளி (திருகுக்கள்ளி), எருக்கு, குப்பைமேனி இவைகளின் சாறுவகைக்கு அரைப்படி விதம் கலந்து, ஆமணக்கின் வேர்ப்பட்டை, இஞ்சி, சாரடை வேர்ப் பட்டை, இவைகளை அரைத்த விழுது ஒருவிளாங்கனியளவு மேற்படி சாற்றுடன் கலக்கிக் கொள்க.

கூட்டுமிந் துப்பு சுக்கு திப்பிலி கொடிய காயம்
வாட்டமில் கருஞ்சீர மோமம் திரிபலை வசம்பொ டுள்ளி
போட்டுமுற் கியாழந் தன்னில் புடமிட்டுப் பூனியாக்கில்
நீட்டுப்போஞ் சோகை வாயு நீள்பிரண் டைகடுக்காய். 406

**பொருள் :—** இந்துப்பு, சுக்கு, திப்பிலி, பெருங்காயம், கருஞ்சீரகம், ஓமம், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், வசம்பு, தோலுரித்த பூண்டுத்திரி இவைகளை முன் கூறப்பட்ட குடிநீரில் போட்டு முறைப்படி புடமிட்டு நீருக்கவும். சோகை, வாயு என்ற நோய்கள் இதைக் கொடுக்க விலகும். இதன் பெயர் தசதாளி எனப்படும்; இதற்குத் துணைமருந்து தேன்.

## சோகைக்குக் குடிநீர்

முரிமுரி முரிமுரி முள்ளி கடவளை
யுரியுரி யுரியுரி யொக்க வெந்தநீர்
பரிபரி பரிபரி பாண்டு ரோகமும்
சரிசரி சரிசரி சோகை வாடுமே. 407

**பொருள் :—** செம்முள்ளிச் சமூலம் வில்வவேர் இவைகளைச் சமஅளவாக எடுத்து நான்கு உரியளவு தண்ணீர் கூட்டி, முறைப்படி குடிநீர் செய்து கொடுக்கச் சோகைநோய் தீரும்.

முறுவிலி பூவிலை முள்ளி தூதளை
வரிவரி குமரிவேர் மணலி நன்னரியோ
டுரியுரி காடி நீர்தனிற் காச்சினல்
சுருசுரு சுறுக்கெனச் சோகை வாடுமே. 408

**பொருள் :—** முறுவிலிப்பூ, முறிவிலிக்கீரை, செம்முள்ளிக் கீரை, தூதுவளை, தண்ணீர்விட்டான்கிழங்கு, சோற்றுக்கற்றாழை வேர், மணலிக்கீரை நன்னாரிவேர், இரண்டு உரியளவு காடி நீரில் மேற்படி சரக்குகளைச் சுருசுருவென்று வற்றக்காய்ச்சின குடிநீரால் சோகை நோயின் வீக்கம் வாடி விடும்.

## பாண்டு நோய்க்குக் கலப்புத்தூள்

பெருங்காயம் வசம்புசித் திரமூலம் சுக்கு பேசுமசமோதகங் கடுக்
[காய் திரிபலையுங் கோஷ்டம்
மருந்தான திவையடைவே யாத்திப்பித்து மதியாமல் யொடித்து
[ரட்டிச் சீனிகூட்டிச்
சுருங்காமல் மூவிரலா லள்ளி முக்கால் சுத்தமாய் நெய் குழைத்து
[விழுங்குவீரேல்
வருந்தாம லிருக்க லுமாம் வாத பித்தஞ் சயரோகம் பாண்டுருவுங்
[கடலில்போமே. 409

**பொருள் :—** பெருங்காயம், வசம்பு, சித்திரமூலம், சுக்கு அசமதாஓமம், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கோட்டம் இவைகளைச் சமஅளவாக எடுத்து இதற்கு இருமடங்கு சர்க்கரை கூட்டி மூவிரல் தேனில் நாளுக்கு மூன்று வேளை சாப்பிட ஆமவாதம், பித்ததோடம் என்புருக்கி (சயம்) பாண்டு இவை தீரும்.

கையான்றன் சாற்றிலே யிருப்புப் பொடி
கனலில் வறுத்துப் பொடித்துப் பதின்கழஞ்சும்
மெய்யான்ற பழங்கிட்டம் பதின்கழஞ்சும்
பொய்யான்ற வறுத்தபொடி தின்பீராகில்
கையான்ற வென்றபாண் டுருவங் கடலில்போமே. 410

**பொருள் :—** கையாந்தகரைச் சாற்றில் ஊறல் செய்து நெருப்பிலிட்டுப் பலதடவைகள் வறுத்து அரைத்து நுண்ணிய தூளாக்கப்பட்ட அயம் 10 கழஞ்சு, அதுபோலவே செய்யப் பெற்ற அயக்கிட்டத்தூள் 10 கழஞ்சு இவைகளைக்கூட்டி முறைப்படி மறுபடி வறுத்தும் ஊறவைத்தும் செய்யப்பட்ட தூளை முறைப்படி உட்கொண்டு வந்தால் பாண்டுநோய் குணமாகிவிடும்.

கரிசாலை வீழி பிரண்டையிலை கருதுங்கீழ்க் காய்நெல்லி வேரிலையும்
மெரிச்சார் மிளகு கருங்குருவை யரிசியேற்கச் சமைத்தபொடி
திரிச்சா லரிய வொண்ணாத பாண்டு ரோக மதுகெட்டு
நரிச்சே யிருந்து புறப்பட்டு நாவாய்த் தேடுங் கண்டீரே. 411

**பொருள் :—** கரிசலாங் கண்ணி, வீழி, பிரண்டை இவற்றின் இலைகள், கீழ்க்காய் நெல்லி வேரும் இலையும், கூட்டி நீரிலிட்டு எரித்த இரசத்துடன் மிளகுகூட்டி கருங் குருவை யரிசிச் சோற்றில்கூட்டி உண்டுவர பாண்டு நோய் தீரும்.

## மஞ்சள் நோய்க்கு மருந்து (காமாலை)

சீராரும் வாட்கொடுப்பை சமூலங் கொண்டு
திருந்துமுசு முசுக்கையிலை யதிலே கூட்டி
நீராரும் நாழிதண் ணீர்தான் வார்த்து
நிலையுரியாய்க் காய்ந்துமறு சட்டிபாய்ச்சி
காராருங் குழல்மடவாய் கையில் வாங்கிக்
கருதியது பருகியிடக் காமாலை தீரும்
நேரார்கள் மஞ்சள்நிறம் நீங்கா தாகில்
நீ சிறுதும் பைத்துளியை விட்டிடீரே. 412

**பொருள் :—** பொன்னுங்காணி சமூலம் முசுமுசுக்கை இலை இவற்றைச் சம அளவாய் எடுத்து முறைப்படி ஒருநாழி தண்ணீரில் ஒரு உழக்களவாய்க் காய்ச்சியுண்ண காமாலை நோய் தீரும். மஞ்சள்நிறம் குறித்த நாள்களில் (5-7 நாள்களுக்குள்) மாறு விட்டால் மேற்படி குடிநீரில் சிறுதும்பை இலைச்சாற்றை வேளைக்கு 10-20 துளிகள் சேர்த்தருந்தவும்.

முத்தெருத் தின்செவி பொடித்திட்டு
முதுகாடியிற் குடிக்கக்கா மாலைதீரும்
மித்தையதிற் குழைத்திடுகிற் கீரைவீழும்
மிப்பொடிவெற் றிலையிற் றின்ன வினைகள் தீரும்

சத்தமிகு சாரடைச்சாற்றிற் கடுக்காய்
கருவேம் பரைத்துக் கொடுக்க மூலந்தீரும்
மொத்தகத்தில் விட வெறுக்கிற பழுத்த சாறுங்
குப்பைமேனி யிலைச்சாறும் பூசத்தீரும். 413

**பொருள்:—** முத்தெருக்கன்செவிச் சமூலத்தை உலர்த்திப் பொடித்த தூளைக் காடியில் அளவுப்படி சாப்பிடக் காமாலை நோய் தீரும். தேனில் குழைத்துக் கொடுத்தால் கீரைப் பூச்சிகள் வெளியே வந்து விழுந்துவிடும். வெற்றிலைச்சாற்றில் கொடுத்தால் (கோழைக்கட்டால் உண்டான) வினைகள் தீரும். சாரடைச் சாற்றுடன் கடுக்காய்த் தூளும் கருவேம்பின் தூளும் கலந்து அதில் மேற்படி தூளையும்கூட்டிக் கொடுத்து வந்தால் மூலப் பிணி தீரும்.

### சுயமக்கினி

இருப்புப் பொடிபத்துக் கெந்தகம் பத்து
யிரதமுக் கழஞ்சுஞ் சேரப் பொடித்து
சரித்த சிற் ருமணக்கி னெண் ணெயிற் பிசறிட்டு
சரிசீரகங் கையாந் தகரைச் சாற்றால ரைத்துப்
பருத்தகற் ருழை மணியிற் பத்துக் கடுக்கா
யிட்ட சாறு தன்னில்
வறுத்துக் கொண்டு வந்து தேன் குழைத்திடுகில்
வயிற்றுநோய் வரட்டு காமாலை குட்டந் தீரும். 414

**பொருள் :—** அயப்பொடி 10 கழஞ்சு, கந்தகம் 10 கழஞ்சு இரசம் 3 கழஞ்சு இவற்றை முறைப்படி தூளாக்கிச் சிற்ருமணக் கெண்ணெய் விட்டு மெழுகுபதமாக அரைக்கவும். பின் அதை ஒரே உருண்டையாக வைத்துக் கொள்ளவும். சீரகத்தைக் கையான் சாற்றில் வெண்ணெய் போல அரைத்து அந்தக் கற்கத்தை மேற்படி உருண்டைக்குப் பக்குவமாகக் கவசமிடவும். அந்தக் கற்கம் தீயும் அளவுக்கு மணல் மறைவுப் புடமிட்டா றவிட்டு எடுத்து அதைக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கற்ருழைச் சோற்றில் கடுக்காய்த் தூளைச் சேர்த்து எடுத்த சாற்றால் ஆட்டி உலர்த்தி வறுத்துப்பின் நுண்ணிய தூளாக்கி எடுத்துக் கொள்க. இதைத் தேனில் குழைத்துண்ண வயிற்று நோய்கள், வரட் காமாலை, குட்டம் ஆகியவை தீரும்.

## சீழ்க்குருதி கழிச்சலின் நிதானம்

வேதநற் சிறுவன் முன்னுள் விரித்தவா கடத்தைப் போற்றி
வாதபித் தத்தா லையத் ததிசாரம் வழுத்துதற்குக்
கோசிலாப் புழைக்கை நால்வாய்க் கூர்மருப்பனை வெற்றிப்
போதக முகத்தோனை ஏத்திப் புணைகழல் புந்தி வைப்பாம். 415

**பொருள்:—** வளி, அழல், ஐயத்தால் தோன்றும் அதிசாரப் பிணியைப் பற்றிக் கூறத் தொளையுள்ள கையையும் தொங்குகின்ற வாயையும் கூரான கொம்பையுங் கொண்ட வெற்றி தரும் யானை முகத்தனைப் பணிந்து அவன் அடியிணையைத்தியானிப்பாம்.

வைத்ததோ ரதிசா ரத்தின் குணபாடல் வழுத்தக் கேண்மின்
துய்த்ததிவ் வுதிரந் தோன்றி யுளைவுநா ழிகைவாய் தொப்புள்
பொத்திட முறுக்குஞ் சீதக் கடுப்புட னிருக்கு மென்றும்
பெத்திடத் திரளும் பல்கால் பிற்படும் மலங்கள் முற்றும். 416

**பொருள்:—** அதிசாரத்தின் குறிகுணங்கள் கூறுவேன் கேட்டுக் கொள்வீராக. நாழிகைக்கொருமுறை மிக்கவலியுடனும், கொப்பூழின்கண் பொத்தலிட்டது போல முறுக்கலும் நோக்காடும் தோன்றி இரத்தம் விழும். சீதமும் கடுப்பும் பலதடவை காணும். மலம் பின்தங்கி விடும்.

முத்திய அதிசா ரத்தின் கிரிகையை முற்றுஞ் சொல்வோம்
உற்றதோர் மலத்தை நீரி லிட்டபோ துதிக்கும் பொங்கி
கற்றைவார் குழலி யர்க்கு அதிசார மென்பார் கண்டீர்
நிற்றநீர் வற்றிச் செய்யில் அதிசாரங் கிரிகை யென்பார் 417

**பொருள்:—** அதிசார மலத்தைச் சிறிது நீரில் இட்டால் அது திடீரெனப் பொங்கிடும். இதுமுற்றிய அதிசாரத்தின் குறி யென்பர். அவ்வண்ணம் பொங்காதாகில் அவ்வதிசாரம் மருத்துவக் கிரியைக்குப் பணியும் என்பர்.

என்றதோ ரதிசா ரத்துக் கிணங்கிய மருந்து கேண்மின்
வன்றனல் முத்தக் காசு திப்பிலி வசம்பு வெட்டுக்
குன்றுரை யேலஞ் சுக்குக் கொடுவேலி கடுகு ரோகிணி
கன்றுவெட் பலகி லந்தை கடுகிப சீர கங்காண். 418

**பொருள்:—** அவ்வதிசாரப் பிணிக்கான மருந்துகளைக் கூறுவேன் கேட்பாயாக: கோரைக்கிழங்கு, திப்பிலி, வசம்பு, வெண்குங்கிலியம், ஏலம், சுக்கு, கொடுவேலி வேர்ப்பட்டை கடுகுரோகணி, இலந்தைக்கொழுந்து, நற்சீரகம்,

தாண்பெருங் குரும்பை யத்தித் திப்பிலீ கடுகு காயம்
பூண்தி விடையப் பித்தப் புடோல்சிறு மூல மோடு
வாண்முலே மடவாய் ஓமஞ் சென்னலி கடுகு மற்றும்
ஏண்சிறு தேக்கு நெல்லி கெந்தக மிவைசெவ் வீயம். 419

**பொருள் :—** பெருங்குரும்பை, யானைத்திப்பிலி, கடுகு, பெருங்காயம், அதிவிடயம், பேய்ப்புடல், கண்டந்திப்பிலி, ஓமம், கடுகு, கண்டுபாரங்கி, நெல்லிமுள்ளி, கந்தகம், செவ்வியம் ஆகிய இவைகளைக் கொண்டு நோய்க்கும் நோயாளிக்கும் தக்க படியாக முறைப்படி குடிநீரோ, சூரணமோ, இளகமோ ஏதோ ஒரு முறைப்படிச் செய்து கொடுக்கவும்.

### மிகுகழிச்சலுக்கு மருந்துணவு

மாறிய குறுணைச் சோறும் பத்தியங் கறிவா ழைக்காய்
காறிய குறிஞ்சில் சுண்டில் நல்லெண்ணெய் கெளுறும் நாட்டஞ்
சீரிய குரவை ஆரால் வராலிவை கொண்டு மென்மேல்
கூறிய வண்ண மிட்டாற் குணமதி சாரங் கோதாய். 420

**பொருள்:—** அரிசியைச் சிறுக உடைத்த நொய்க் கஞ்சியும், வாழைக் கச்சல், கெளிறு, குரவை, ஆரல், வரால் என்ற மீன்வகைளும் கொடுத்து வர அதிசாரம் குணமாய் விடும்.

கோதைகே ளெல்லாங் காய்ச்சி வார்த்துண்ணக் குடிநீர் [சொல்வோஞ்
சீதமா வீர்க்குப் பட்டை சிறுவழு தலைவேர் சுக்குத்
தூதளை நத்தைச் சூரி சிவந்த நாவியுரு வேருந்
தீதிலா முத்தக் காசு சிறக்கவீர் கழஞ்சு கொள்ளே. 421

**பொருள் :—** மாவிலையின் நடுநரம்பு. மாம்பட்டை, சிறுவழுதுணைவேர், சுக்கு, தூதுளை, நத்தைச்சூரி, செந்நாயுருவி வேர், கோரைக்கிழங்கு, வகைக் கொரு கழஞ்சு வீதம் எடுத்து.

கொண்டிரு நாழி நீரில் குறுகவே காச்செட் டொன்றுய்
விண்டதி விடயம் தன்மேல் பொடியரைக் கழஞ்சு தூவி
உண்டிடு நாபி சூலை யுதிரமுள் வலிப்பு நல்ல
வண்டணி குழலாள் மாலைத் தோடம்வந் தணுகா தேகும். 422

பொருள் :— (அவற்றை) இருநாழி நீரில் போட்டுக் காய்ச்சி எட்டுக்கொன்ருகக் குறுக்கி. எட்டுக் கொன்ருய் ஆனபின் குடிநீரை இறுத்து வடிகட்டி தனி அதிவிடயத்தூள் ஒருகழஞ்சள வாக மேற்படி குடிநீருடன் உட்கொள்க. நாபிசூலைப்பிணி உதிரம் விழல், உள்வலிப்பு (குடலில் என்றுகொள்க), மிகுந்த பெண்ணிச்சையாகியவை தீரும்,

ஏகதி விடையம் வில்லக் கனியிரு வேலி வேருத்
தாகம்வேர் முத்தக் காசு வேர்க்கொம்பு தவரு தொவ்வொன்
ருகவீர் கழஞ்சு கொண்டு அதிலிரு படிநீர் விட்டுப்
பாகமா யெட்டொன் ருக்கிப் பருகுந்திப் பிலிமேலி ட்டே. 423

பொருள் :—அதிவிடயம், வில்வப்பழச்சதை, வேலிவேர், உத்தாமணிவேர், கோரைக் கிழங்கு, சுக்கு இவைகளைத் தவருமல் ஒவ்வொன்றும் இரு கழஞ்சாகச் சேர்த்து, இரண்டுபடி தண்ணீரி விட்டு எட்டுக் கொன்ருக வற்ற வைத்துத் திப்பிலித்தூளை மேற்பொடியாகக் கூட்டிப் பருகுக.

இட்டபோ காதியென்னு மதிசார மிதன்மேற் சூலை
உடடண முதிர மூலம் வழிம்பிவை யொழியு மென்றே
மட்டுவார் குழலி யிந்த அதிசார மதனை மண்மேல்
சிட்டர்தா மெடுத்துச் சொன்னர் செகத்தினி லறியத் தானே.

பொருள்:— அவ்வாறு கொடுத்தால் அதிசாரம், அதனுல் பிறந்த சூலைகள், வெம்மை, இரத்தமூலப்பிணிகள், ஒழியும்.

தேன் விழால் குறிஞ்சி நாவல் சிறுவழு திலைவேர்த் தோலுங்
கானுறுக் கடுக்காய் வித்துங் கழஞ்சுதா னுகக் கொண்டு
போனநாள் மோரி லூட்டிப் புரையற வரைத்து மோரி
லூனமி லுள்ளி யோம மரைத்ததில் கலந்துள் ளுண்ணே. 425

பொருள்:— இனிய விழலரிசி, மலையில் வளர் நாவல்தோர், சிறுவழுதுணைவேர்ப்பட்டை, கடுக்காய்ப் பருப்பு, வகைக்கு ஒரு கழஞ்செடுத்து, நேற்றைய (புளித்த) மோரில் இட்டரைத்துத் தோலுரித்த பூண்டுத்திரியும் ஓமமும் கூட்டி உண்க.

உண்டிடும் வெந்நீர் காச்சி உதயாதி விழுமப் போதிற்
பண்டுபோற் கரிகரித்து உலையாட்டிப் பருகிப் பாரின்
மண்டிடுஞ் சகடை யாதி யென்னப்பே ருலைக்கு மற்றுங்
கொண்டநோய் திரளுஞ் சூலை வளிம்புசெங் குதம்போங்
[கோதாய், 426

**பொருள் :**—மேலே வெந்நீர் அருந்துக. அதிகாலையில் மலம் கழியாவிட்டால் (சீதபேதியே கழியுமனுல்) உண்டான நோய் குடலில் திரண்டிடும் சூலைகாணும் குதம் வெளிப்படும் என்பதறிக.

கோதிலா விளாங்கா யுள்ளி சமனகக் கொண்ட ரைத்து
தீதிலாத் தேன்நல் லெண்ணெய் வார்த்ததில் குழைத்துத்
[தின்னும்
நீதியாய் மருந்து நாமங் கடுசாலி யென நிகழ்த்தும்
யாதிவை யுண்டு முன்போல் கரிபிட்டு மறுகா லூட்டே. 427

**பொருள் :**— விளாங்காய்ச்சதை, உரித்த பூண்டுத்திரி, சமமாய் எடுத்து அரைத்துத் தேனும், எள்நெய்யும் இட்டுக் குழைத்து உண்க. இதன் பெயர் கடுசாலி என்பது. இது இரண்டல்லது மும்முறை உண்ணக் குணந்தரும்.

ஊட்டிடும் திரிசூலை மூலம் வளிம்புட னுதிரமாறும்
மீட்டொரு குடிநீர்பூலா வெட்பூல்நா யுருவி வேருங்
காட்டுதூது வளையும் தலை சுடு வழிகாஞ் சோறி
சூட்டுமிக் கழஞ்சோரொன்று மிருநாழி நீர்சொன் னேமே. 428

**பொருள் :**—இதனை உண்பிக்க திரிசூலை, மூலம், வளிம்பு, அதிசாரத்தின் குருதிப்போக்கு ஆகியவை தீரும். மீட்டுமொரு குடிநீர் கூறுவோம். (கரும்) பூலா, வெண்பூலா, நாயுருவி இவைகளின் வேர்களும், தூதுவளை, பொடுதலை. பூனைக்காஞ்சோரி வகைக்கு ஒருகழஞ்சாக எடுத்து இருநாழி நீரில் சேர்க்கவும்.

சொன்னநீ ரெட்டொன் ருக்கிக் குடியந்த மருந்தைச் சோதி
பின்னவே தகத்துக் காடி தனில்விட்டு வேக வைத்துப்
பின்னதில் சிறுக விட்டுக் கடுமுள்ளி மிளகு போதாய்த்
தன்னுடன் மேயங் கூட்டி யுலையாட்டித் தவறு துண்பாய். 429

**பொருள் :**— அதைக் காய்ச்சி எட்டுக் கொன்ருகக்குறுக்கி உண்டிடவும். இம்மருந்தின் குணத்தை ஆராய்க. தீரா விட்டால், மேற்படி மருந்துகளைக் காடியில் இட்டுக்காய்ச்சிக் குறுக்கி அத்துடன் கடுகு, பூண்டு, மிளகு இவைகளைக் கூட்டிக் குடிக்கவும்.

ஆமதி சாரம் பகரு வதிசாரம் எனபோ தரிப
போதீஞ்சத் தசாரமென்னுங் கிராணியொடுதிர
பொன்னே— தாமுதிர வளிம்பு ரோகந்?
தவிர்த்துடன் வற்றித் தங்குந்தேன்
மொழிமாது சொன்னேம் செகத்தினி லறியத் தானே. 430

**பொருள் :—** இப்பாடல் சரியானபடி பொருள் காணுவழி ஏட்டில் சிதைந்துள்ளதை அவ்வண்ணமே பதிப்பித்துள்ளோம் இந்நூலின் வேறு சுவடி கிடைத்தால் மேற்படி பாடலின் சரியான பாடத்தைக் கண்டறிய இயலும்.

தான்மர மஞ்சள் மஞ்சள் வெட்பாலே யரிசி சாந்தங்
கானமர் துரட்டி வில்லக் கனியுமுக் கழஞ்சு தன்னில்
பானியம் படிநீ ரெண்டில் பதருமலெட்டொன் றுக்கித்
தேனதி விடைய மிட்டுச் சீக்கிர மலர்ந்து கூவும். 431

**பொருள் :—** மரமஞ்சள், மஞ்சள், வெட்பாலையரிசி, சந்தனம், துரட்டி, வில்வப்பழச்சதை, வகைக்கு மூன்று கழஞ்சு 2 படி தண்ணீரிலிட்டுக் காய்ச்சி எட்டுக் கொன்றாக வற்றிய குடி நீருடன் தேனையும் அதிவிடயத் தூளையும் சேர்த்துண்க.

கூவிளம் பழநற் சுண்டல் காய்நெல்லிவேர்வேர்க் கொம்பு
தாமரை யல்லி யாம்பல் சதுகுப்பை மதுரமட்டிக்
காவிளஞ் சூதம் வெள்ளி லோத்திரங் கடுகுரோகிணி
பூமகி ழிவையோ ரொன்று தகர்த்துமுக் களஞ்சு புக்கே. 432

**பொருள் :—** வில்வம், நற்சுண்டி நெல்லி இவைகளின் வேர், சுக்கு, தாமரை, அல்லி, ஆம்பல் இவைகளின் கிழங்குகள், சதகுப்பை, அதிமதுரம், விளாங்காய்ச் சதை, மாம்பட்டை, வெள்ளிலோத்திரப் பட்டை, கடுகுரோகிணி, இலவங்கம் இவை வகைக்கு மூன்று கழஞ்சு வீதம் எடுத்து.

புச்கதி லோமங் காய மஞ்சனச் சாலி கடுகு புந்தி
மிக்கவிந் துப்பொ ரொன்று அரைக்கழஞ்சாகச் சொன்னேம்
விக்கிய தயிர்த்தண் ணீரில் பருகிடக் கருதி னுர்பின்
மைக்குழல் முன்பு சொன்ன கறிகூட்ட மாறும் நோவே. 433

**பொருள்:—** அதில் ஓமம், பெருங்காயம், அஞ்சனச்சாலி (கருங்குருவைபரிசி), கடுகு, இந்துப்பு, தனித்தனி அரைக் கழஞ்காகக் கூட்டி இவைகளைத் தயிர்ச்சலத்தால் நன்கு அரைத்து உட்கொள்ளவும். முன்னம் கூறப்பட்ட கறிவகைகளைக் கூட்டி உணவு கொள்க. நோய் தீரும்.

சொன்னவெட் பாலைபங்கம் பாளைவேர் சூதம் பீதம்
வன்னமா முத்தக் காசு திப்பிலி பெரும்பால் மற்றும்
தன்னிலீர் கழஞ்சு ரெண்டு தானது குடிநீர் கூட்டே. 434

**பொருள் :—** வெட்பாலை வேர்ப்பட்டை, ஆடுதின்னுப்பாளை வேர்ப்பட்டை, மாம்பட்டை, பீதரோகணி, கோரைக் கிழங்கு, திப்பிலி, வகைக்கு இருகழஞ்சு கூட்டி முறைப்படி குடிநீர் செய்து கொள்க.

## அதிவிடயக் குடிநீர்

முத்தக் காசுபெரு மரத்துத்தோல் முந்திரிகை யிலவம் பால்
வித்தல் சூதம் நாவலிவை வேரிற்பங்கம் பாளையின் வேர்
கொத்துத் தாகி யிலுப் பையிதட் கொத்தாஞ் சுண்டி கூவிளம்பிஞ்
சத்தி விளாம்பிசின் வெட்பாலை யாரம் பெருங்குமி ழதிவிடையம்.

**பொருள் :—** கோரைக்கிழங்கு, பெருமரப்பட்டை, திராட்சை, இலவம்பிசின், மாம்பட்டை, நாவல்பட்டை, ஆடு தின்னுப்பாளை வேர்ப்பட்டை, இலுப்பைப்பூ, கொத்தான், வரட்சுண்டி, வில்வப்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, விளாம்பிசின், வெட்பாலைவேர், சந்தனம், பெருங்குமிழ், அதிவிடயம்;

விடையங் கல்மத மஞ்சனக்கல் வெற்பா லரிசி வேர்க் கொம்பு
மடவே வெள்ளி லோத்திரமு மழகாஞ் சூத மதிமதுரம்
உடனே பொடித்து முக்கழஞ்சிட் டுழக்குக் கழுநீ ருடனுண்ணில்
திடமா மிரத்த அதிசாரச் சுரமுந் திரிதோட எலும்புருக்கி. 436

**பொருள் :—** கல்மதம், அஞ்சனக்கல், வெட்பாலையரிசி சுக்கு, வெள்ளிலோத்திரம், மாங்கொட்டைப் பருப்பு, அதிமதுரம், தனித்தனி முக்கழஞ்சு முறைப்படி குடிநீரிட்டு அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ள இரத்தாதி சாரம், சுரம், திரிதோடம், எலும்புருக்கி ஆகியவை தீரும்.

## சுரக் கழிச்சலுக்குக் குடிநீர்

மலைதாங்கி முத்தக்கா சத்திப்பட்டை மருவியநீர்ப் பூலாவேர்
[நாவல்பட்டை
யிலைதாங்கு மாதளையின் கொழுந்தும்பிஞ்சம் யிருவேலி யிலா
[மிச்சைமாம் பட்டையேலம்

விலைதாங்கு மதிவிடையம் வேர்க்கொம்பு கோட்டம் மேவிய சீரக
[மதுரங் காசுக்கட்டி
சுலைதாங்க வேயிடித்துக் காய்ச்சிக்கொள்ளக் கழிச்சல் சுர மிவை
[சேரக் கடுகப்போமே. 437

**பொருள் :—** மலைதாங்கி, கோரைக்கிழங்கு, அத்திப் பட்டை, நீர்ப்பூலாவேர், நாவல்பட்டை, மாதுளைக்கொழுந்து, மாதுளைப்பிஞ்சு, கொடுவேலி, வேலிப்பருத்தி, மாம்பட்டை, அதிவிடயம், சுக்கு, கோட்டம், சீரகம், அதிமதுரம், காசுக் கட்டி ஆகியவற்றை முறையாகக் குடிநீர் செய்துட்கொள்ளக் கழிச்சல், சுரம் ஆகியன விரைவில் தீரும்.

## வயிற்றுக் கழிச்சலுக்கு

நெல்லை வறுத்துப் பொடியாக்கி நேகப் பொடிசெய் திதைக்
[கொண்டு
மெல்லத் துருவித் தேங்காய்தன் சாறுவிட்டுக் குழைத்துண்ண
வள்ளக் களிம்பு வயிறடங்க வடைக்குமரனுர் தன்னுணை
நல்லத் தணைய மொழிமானே நன்மையாகு மிதுசெய்யே. 438

**பொருள் :—** நெல்பொரியை நுண்ணிய தூளாக்கித் தேங்காய்ப்பாலில் குழைத்துண்ண வயிறுகட்டும்.

## அதிசாரத்துக்கு

பொன்னுவல் வித்தும் புளியம் நாக்கும்
மென்னு லுலர்த்திப் பொடிசெய்து மேற்றவவை
முன்னுளில் மோரி லரைத்துக் குடிப்பீரே
மன்னு விளைக்கும் வயிற்றதி சாரமே. 439

**பொருள் :—** நாவல் கொட்டைப்பருப்பும் புளியங் கொட்டைமுளையும் ஒத்த அளவாய் எடுத்து மோரில் அரைத்துக் கரைத்துக் குடிக்க வயிற்றுக் கடுப்புத் தீரும்.

## வயிற்றுக்கடுப்புக்கு

சுக்கொடு கடுகொடு கருவேப் பிலையு
முப்பொடு பொடிதனை யொக்க வுண்டிடில்
நற்கிரி பிரிபிரி யாகிய வயிறுகள்
கற்படை யொத்திடுங் கைகண்ட தாணையே. 440

**பொருள் :—** சுக்கு, கடுகு, கறிவேப்பிலை, உப்பு இவை களை அளவோடுண்ண வயிறுபோதல் கட்டுப்படும்.

## பேறு காலத் தாயின் வயிற்றுக் கடுப்புக்கு

புங்கந்தோ லசம தாகம் பொடுதலை யிலையின் சாறும்
செங்கண்மால் வசுவா சத்தி சீரக மனைத்தும் பாதி
பங்கிலாப் பங்கில் பற்றிப் பாதியில் வெந்த எண்ணெய்
நங்கையீர் பிள்ளை மேவின் வெப்புடன் கிருணி போமே. 441

**பொருள் :—** புங்கன்வேர்ப்பட்டை, அசமதாக ஓமம், பொடுதலைஇலை, விஷ்ணுகிராந்தி ஜாதிப்பத்திரி, அத்திப்பட்டை, சீரகம் ஆகியவற்றைக் கூட்டி எண்ணெய் காய்ச்சிக்கொடுக்க, பிள்ளைப் பெற்றவுடன் ஏற்பட்ட வயிற்றுக் கடுப்பு நோய் தீரும். அவ்வேளையில் ஏற்பட்ட சுரமும் தீரும்.

## வயிற்றுக் கடுப்புக்கு

சீதமு மலமு மாகிச் சிவந்துடன் கடுப்பு முண்டாய்
வேதனை செய்யு மாகில் விளம்புவா மொன்று கேளீர்
சாதிவெள் ளசம தாகம் பாலில் சங்குவெந் நீரு மாகத்
தேசியின் பழத்துச் சாறு எண்ணெயுங் கொடுக்க லாமே. 442

**பொருள் :—** மலத்துடன் சீதமும், வெள்ளைச்சீதம் சிவந்தும் கழிந்து வயிற்றில் மிகுந்த கடுப்பும் உண்டானல் ஒரு மருந்து கூறுவாம் கேட்டுக்கொள்ளுங்கள். சாதிக்காய், வெண்ணிற அசமதாகம், ஆகியவற்றைப் பாலில் அல்லது சங்கங் குப்பிச்சாறும் வெந்நீரும் கலந்து அல்லது சிற்றுமணக் கெண்ணெயும் எலுமிச்சம்பழச் சாறும் கூட்டிக் கொடுக்கத் தீரும்.

## வயிற்றுக்கடுப்புக்கு மருந்து

கருவேப்பந் தண்டு குருட்டுக் கொழிஞ்சி காவளைமுத்தக் காவளை
[வேர் சுக்கிந்துப்பு
வருமோரில் மாதளை மொட்டங் கிடித்துட்டு வாய் மூடி அஞ்சு
[நாளுறியில் வைத்து
தருமோரில் பொடுதலைமோ தங்கலக்கித் தளராமல் துழாவியே
[குழம்பாய்க் காய்ச்சி
பருகிடுகிற் றீருமுடன் வயிற்றிரக்கம் பார்த்திருக்க வக்கினிதீ
[பனமுமுண்டாம். 443

**பொருள் :—** கரிவேம்பின்குச்சி, கொள்ளுக்காய்வேளை வேர்ப்பட்டை, முட்காவேளைவேர்ப்பட்டை, சுக்கு, இந்துப்பு, மாதுளைமொட்டு இவற்றை இடித்து ஐந்து நாள்கள் புளித்த

மோரில் போட்டுக் கலக்கி அதில் பொடுதலை சமூலத்தையும் ஓமத்தையும் நன்றாய் அரைத்துக் கலக்கிக் காய்ச்சிக் குழம்பு பதமான வுடன் இறக்கித் துணியில் வடிகட்டி அளவுபோல் உண்டுவர வயிற்றுப் போக்குத் தீரும். நல்ல பசியு முண்டாகும்?

வெதுப்புடனே வயிற்றிரக்கந் தோன்றிற் றென்னில் வெற்றாலின்
[வேர்தன்னில் சிவந்ததோலை
ஒதுக்கியரைத் தாட்டுப்பால் தயிருறைத்து உழக்கிலே கரைத்
[திதனைக் குடிக்கத்தீரும்
மதித்தவரைச் சாறுதனைக் கொள்ளத்தீரும் வருமத்திப்பிஞ்
[செண்ணெய் பொரித்துத் தின்னில்
அதுநிற்கு மதிவிடையஞ் சுக்குக் குடிநீ ரதுகொள்ளி லறுதியது
[தீருங்காணே 444

**பொருள் :—** சுரத்துடன் பேதி கண்டிட்டால் ஆலின் வேர்ப்புறணியைச் சீவி நீக்கி உள்பட்டையை வெள்ளாட்டுத் தயிர்விட்டு அரைத்து, தக்க அளவு ஓர் உழக்குத் தயிரில் கலக்கிப் பருகத்தீரும்; அவரைஇலைச் சாற்றைப் பருகத் தீரும்; அத்திப் பிஞ்சை எண்ணெயில் பொரித்து அருந்திடில் தீரும்; அதிவிடயம், சுக்கு இவை இரண்டையும் சம அளவாக எடுத்துக் குடிநீர் செய்து உண்ண மேலே கூறப்பட்ட சுரத்துடன் தோன்றிய பேதி தீரும்.

முத்தல் முத்தக் காசதனை முதிரவனற்றி யிருநாழி
பற்ற விடித்து மாவாக்கிப் பையத் தெள்ளி யிடித்திட்டுச்
செற்றது பிட்டுப் போல்சுட்டு சேரப் பிழிந்த சாறதனில்
தூத்திக் குடியீர் மோதகத்தைத் தோற்கும் வயிற்றுக்
[கடுப்புளதே. 445

**பொருள்:—** நன்றாய் முதிர்ந்த கோரைக்கிழங்கை எடுத்துச் செம்மையாக வறுத்து இடித்து மாவாக்கிப் பிட்டவித்தல் போல வேகவைத்து அவ்வாறு வெந்த பிட்டைப் பிழிந்து வந்த நீரில் ஓமத்தைப் (அசமோதகம்) பொரித்துத் தூளாக்கி அரைத்துக் கலக்கி அருந்த வயிற்றுக்கடுப்பு இம் மருந்துக்குத் தோற்றோடி விடும்,

மாற்றும் வயிற்றுக் கடுப்புக்கு வளிம்பு மாந்தோல்நாவ லிலுப்பை
[யுடன்
சாற்றில் சாறு நாழிவடித்துத் தெளிந்த தெளிவிதனில்
யூற்றி மண்டி மேதியின்மோர் கூட்டி மேற்பொடி மோதகமிட்
டாற்றலோடே பருகிடுகி லன்றே கடுப்புத் தீர்ந்திடுமே. 446

**பொருள் :—** மாம்பட்டை, நாவற்பட்டை இலுப்பைப் பட்டை, ஆகியவற்றை இடித்துப் பிழிந்த சாற்றைச் சம அளவாகக் கூட்டி ஒரு நாழியானதும் அதைத் தெளிய வைத்து அத்தெளிவில் சம அளவு எருமை மோர் சேர்த்துக் கலக்கி ஓமத்தூளை மேற்பொடியாகப் போட்டு உண்ண வயிற்றுக் கடுப்புத் தீர்ந்திடும்.

மன்னு முலைமடவாய் கேளாய் மாதளைமொட்டுப் பிஞ்சுடனே
நண்ணும் நறுவிலியின் பிஞ்சும் நல்லதோலுந் தகர்த்திட்டு
உன்னி யெட்டொன் ருய்க்காய்ந்த குடிநீருண்ண வல்லீரேல்
பண்ண வேண்டாம் வயிற்றிரக்கம் வழிம்பும் பறந்து போய்
[விடுமே. 447

**பொருள் :—** மாதுளையின் முகை, மாதுளைப்பிஞ்சு, நறு விலிப்பிஞ்சு, நல்ல இலவங்கப்பட்டை, ஆகியவற்றை ஒத்த சம அளவாக எடுத்து நல்லவண்ணம் நசுக்கி நீரிலிட்டு முறைப்படி குடிநீர் செய்து உட்கொள்ள அதிசாரமும், ஆசனவாய் வெளியே புறப்படுதலும் தீரும்.

### மூலவாயுவுக்குக் கலப்புத்தூள்

அந்தவரை முறிநொச்சி குப்பைமேனி யரியபொடு தலையவுரி
[கொழுஞ்சி கொற்றுன்
வந்தவச மோதகமிந் துப்பினேடே வருதிரி கடுகுவறுத்த
[பொடி யுண்டாக்கி
முந்தமூ விரல்களினுல் முக்காலள்ளி முயன்றபொடி சிறுகாலே
[தின்பீராகில்
வந்த மிகு அக்கினியும் வாயுவும் போம் வருமூல மதுவும்வே றுக்
[குங் காணே. 448

**பொருள் :—** மலைநொச்சிஇலை, குப்பைமேனி இலை, பொடுதலைஇலை, கொள்ளுக்காய்வேளை, கொற்றுன், அசமோதகம், இந்துப்பு, சுக்கு, திப்பிலி, மிளகு, ஆகியவற்றை உலர்த்திச் சம அளவாய் எடுத்து முறைப்படி தூள் செய்து மூவிரல் வீதம் ஒரு நாளுக்கு மும்முறை உண்டுவந்தால் மிகுந்த சூடும் வாயுவும் நீங்கிவிடும். மூலநோய் என்னும் எருவாய் முளைப்பிணி தீர்ந் திடும்.

வாயு வந்து முட்டிற் றென்று வயிறு வலித்துக் கூப்பிடாதே
தீயு முப்பும் புளியஞ்சிராயும் எருக்கம் பழுத்தல் கலந்தடுக்கிக்
காயை வீசி நாயுருவி விறகு மடுக்கிச் சுட்டபொடி
ஏயவெந் நீரிற்கலந்து குடிக்கி லேகுமூத்திர நோய் வினையே.

**பொருள் :—** வாயு ஓங்கித் தாக்கியதால் வயிற்றில் வலியுண்டாய்த் தாங்கவியலாமல் மிகுந்த கூச்சலிடும் போது வெடியுப்பு, புளியின் கட்டைத்துண்டுகள், எருக்கன் பழுப்பு ஆகியவற்றை ஒன்ருகச் செவ்விதின் அடுக்கி நாயுருவி விறகால் எரித்துச் சாம்பல் ஆக்கவும். அந்தச் சாம்பலை நீருடன் கலக்கி உண்ண நீர்ப்பிணிகள் தீரும்.

## வாயுவுக்கு எண்வகைத்தூள்

சீரிய இருவருஞ் சிறந்த மூவரும்
கூரிய ரொருவரும் கொடிய காயமும்
யாரிய வடக்கரை யமர்ந்த மோதகம்
நேர்படி னென்பொடி நெருப் பொக்குமே. 450

**பொருள் :—** இருவகைச் சீரகம் நற்சீரகம், கருஞ்சீரகம் என்பன. (சிலர் பெருஞ்சீரகம் என்னும் சோம்பைக் கூட்டுவர்) மூவர், திரிகடுகு என்னும் சுக்கு, திப்பிலி, மிளகு என்பன ஆகிய மூன்று சரக்குகள். இந்துப்பு, பெருங்காயம் ஆகிய எட்டும் அட்ட சூரணம், எண்காரப் பொடி என்று வழக்கிலுள்ளது. இவற்றுடன் ஓமம் என்னும் சரக்கைக் கூட்டிடில் அது பசித் தீத் தூண்டும் பணியில் நெருப்பை ஒத்திருக்கும்.

அரைமுறி யிலைவேர் நொச்சில் அருந்தும்பை கொழுஞ்சி கொற்ருன்
கருமுள்ளி கரிய வேம்பு கையான் குப்பை மேனி
முருக்கிலை சுக்கிந் துப்பு மோதகந் தூளியாக்கி
வெருகடி அளவே தின்ன மிகுத்தவக் கினிய தாமே. 451

**பொருள் :—** நொச்சிக் கொழுந்திலை, நொச்சி வேர்ப் பட்டை, தும்பை வேர்ப்பட்டை, கொளுக்காய் வேளை, கொற்ருன்சமூலம், கருமுள்ளி, கரியவேம்பு, கறிசாலை, குப்பைமேனி, பலாசிலை, சுக்கு, இந்துப்பு, ஓமம் இவைகளைச் சம எடையாக எடுத்துத் தூளாக்கி வேளைக்கு மூவிரலளவு உட் கொண்டுவர நல்ல பசித்தூண்டி யாகும்.

பொடுதலை யவுரி நொச்சி பொருந்திடுங் குப்பை மேனி
படுநில வகை முட்கா வளையின்வேர் மருவிந் துப்பு
கடுகச மோதகஞ் சுக்குச் சீரகந் தூளி யாக்கி
வடிசெய்து தின்ன வாயு நீங்கியக் கினியுண் டாமே. 452

**பொருள் :—** பொடுதலை, நீலி, நொச்சி, குப்பைமேனி, நிலவாகை, முட்காவேளை வேர்ப்பட்டைகள், இந்துப்பு, கடுகு, ஓமம், சுக்கு, சீரகம் இவைகளைத் தூளாக்கிச் சம அளவாகக் கூட்டி அருந்த (அகட்டு வாயு) நீங்கிப் பசித்தீ உண்டாகும்.

## வாயுவுக்குக் குடிநீர்

சுக்கு மிளகு திப்பிலியுந் துலங்குங் கடுக்காய் வெள்ளுள்ளி
நக்கும் பனைநற் காரம் நல்ல மஞ்சள் குளவிந்தம்
நொக்கு மொன்றென் றிருகழஞ்சி னுள்ளே காய்ந்தெட் டொன்றாக்கி
நக்கப் போமே வாயுவிகாரம் நல்ல குடிநீர் குடியீரே. 453

**பொருள் :—** சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய்த்தோல் தோல் உரித்த வெள்ளைப் பூண்டிதழ், பருத்த அக்கராகாரம், கறிமஞ்சள், கப்புமஞ்சள் தனித்தனி இரண்டு கழஞ்சுவிதம் எடுத்து முறைப்படி கியாழம் செய்து உட்கொள்ள அகட்டு வாயு தீரும்.

## வாயுவுக்கு நெய்

தைவேளைச் சாறு நாழி சாரடை வேரு மிருபலமே
கைவளைக் காயிரு கழஞ்சு காக்கு முள்ளி முப்பலமும்
பைவளை சுக்கா மைங்கழஞ்சு பசுவின் நெய்யால் வெந்துநக்க
மைவளர் குழலாய் கேளாய் வாயு விகாரம் வாராதே. 454

**பொருள் :—** தைவேளைச்சாறு ஒருநாழி, சாரடைவேர்; பட்டை 2 பலம், சங்கன்காய் 2 கழஞ்சு; பூண்டு (தோலுரித்தது) 3 பலம்; சுக்கு 5 கழஞ்சு இவைகளைப் பசுவின் நெய்யில் (அளவுப்படி சேர்க்கவேண்டும்) சேர்த்துக்காய்ச்சி உட்கொள்ளவும். வாயுவின் கோளாறுகள் தோன்று.

## குன்ம வாயுவுக்குக் குடிநீர்

வாயு விகாரம் வாராது வருகுன் மத்துக் கானதுகேள்
ஆயு மிளகு முக் கழஞ்சு மதனே ருள்ளி யதுகூட்டித்
தேயுந் திப்பிலி தான்கழஞ்சு செலுத்துங் கழலின் பருப்புடனே
மாயு மீதெட் டொன்றாக்கி யருந்தத் தீரு மென்றனரே. 455

**பொருள் :—** மிளகும், தோலுரித்த பூண்டும் தனித்தனி மூன்று கழஞ்சு வீதமும் திப்பிலியும் கழற்சிப் பருப்பும் ஒவ்வொரு கழஞ்சு வீதமும் கூட்டி முறைப்படி நீர் கூட்டி எட்டுக் கொன்ருக வற்ற வைத்து உட்கொள்ள வாயுவின் விகாரம் வராது. இது குன்மத்துக்கும் ஆன மருந்தாம்.

## வாயுக்குச் சூரணம்

இந்துசீ ரகத்தொ டசமோ தகமிவ்
 வாறுடனே திரிபலேசுக் கைந்துங் கொண்டு
வந்தவுட னேயிதனே யாற்றிப் பிற்று
 வருகோதை யினுப்பமரித் தீயுங் கொண்டு
முந்தவொரு வோடுவைத்து வறுத்தி டித்து
 முயன்றபொடி சிறுகாலே தின்பீ ராகில்
வந்துபசி மிகுத்துவயிற் றுக்கிருமி யும்போம்
 வாதகுன்ம சூலேமூலம் வாராது காணே. 456

**பொருள் :—** இந்துப்பு, நற்சீரகம், ஓமம் வகைக்கு ஆறு பங்கும் தான்றிக்காய்த் தோல், நெல்லி முள்ளி, சுக்கு இவை வகைக்கு ஐந்துபங்கும் கொண்டு ஓட்டிலிட்டு வறுத்து இடித்து அளவுப்படி கூட்டிக் காலே வேளேகளில் உண்டு வருக. இதனல் பசி மிகுக்கும். வயிற்றுக் கிருமிகள் போம். வாத குன்மம், சூலே, மூலம் ஆகிய பிணிகள் வாரா.

## வாயுவுக்குக் குடிநீர்

சுக்குமுக் காவளேசா ரடையின்வேர் துய்ய கருவேம்பு
 [கீழாநெல்லி
யொக்கவிடித் துத்தண்ணீ ரெட்டொன்ருக்கி யுலவுமரி திப்பிலியு
 [மேற்பொடி யிட்டுப்
பக்குவத்திற் கருதியது கையில் வாங்கிப் பரிகிடிலக்
 [கினிதீபன முமுண்டா
மிக்ககையோ டேவெதுப்பும் வாயு வும்போம் மேல்வருவ
 [தறியோம்நா மிதுசெய்யீரே. 457

**பொருள் :—** சுக்கு, முக்காவேளேவேர், சாரடைவேர், கருவேம்பு, கீழாநெல்லி, சமஎடையாகச் சேர்த்து இடித்துத் தண்ணீரிலிட்டு எட்டுக் கொன்ருகக் குறுகக் காய்ச்சிய குடி நீரைக் குடிக்கும்போது திப்பிலித் தூளே மேற்பொடியாகச் சேர்த்துட் கொள்க. பசி உண்டாகும்; வெதுப்பும், வாயுப்பிணி களும் தீரும்.

## வாயுகுன்மத்துக்குக் குடிநீர்

அன்னப் பாவாய்! ஆண்பனை தன்னில் அடுக்குங் கூர்க் [கோலுடனே
துன்னச் சமூலங் கொடுவேலி சுழலா திப்படி நாயுருவி
வின்ன மூன்று முடன்சுட்டுச் சேரச் சாம்ப லூறவிட்டுச்
முன்னந் தலைநாளந்திப் பொழுதில் மூன்று நாழி நீரதனில்
மன்னுஞ் சாம்பலொரு பிடியிட்டு மறுநாள் சிறுகாலை வடித்தி [தனில்
கொன்னு முழக்குக் கொள்ளிட்டுக் குறுகக் காய்ச்சி [யெட்டொன்ருய்ப்
பின்னும் வடித்ததன் மேற்பொடிகேள் பெரிய சுக்கு மிளகு [திப்பிலி
யின்னந் தேனுடன் குடிப்பீரேல் தீரும் வாயு குன்மமுமே. 458

**பொருள் :—** ஆண்பனையின்பூ (உலர்ந்தது : இதனைப்பனை விரல் என்று மலைநாட்டவர் கூறுவர்) கொடிவேலி சமூலம், நாயுருவி சமூலம். இவைகளை நன்கு உலர்த்தி, தனித்தனியாகக் கொளுத்தி வெண்ணிறச் சாம்பலாக்கி அதைச் சமஎடையாக எடுத்துக் கலந்து வைத்துக் கொள்க. மேற்படி சாம்பலை ஒரு பலம் [ஒருபிடி = ஒருபலம், 3 தோலா அல்லது 3ரூபாய் எடை (பழைய வெள்ளிரூபாய்) என்றறிக] எடுத்து மூன்று நாழித் தண்ணீரிலிட்டுக் கலக்கி ஒரு இரவெல்லாம் வைத்திருந்து மறு நாள்காலையில் வடிகட்டி அந்த நீரை மட்டும் எடுத்துக் கொண்டு அதில் ஓர் உழக்குக் கொள்ளைப் போட்டு அடுப்பேற்றி வைத்த நீரில் எட்டில் ஒரு பங்காக வற்றியவுடன் இறக்கித் தண்ணீரை இறுத்து வடிகட்டித் தேன்கூட்டித்திரிகடுகு தூளுடன் உட்கொள்க. வாயுகுன்மம் தீரும்.

கடுக்காய் கொள்ளுக் கொடுவேலி கனத்த திப்பிலி சுக்குள்ளி
புனத்தார் செவ்வியஞ் சிறுகடுகு புங்கு காவலை குறுந்தொட்டி
அணைத்தா ரொக்க வுடன்கொண்டு அதனைக் காய்ச்சி யருந் [தியிடச்
சினத்தார் போல வருஞ்சூலஞ் செறிந்து நில்லார் சிவனணை. 459

**பொருள் :—** கடுக்காய்த்தோல், கருங்கொள், சித்திர மூலம், அரிசித்திப்பிலி, சுக்கு, தோலுரித்த பூண்டுத்திரி, செவ்வியம், சிறுகடுகு, புங்கு, முக்காவேளை, சிற்றுமுட்டி இவை களைச் சம எடையாக எடுத்து முறைப்படி குடிநீர் காய்ச்சி வடிகட்டி உண்க. சூலை நோய்கள் தீர்ந்திடும்.

## குன்மவாயுவுக்கு மருந்து

குன்மங் காணுங் கொல்லுகிது கொடிய கடிய நோவென்ருே
கன்மங் காணு மிதுசெய்யீர் கள்ளிப் பாலு மிந்துப்புந்
தென்னங் காயிற் புகப்பெய்து தீயில் சுட்டங் குள்ளதிலே
புன்னங் காயத் தனை தின்னப் போமே குன்ம முள்ளதெல்லாம் 460

**பொருள் :—** ஒரு தேங்காய்க்குள் செல்லத்தக்க கள்ளிப் பாலும் இந்துப்பும் சமஎடையாகக் கூட்டி ஒரு முதிர்ந்த தேங்காய்க் குட் செலுத்தி மேலே உள்ள ஓடு மட்டும் வேகுந்திட்டத்தில் ஒரு புடம் போட்டு எடுத்து, மேலே கரியாகி விட்ட ஓட்டை நீக்கிவிட்டு மீதியுள்ள பாகத்தைக் குழிக்கல்லிலிட்டு நேக அரைத்து மெழுகுபோல வைத்துக் கொள்க. வேளைக்கு ஒரு புன்னைக் காயளவு (ஒரு நாளுக்கு ஒரே வேளை) உட்கொள்ளக் குன்மம் தீரும்.

செப்பமேனி கொண்ட கொங்கை வல்லி மாதே கேள்மினே
வெப்பமேனி கொண்டு குன்ம வெள்ளி மேனி யானவ
ருப்பை மேனி கொண்டுகாய வுள்ளி மேனி கொண்டதோர்
குப்பைமேனி தின்னமேனி குவளை மேனி யாகுமே. 461

**பொருள் :—** உப்பைக் (சோற்றுப்பு) குப்பைமேனிச் சாற்றில் பாவனையும் அரைப்பும் செய்து முறைப்படி பற்பமாக்கிக் குப்பை மேனிச் சாற்றிலாவது மேற்படி குடிநீரிலாவது உண் டால் குன்ம நோய் தீரும்.

## குடிநீர்

காட்டு மிளகு சிறியகறி கலந்த வேர்க்கொம் புடனுள்ளி
மீட்டுஞ் சிறந்த திப்பிலியார் விளக்குக் கொடியகொ டுவேலிவேர்
தீட்டுங் களப முலைமடவார் சிறந்த நீரெட் டொன்ருக்கி
யூட்ட வற்ற தண்பனையார் யோடி யொளிப்பர் கண்டீரே. 462

**பொருள் :—** காட்டுமிளகு, சிறுமிளகு, சுக்கு, திப்பிலி, மிக்கக்காரமுள்ள சித்திரமூல வேர்ப்பட்டை, இவைகளைக் கொண்டு எட்டுக்கு ஒன்ருக வற்றக்காய்ச்சிய குடிநீர் அருந்திடில் வயிற்றில் செறிந்த வாயுத் தீரும்.

சிற்றாலைச்சா றடைக்கிழங் சொருநாழி தெள்ளுஞ் வெள்ளுள்ளி நாழி
வெற்றிலைச் சாறு எருக்கிலைச் சாறு முருக்கிலைச் சாறு முந் நாழி

மற்றிலைச் சாறு வளரிளங் கொம்பே மாகத முற்றுத் துகளாக்கிச்
சற்றிடத் தின்னக் கொட்டிடுங் குன்மஞ் சாதிவே ரெட்டுக் குந்
[தானே. 463

**பொருள் :—** சிறிய இலைகளையுடைய சாரடைக் கிழங்குச் சாறு ஒருநாழி, தோலுரித்த வெள்ளைப்பூண்டுச்சாறு ஒருநாழி, வெற்றிலை, எருக்கன் பழுப்பிலை, முருக்கிலை இவைகளின் சாறும் வகைக்கு ஒருநாழியாக மொத்தம் மூன்று நாழிச் சாறு என்னும் இவ்வைந்து சாறுகளிலும் தனித்தனியே அளவுப்படி அரிசித்திப்பிலியை ஊறவைத்துச் சாறுசுண்டும் படியாகச் சூரியபுடமிட்டு எடுத்து நன்ருக உலர்த்தித் தூளாக்கி அளவுப்படி உட்கொண்டால் எண்வகைக் குன்மங்களும் தீரும்.

## எண்வகைக் குன்மங்களுக்கும் மருந்து

நானுழி நீர்பாட வெள்ளாட்டுப்பால் நாலுதேங் காய்துருவி
[யதிலேவிட்டு
பால்நாழி உள்ளிமொளி நாழிகூட்டிப் பரிசாகப் பிழிந்ததிலே
[யசமோதகம்
தீருகுந் திரிகடுகு யிந்துப்புக்காயஞ் சீரி யறுவர்பொடி யீராறிட்டுத்
தானுகத் துழாவிய கடுதுதின்ருல் தவருத அஷ்டகுன்மந்
[தவிர்ந்துபோமே. 464

**பொருள் :—** வெள்ளாட்டின்பால் 4 நாழி அளவும், நான்கு தேங்காய்களைத் துருவிப் பிழிந்த தனிப்பால் ஒரு நாழியளவும் தோலுரித்த பூண்டுச் சாறு ஒருநாழியும் கூட்டி, அதிலே அசமதா ஓமம், முக்கடுகு, இந்துப்பு, பெருங்காயம் இவ்வாறின் தூளை வகைக்குப் பன்னிரண்டு கழஞ்சளவாகக் கூட்டிக் கிளறி தீயாமல் கடுகுதிரளக் கிண்டி அக் கடுகை உண்டுவர எண் வகைக் குன்மங்களும் தீரும்.

## குன்மத்துக்குக் கலப்புத்தூள்

எருக்கு நொச்சிசவுரி கொத்து சங்கு வெற்றிலை கருவேல்
முழிக்கஞ் சாறுடன் முந்நாழி முதிய தேங்காய்ப் பால்நாழி
இருக்குந் திரிகடு இந்துப்பு இருசீ ரகமு மிருகாயும்
நறுக்குஞ் சாற்றில் கடுகவறுக்க நாவாய் தேடும் நவில்குன்மம்.

**பொருள் :—** எருக்கு, நொச்சி, சவுரி, இசங்கு வெற்றிலை, கருவேலன் இலை, பலாசிலை இவைகளின்சாறு தனித்தனி மூன்று நாழியும், தேங்காய்ப்பால் ஒருநாழியும் கலந்து அதில்

திரிகடுகு, இந்துப்பு, கருஞ்சீரகம், நற்சீரகம், கடுக்காய்த்தோல், நெல்லிமுள்ளி ஆகியவைகளை ஊறவைத்து வறுத்துத் தூள் செய்து சாப்பிடில் குன்மம் போம்.

## குன்மத்துக்குக் குமரி பற்பம் (எண்-1)

காந்தங்கெந் தகநாலு சூதமூன்று கருதுமரப் பொடிபதி னொன்று
[கூட்டி
வாய்ந்தகு மரிச்சாற்றி லரைத்துருட்டி வலியபுதுச் சிரட்டை
[யிட்டு வெயிலில்வைத்து
போந்தவெடித் ததில்தூபம் புறப்பட்டாக்கால் பொடிசெய்து
[மூவிரலால் சிறுகாலைதின்னில்
காய்ந்துமிகு அக்கினியுங் கடியகுன்மங் காலில்விழுந்
[தோடியிடுங் கண்டுகொள்ளே. 466

**பொருள் :—** காந்தம், கந்தகம் இவை தனித்தனி நான்கு பங்கும், இரசம் மூன்று பங்கும், அய அரப்பொடி பதினொரு பங்கும் கூட்டி முறைப்படி தூள் செய்து, சோற்றுக்கற்றாழைச் சாற்றால் அளவுப்படி அரைத்து உருட்டி, வன்மை மிக்க தேங்காய் ஓட்டில் வைத்து வெய்யிலில் வைக்கவும். அந்த உருண்டை வெடித்து அதனுள்ளிருந்து புகைவெளிவரும் சமயம் பார்த்து அதை எடுத்துக் கொள்க. முவ்விரலளவு தினம் காலையில் மட்டும் உண்டுவரக் குன்மம் தீரும், பசி அதிகரிக்கும்.

தாங்காமல் பசுவின்பால் வெள்ளாட்டுப்பால்
தருவெற்றி லைச்சாறுதேன் குன்றிச்சாறு
ஏங்காமல் எருக்குமுருக் கிலைச்சாறு கள்ளிகொற்றான்
எண்ணுழி சாறடைவேர் உள்ளி நாழி
யோங்காதே சுக்கிந்துப் பசமோதகஞ் சாதிக்காய்
ஒரொன்று ஒருபலம் பொடிசெய்திட்டுப்
பாங்காக வறுத்தகடு விசமுங் கெட்டுப்
பதறியெழுந் தோடுமட்ட குன்மந்தாமே. 467

**பொருள் :—** பசுவின்பால், வெள்ளாட்டுப்பால், வெற்றிலைச் சாறு, தேன், குன்றிஇலைச்சாறு, எருக்கிலைச்சாறு, முருக்கிலைச் சாறு, கள்ளிச்சாறு, கொத்தான்சாறு இவை தனித்தனி எட்டு நாழியும், சாரடைவேர்ச்சாறு, வெள்ளைப்பூண்டுச்சாறு தனித்தனி ஒருநாழியும் கூட்டி அதில் சுக்கு, இந்துப்பு, ஓமம்

சாதிக்காய் தனித்தனி ஒருபலம் வீதம் இடித்துக் கூட்டி வறுத்துத் தூள் செய்துண்ண வயிற்றில் உள்ள நஞ்சுகளும் குன்மங்களும் தீரும்.

## ஏலாப் பெருங்கழிச்சலுக்குக் கலப்புத்தூள்

## (கிரகணி)

சாரடைவேர்ப் பொடிநாழி சரிகல்லுப்பு
　சரிவெள்ளாட் டுப்பாலும் சரிவெற்றிலைச்
சாறதனில் வறுத்தபொடி குன்மந்தீரும்
　சதிராக விப்பொடிநெய் நக்குவீரேல்
வேறுவிரோ சனத்துக்குத் தேடவேண்டா
　மிக்கபொடி கடுகுமஞ்சள் சுக்குங்கூட்டி
கூறுமோ ரிற்குடிக்கி லிரத்தஞ்சீதங்
　குலைசெய்யுங் கிராணிகுலைந் தோடுங்காணே. 468

இந்தச் சூரணம் குன்மத்துக்கும் விரோசனத்துக்கும் கிராணிக்கும் சொல்லியிருப்பதை அறிந்து செய்யவும்.

**பொருள் :—** சாரடைவேர்த்தூள், கல்லுப்பு, வெள்ளாட்டுப்பால், வெற்றிலைச்சாறு இவைகளைச் சமஎடையாகக் கூட்டி வறுத்துப் பொடித்ததூள் குன்மத்தைத் தீர்க்கும். மேற்படிதூளை நெய்யில் குழைத்து நக்க கழிச்சலாக்கக் கூடிய மருந்தொன்றும் தேடத்தேவையில்லை; அதுவே மலத்தைக் கழிக்கும். மேற்படி தூளுடன், கடுகு, மஞ்சள், சுக்கு, இவைகளின்தூளையுமுடன் கூட்டி மோரில் கலக்கி உண்ணக் கிராணி என்னும் நோய் தீரும்.

## குமரி பற்பம் (எண்-2)

ஈயங் கழஞ்சுருக்கு முகத்தில் இரத மிருகழஞ் சைப்பாச்சி
ஆயுங் கெந்த கம்மிரண்டு அடுக்குங் காந்த மெண்கழஞ்சு
தேயு மரப்பொடி ஈரிரண்டு சேரக் குமரிச் சாற்றரைத்து
காயு வெயிலில் கனக்கமூடிக் கலத்தில் வைக்கப் புகையெழுமே.

**பொருள், —** வெள்ளீயம் ஒருகழஞ்சு, இரசம் இரண்டு கழஞ்சு. வெள்ளீயம் உருகும்போது, இரசத்தைக் கூட்டி வெட்டையாக்கி, தூள் செய்து அதனுடன் கந்தகம் இரண்டு கழஞ்சும், காந்தம் எட்டுக் கழஞ்சும் கூட்டிப் பொடித்துக், கற்றாழைச் சாற்றாலரைத்து ஒரு கலத்தில் அப்பி அதன்மேல் கனமான மூடியைக் கொண்டு மூடி வெய்யிலில் வைக்கப் புகை தோன்றும்.

புகையும் பக்குவ மதுதனிலே எடுத்துப் பொடித்துச் சேர்த்து
[வைத்துப்
பகையாய் வந்த அட்டகுன்மம் கவிசை பீலிகை கெடவேண்டில்
நிகையா னதனிற் பணவெடையை நேரே கொடுக்க விட்டுப்
[போம்
தகைதா னென்றும் வாராது தவிர்ந்து போகுங் கண்டீரே. 470

**பொருள் :—** புகையும் பக்குவத்திலே அதை எடுத்துப் பொடித்துக் குப்பியில் அடைக்கவும். உடலின் நலத்துக்குப் பகையாகத் தோன்றிய எண்வகைக்குன்மமும், கவிசை, பிலீகை ஆகிய நோய்களுங் கரிசாலைச் சாற்றில் கலந்து கொடுத்துண் பித்தால் தீர்ந்துவிடும். இடையூறென்றும் வராது.

### வயிற்று நோய்க்குச் செந்தூரம் சிந்தாமணி

காரம்வெண் தூர மூசிக் காந்தமே துரிசு துத்தம்
தராவொடு லோகம் வங்கம் தாம்புரம் நெல்லி கெந்தி
யோர்பலஞ் சூதந் தொட்டி மனோசிலை நிமிளை பாதி
நேருறப் பொடித்தே கள்ளிப் பாலரைப் படிநீர் நாழி 471

**பொருள் :—** வெங்காரம், காந்தம், துருசு, துத்தம், தரா, அரப்பொடி. அயஅரப்பொடி, வங்க அரப்பொடி, தாமிர அரப் பொடி, நெல்லிக்காய்க் கந்தகம் வகைக்கு ஒரு பலம் வீதமும், இரசம், தொட்டிப் பாடாணம், மனோசிலை, நிமிளை ஆகிய இவைகள் வகைக்கு அரைப்பலம் வீதமும் எடுத்து முறைப்படி அரைத்து ஒருபடி கள்ளிப்பால் செல்லும் அளவு அரைத்து ஆனபின்;

நாவுலர் மீதோ ருள்ளி முப்பலம் நறுக்கிக் காய்ச்சி
மேவவே பாதி யானல் வடித்ததில் விட்டரைத் தோர்
தூவக லடைத்து முன்போல் புகட்டிமண் சீலை சுற்றி
மூவொரு நாள்வெந் தீயில் உற்றநோய் முழுதும் போமே. 472

**பொருள் :—** தோலுரித்த வெள்ளைப்பூண்டு மூன்றுபலம் எடுத்து முறைப்படி நீர் சேர்த்து, விட்ட நீர் பாதியளவாகக் குறு கிய பின் இறுத்து வடிகட்ட அந்த நீரால் நன்கு அரைத்து வில்லை செய்து உலர்த்தி அகலில் வைத்துச் சீலை மண் செய்து உலர்த்திப் புடமிடவும். அப்படி மூன்று புடமிட்டு எடுத்த மருந்தைத் தக்க துணைமருந்துகளுடன் கொடுத்தால் பற்பல நோய்கள் தீரும்.

## குன்மத்துக்கு ஐவகை நெய்

பஞ்ச திரவிய மஞ்சதனி லொக்கக் கொண்டு பரிவுடனே
மிஞ்சுங் கள்ளிப் பாலுழக்கு வேண்டுந்து வடசீகை யிந்துப்பு
துஞ்சுங் கோட்ட மதிவிடையந் தோன்றுந் திரிகடு சவுக்காரம்
மஞ்சு சீரகம் கருஞ்சீரகம் மதினேர் திரிபலை யதுகொள்ளே. 473

**பொருள் :—** பஞ்சதிரவியம் என்று கூறப் பெற்ற ஆவின் ஐந்துவகைப்பால், தயிர், நெய், நீர், மலம் இவைகளைச் சமஅளவாக எடுத்து அதில் ஓர் உழக்குக் கள்ளிப் பாலை விட்டுக் கூட்டிக் கொள்க. கடுக்காய்ப் பிஞ்சு, இந்துப்பு, கோட்டம், அதிவிடயம், முக்கடுகு, சவுக்காரம், நற்சீரகம், கருஞ்சீரகம், முப்பழம், திரிபலை ஆகியவைகளுடன்;

கொள்ளும் வாரதி நாகதந்தி கொடுவே லியுமோரோர்கழஞ்சு
உள்ள ஆவினெய் யிருநாழி யொக்க வரைத்துக் கலக்கிவெந்து
உள்ளுக் கிதனைச் சிறுகாலை நக்கப் பீலிகைகவுசையுட
னுள்ள வுதர நோய்களெல்லா மோடிப் போகுங் கண்டீரே. 474

**பொருள் :—** நாகதந்தி வேர்ப்பட்டை, கொடிவேலிவேர்ப் பட்டை இவை வகைக்கு ஒரு கழஞ்சு சேர்த்து, பசுவின்நெய் இரண்டு நாழிசேர்த்து ஒன்றுபட நன்கு அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடித்த நெய்யைக் காலைமாலை இருவேளை அருந்தப் பிலீகை, கவுசை முதலான வயிற்றுப் பிணிகள் யாவும் தீரும்.

## குன்மத்துக்குப் பிரண்டை வடகம்

தப்புறு பிரண்டை சதுரக்கள்ளிச் சாரடை குப்பை மேனிச்சாறு
முப்புட னரிசி யிருநாழி யேல மிளகு சுக்குடனே
தப்பிட வரைத்தங் கிடுவதுவடகஞ் சதிரா ஆவி னெய்யுடனே
யுப்பற வறுத்துத் தின்பீராகில் ஓடி யொளிக்குங் குன்மமுமே.

**பொருள் :—**இருநாழி புதிய பச்சரிசியைப் பிரண்டைச் சாறு, சதுரக்கள்ளிச்சாறு, சாரடைச்சாறு, குப்பைமேனிச்சாறு இவைகளில் ஊறவைத்து நன்ருக அரைத்துத் தக்கபடி உப்புக் கூட்டி அதில் ஏலம், மிளகு, சுக்கு இவைகளைத் தூள்செய்து திட்டமாக் கூட்டி வேகவைத்து வடகம் செய்து வெய்யிலில் நன்ருகக் காயவைக்கவும். உள்ளீரமின்றிக் காயவேண்டுவது மிகமுக்கியம். இவ் வடகத்தை எண்ணெயில் வறுத்து உட் கொள்ளக் குன்மம் என்ற பிணி தீரும்.

கையாந் தகரை பாவட்டை கரிய நொச்சி தழுதாழை
பொய்யாப் பிரண்டைத் தண்டுடனே எருக்கு முருக்கி னிலைச்
[சாற்றில்
கொய்யாந் திரிகடுகு திரிபலையிட்டுக் கூட்டி வறுத்த கடுகு
[தின்னில்
பொய்ய தாகு மட்டகுன்மம் போமே போகுங் கண்டீரே. 476

**பொருள் :—** கரிசாலை, பாவட்டை, கருநொச்சி, தழுதாழை, பிரண்டை, எருக்கன்பழுப்பு, முருக்கிலை இவைகளின் சாறுகளைச் சமஅளவாக எடுத்துக் கலக்கி அதில் முக்கடுகு, முப்பழம் ஆகியவைகளை முறைப்படி ஊறவைத்துப் பின் மண்ணோட்டிலிட்டுச் சாறுகள்யாவும் சுண்டித் தீயாதவண்ணம் வறுத்துத் தூள் செய்து அளவுப்படி உட்கொள்ள எண்வகைக் குன்மங்களும் தீரும்.

பாகார் மொழியீர் தேங்காயின் பால்வெள் ளாட்டுப் பால்நாழி
வாகா யிதற்குத் திரிகடுகுதிரிபலை யிந்துப்புக் கூட்டிக் காய்ச்சிப்
பாகாய் வறுத்த பொடிதின்னப் பறிவெந்நீர் குன்மம்
[விட்டேகும்
ஏகாந் தத்தி லிருக்கலுமாம் என்று சொன்னர் முன்னேரே. 477

**பொருள் :—** தேங்காய்ப் பால், வெள்ளாட்டுப் பால் ஒவ்வொரு நாழி கூட்டி அதில் திரிகடுகு, முப்பழம், இந்துப்புச் சம அளவாக இட்டுக் காய்ச்சி நீர் சுண்டியபின் அடிபிடித்துத் தீயாமல் பக்குவமாக வறுத்துத் தூள் செய்து வைத்துக்கொண்டு அளவுப்படிக்கு வெந்நீரில் உண்டு வந்தால் குன்மம் தீர்ந்திடும்.

## எரிகுன்மத்துக்குத் திசதாளி கலப்புத்தூள்

இன்னஞ் சொல்வேன் திசதாளி என்னும் சூரண மிப்படித்தான்
தன்னுஞ் சீரக மிருகழஞ்சு சாருமிந் துப்புத் தான்கழஞ்சு
மன்னு மசமோதக முக்கஞ்சு மருவுந் திப்பிலி நாற்கழஞ்சு
முன்னங் கூட்டுமுப் பதுகழஞ்சும் முறுக வுலர்த்திப் பொடிசெய்து
தின்னீர் சீலை வடிசெய்து சிறுகா லையிலிள வெந்நீரி
லுண்ணீர் வளிம்பு மலங்கழிந்து உண்ட சோறு முணவாமே. 478

**பொருள் :—** நற்சீரகம் 2 கழஞ்சு, இந்துப்பு 1 கழஞ்சு, அசமதா ஓமம் 3 கழஞ்சு, அரிசித் திப்பிலி 4 கழஞ்சு நன்கு தூள் செய்து துணியில் வடிகட்டி இவைகளுடன் சர்க்கரை 30 கழஞ்சு

சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு அளவுப்படி வெந்நீருடன் உட்கொள்ள மலம் சிக்காமல் வெளியாவதன்றியும் உண்ட சோறு நன்கு செரிக்கப்பெற்று உணவாகும்.

மாறே தென்னு முலைமடவீர் மன்னுந் திப்பிலி யிந்துப்பு
ஓரீ தென்று உரியுடனே ஓங்குங் காயம் வெள்ளாட்டில்
ஆறே ஒரொன் றீருழக்கு ஆக வெரித்துக் கடுகாக்கி
நேரே தின்ன எரிகுன்மம் நித்தம் வெருகடி ஓர் பாதி
ஊரே தின்ன வாயுவிகாரம் ஓடுங் காணும் உண்மையிதே. 479

**பொருள் :—** அரிசித் திப்பிலி, இந்துப்பு, தோலுரித்த வெள்ளைப்பூண்டுத்திரி, பெருங்காயம் இவைகளைச் சம எடையாக எடுத்து வெள்ளாட்டுப்பால் இரண்டு உழக்கு வாங்கி அதில் மேற்படி தூள்களைக் கரைத்துச் சிறுதீயாக எரித்துக் கடுகு திரண்டு வரும் சமயம் தீயாமல் பக்குவமாய்க் கிளறி இறக்கிக் கொள்க. இதனை நாளும் மூவிரல் அளவு தேவைக்குத் தக்கபடி ஒன்று அல்லது இரண்டு வேளை உட்கொள்ள வாயுவின் மாறுபாடுகள் தீரும்.

## புங்கங் கற்பம்

புங்கங் கறந்தண் தோலைப் பொருந்த வெட்டிப் புறந்தோல் [போக்கி
தொங்கச் சற்றே நைய்ய விடித்துத் தோன்று துலாமொரு [பானையிட்டுத்
தங்கத் தூணி காடியுடன் தாவிக் காய்ந்தெட் டொன்றாக்கி
எங்கு மதனேர் நாழியிம் மரியு முப்பு மித்துடனே
பங்கு மதனேர் நாழியாகப் பால்கொள் வெள்ளாட்டு......
வெங்கு முள்ளி யரைப்பலமும் வேண்டுந் திப்பிலி மிளகுசுக்கு
பொங்கு மசமோதக மிந்துப் பொன்று சாரடை சவுக்காரம்
இங்கு நல்ல பெருங்காய மிவைதான் முக்கழஞ் சோரொன்று
மிஞ்ச வரைத்துக் கரைத்துக் கூட்ட வெந்திக் குன்றும் பதந் [தன்னில்
எஞ்சு மெருமைத்தா ழங்கொடியு மிதனேர் கள்ளிப் புறந்தோலும்
கொஞ்சும் பலாசம் புறந்தோலும் கொன்றை யதனிற் புறந் [தோலும்
அஞ்ச வெரித்திங் காறுஞ்சுட்டு ஆழாக் கோரொன் றிவை [சாம்பல்
மொஞ்சுஞ் சீரகங் கருஞ்சீரகம் முழக்கு ழக்காக வோரொன்று
துஞ்ச முடனே வெந்தக்கால் அடுக்கித் தூவுசீ ரகமிரண்டு
நிஞ்ச நீரிற் செலுத்திப்பின்னை நின்ற சாம்பலு மிட்டுக்கிண்டி

கண்ட நெல்லினிற் புதைத்துத் தீரப் பத்துநாள் சென்றக்கால்
கஞ்சக் கழஞ்சு புங்கந்தோலில் கலந்து நாழியெட் டொன்ருக்கி
தஞ்சக் கடுத வெருகடிபோல் சாரக் கலந்து தின்றுவிட
விஞ்ச மெள்ளப் போய்விடுமே பீலிகை கவுசை நீராமை
கொஞ்சு மகோதரங் குன்மஞ்சூலை தோன்ருர் பின்னைத்
[தோன்ருரே. 480

**பொருள் :—** ஒரு துலாம் (நூறுபலம்) புங்கன் வேர்ப்பட்டையைச் சிதைத்து ஒரு தூணி (நான்கு மரக்கால்) காடி நீரிலிட்டுக் காய்ச்சி எட்டுக் கொன்ருகச் சுண்டவைத்து இறுத்து வடிகட்டி அகில் கடலுப்பு ஒரு நாழியும், வெள்ளாட்டுப் பால் ஒரு நாழியும் கூட்டிக் கலக்கிக் கொள்க. அதில் தோலுரித்த பூண்டுத்திரி ½ பலம், திப்பிலி, மிளகு, சுக்கு, அசமதா ஓமம், இந்துப்பு தனித்தனி ஒரு பலமும், அதனுடன் சாரடைவேர், சவுக்காரம், பெருங்காயம் இவை ஒவ்வொன்றும் மும்மூன்று கழஞ்சும், மேற்படி நீர்மத்துடன் கூட்டிக் கரைத்துக் கொள்க. அதை அடுப்பில் ஏற்றிச் சாறு முதலானவை எல்லாம் சுண்டிய பின்;

எருமை நாக்கள்ளி, தாழைவிழுது, கொடுவேலிச் சமூலம், சதுரக்கள்ளி வேர்ப்பட்டை, பலாசன் வேர்ப்பட்டை, சரக்கொன்றை வேர்ப்பட்டை இவ் வாறு சரக்குகளையும் எரித்த வெண்ணிறந்த சாம்பல் வகைக்கு ஓர் ஆழாக்கு வீதம் மேற்படி மருந்துடன் சேர்த்துக் கிளறிக் கொள்க. நற்சீரகம், கருஞ்சீரகம் இவையிரண்டும் வகைக்கு ஒவ்வோர் உழக்காகக் கூட்டிக் கிளறிக் இறக்கி வைத்துக் கொள்க. இதைப் பத்து நாள் தானியப் புடத்தில் (நெல்லில் புதைத்து வைத்தல்) வைத்து எடுத்து வைத்துக் கொள்க. ஒரு கழஞ்சுப் புங்கம் பட்டையை விதிப்படி காய்ச்சி வற்றவைத்து எட்டுக்கு ஒன்ருக எடுத்து அந்தக் குடி நீரில் மேற்படி மருந்தை மூவிலரளவு வீதம் சாப்பிடவும். பிலீகை, கவுசை, நீராமை, மகோதரம், குன்மம், சூலை இவை நில்லா.

## குன்மத்துக்கு எண்ணெய்

காட்டுவான கழலிலை சிறுநீரில் கதிக்க யிடித்த சாறதுதான்
மீட்டுமூரி யெண்ணெ யிதில் மிகுத்த வுரியுந் தான்கூட்டி
நாட்டமாக அம்மியினல் நன்ரு யரைத்துக் குழம்பாக்கி
ஊட்டு முனைவும் பலவாயும் ஓடுங் குன்மமென் றுரையீரே. 481

**பொருள்:—** கழற்சி இலையை இடித்து நன்ருக மசிந்த பின் சிறுநீரைச் சிறுகச் சிறுக ஊற்றி இடித்துப் பிழிந்த சாறும் சிற்ருமணக்கெண்ணெயும் சம அளவாகக் கலந்து தோலுரித்த

பூண்டுத்திரியை அளவுப்படி கூட்டிக் காய்ச்சி வடிகட்டிக் கற்கம் திரண்டு வந்த பக்குவத்தில் மேற்படி மருந்தைக் குழிக்கல்லில் இட்டு மெழுகு போல அரைத்து வைத்துக் கொள்க. இம்மருந்தால் உளைச்சலும், பற்பல வாயு நோய்களும், எண்வகைக் குன்மங்களும் தீரும்,

## சத்தி குன்மத்துக்கு

ஏலமில வங்கம் பச்சிலை நாகப்பூ
மேலுமிடு முத்தஞ் சந்தனங்கற்பூரம் நாலிலந்தைப்
பருப்புமிவை நன்றாகப் பொடி செய்து தேனில்
குழைத்திடுக தீருமிது தானே. 482

**பொருள்:—** ஏலரிசி, கிராம்பு, பச்சிலை, சிறுநாகப்பூ, கோரைக்கிழங்கு, சந்தனக் கட்டை, பச்சைக் கற்பூரம், இலந்தைக் கொட்டைப் பருப்பு இவைகளைத் தனித்தனியே தூள் செய்து சம எடையாக எடுத்துக் கலந்து கொடுத்து வரச் சத்தி குன்மம் தீரும்.

**குறிப்பு :—** இப்பாடல் முழுமையாகக் கிடைக்கவில்லை.

## உடம்பு அழற்சிக்கு

பருத்திபோ லிருக்குந் துத்தி பண்பினால் பிடுங்கி வேரை
உரித்ததின் தோலை வாங்கி ஒன்றிய பசுவின் பாலில்
கருத்துகொண் டரைத்து நீயுங் கருதியே குடிப்பை யாகில்
எரிப்பது விட்டுப் பின்னும் ஏதமாம் உடம் பழற்சி. 483

**பொருள் :—** துத்திவேர்ப் பட்டையைப் பசுவின் பால் விட்டரைத்துக் கலக்கி நாளும் காலை வேளைகளில் உணவு உட் கொள்ளும் முன் உண்டு வந்தால் உடம்பில் கண்ட சூடும். எரிவும் தணியும்,

## மூத்திரக்கடுப்பு-உடம்பெரிப்பு-விக்கலுக்குச் சோமநாதக் கியாழம்

நல்ல கருப்பஞ் சார்நாழி நலநெல் லிக்காய்ச் சார்நாழி
வல்ல வகையே யிதுகூட்டி மற்று மிதனோ டிடுமருந்து
சொல்லு மேல மதிமதுரந் துய்ய முந்திரிகை வெள்ளரிவித்து
உள்ளபடியே காய்ந் திதனை ஓர்பா தியதா யானபின்பு
மெள்ள வடித்தரைத்துக் குடித்தக்கால் விக்கல் கடுப்பொ டுடம்
[பெரிப்புத்
துள்ளி விழுந்து போமிதன்பேர் சோம நாத னென்பதுவே. 484

**பொருள் :—** நற்கரும்பின் சாறும். நெல்லிக்காய்ச் சாறும் சம அளவாகச் சேர்த்து அதில் ஏலம், அதிமதுரம், திராட்சை, வெள்ளரிவித்து இவைகளைத் தூள் செய்து காய்ச்சிப் பாதியள வாகச் சுண்டியபின் குடிநீரை இறுத்து வடிகட்டிக் குடிக்கவும். திப்பியை அரைத்து மேற்படி குடிநீருடன் உண்டுவர விக்கல், கடுப்பு, உடல் எரிவு, ஆகியன தீரும். இதுவே சோமநாதக் கியாழம் என்பதாம்.

### தாதுவுக்கு

கொற்றான் கொழுஞ்சி நற்கொழுஞ்சி கூடவுலர்த்திப் பொடியாக்கிக்
கற்றோர் தின்னு மிலவங்கப் பொடியுந் தேனு முடன்கலந்து
பற்று திருநாள் சாரித்துப் பத்து நாளுந் தான்தின்ன
வற்று தாது வர்த்தனையா மற்றொன் றுரைக்க வேண்டாமே. 485

**பொருள் :—** கொத்தான், கொளுக்காய்வேளை, நல்வேளை இவைகளின் சமூலத்தை உலர்த்தித் தனித்தனித் தூள் செய்து சம எடையாகக் கலந்து இலவங்கத் தூளையும் மேற்படியாகவே கலந்து பத்து நாள் உட்கொண்டு வர ஆண்மைத் தன்மையும் விந்துவும் பெருகும்.

### இரு சூலை குன்மம்

இருஞ்சூலை யிருபுறமு மிசித்துக் கொள்ளு மிகுந்தசையப் போகாது
[பசியெடாது
பெருஞ்சூலை தாதுகெடும் வலம்விடாது பிலனுக நாபியையிசித்
[தொடித்தாப் போலுறக்க மாற்றும்
ஒருசூலை யொருபுறத்தி லிசித்துக் கொள்ளும் உற்றுவலி யதிகமாய்
[வேர்வையாகும்
முறிசூலை மூன்றதன்றே யெனவறிந்து முனிவன் மொழிந்த வா
[றிதுவா முலகுள் ளோர்க்கே. 486

**பொருள் :—** இருஞ்சூலை என்ற நோயில் இரு புறங்களிலும் இசிவு காணும். தாராளமாக உடலையும் உறுப்புகளையும் அசைத்திட முடியாது. பசி எடுக்காது.

பெருஞ்சூலையில் இந்திரியம் கெட்டுவிடும். மலம் வெளியாகாது கட்டிப் போய்விடும். மிக்க வலிமையோடு உந்தித் தானத்தைப் பற்றி இசித்துக் கொள்ளும். தூக்கம் வராது.

ஒரு சூலை என்ற நோயில் மேற்படி இசிவு ஒரு புடையிற் காணும். வலி அதிகமாய்த் தோன்றுவதால் உடலில் வியர்வை

மிகுதியாகப் பெருகும். உடலை முறித்தாலுண்டாகும் நோயைப் போலக் காணப்படும் சூலை நோய்கள் மூவகையாம் எனத்தெரிந்து கொள்வீராக.

### கல்லடைப்புக்கு

மாவிலிங்கை வாழ்நிலத்தில் வடக்குவேரும் வழிவிலகில்
[முட்பாயும் நெருஞ்சிவேரும்
பேயிலங்குஞ் சுடுகாட்டிற்பிரா முட்டிவேரும் பெரும்பீளை யிது
[நிற்கச் சிறுபீளைவேரும்
தாயிலங்கு மிகநல்லா ளெட்டொன்ருக்கித் தவருமலதுகையில்
[கருதி வாங்கி
வாயிலங்க வைத்தருந்த வெந்துவிழுங்கல்லு மடுத்தலுஞ் சாய்ந்
[திட்ட படுத்தகல்லும் விழுமே. 487

**பொருள் :—** மாவிலிங்கின் வடக்கு வேர், சிறு நெருஞ்சில் வேர், பிராய் மரத்தின் வேர், பெரும்பீளை, சிறுபீளை இவைகளின் வேரும் சமஎடையாகத் தூக்கிமுறைப்படி குடிநீர் செய்து உண்ணச் சிறுநீர்ப்பையிலும் சுரப்பியிலும் உண்டான கற்கள் கரைந்து விழுந்துவிடும்.

### உடம்பெரிப்புக்கு நெய்

சுற்ருழை செங்கொடுப்பை கழுநீர்வேர்க் கிழங்கு கருதுதா மரை
[வளையம் நன்ஞரி
வெற்ருர்கா ணதிமதுரம் பூசனிக்காய்க் குடலாந் தாழைமுலைச்
[சாறுமா வின்நெய்யும்
முத்தார முலைமங்கைப் பாலாழாக்கும் மூன்றுநாளைக்குள்ளே
[காணலாமே. 488

இவையெல்லாங் கூட்டிக் காய்ச்சி உள்ளுக்குக் கொள்ள மூன்று நாளையிலே உடம்பெரிப்புத் தீரும்.

**பொருள் :—** சோற்றுக் கற்ருழை, சிவப்புப் பொன்ஞங் காணி, செங்கழுநீர்க்கிழங்கு, தாமரை வளையம், நன்ஞரி வேர், அதிமதுரம், வெண்பூசனிக்காய் (குடலுட்பட), தாழை விழுது இவைகளின் சாறும் பசுவின் நெய்யும், மங்கையர் முலைப்பால் ஓர் ஆழாக்கும் கலந்து நெய்யாகக் காய்ச்சி வடிகட்டி உட்கொள்ள உடலெரிவு தீரும்.

## கல்லடைப்புக்கு

ஏலஞ் சந்தன மிருவேலி ஏற்ற கொடுப்பைவே ராவரையல்லி
ஆலம் விழுது மதிமதுரம் அரைத்து வெண்ணெ யதிற்குழைத்து
கால மேயிது கொள்ளவெனிற் கல்லுவிழுந்து கடுப்புநிற்கும்
பாலிற் கரைத்துப் பருகிலுமாம் பாகைசொன் னேம்படி
[செய்திடிலே. 489

**பொருள் :—** ஏலரிசி, சந்தனக் கட்டை, கொடுவேலி, வேலிப்பருத்தி, பொன்னுங்காணி இவைகளின் வேர்ப்பட்டை, ஆவாரைப்பட்டை, அல்லிக்கிழங்கு, ஆலின் விழுது, அதிமதுரம், இவைகளைச் சம எடையாக எடுத்து அரைத்து வெண்ணெயுடன் கலந்துட்கொள்ளச் சிறுநீர்க் கற்கள் கரைந்து விடும். கடுப்பும் தீரும். பாலிலுங் கரைத்துண்ணலாம்.

## நீர்க் கடுப்புக்குக் குடிநீர்

செப்பு நெருஞ்சி சிறுபூளை சிறியா நங்கை வாட்கொடுப்பை
நப்புத் தேவிநன் னீர்வே லாறு வேரும் வேர்க்கொம்பும்
பொடித்தங் கெட்டொன் றுய்க்காய்ந்து வருகுதெனக் கேட்டு
[என்பொடுருக் கியும்
நீர்க் கடுப்பு மிரண்டும் வினவி யேகிடுமே. 490

**பொருள் :—** செருப்பு நெஞ்சில், சிறுபீளை, சிறியாநங்கை, பொன்னுங்காணி, சீதேவி செங்கழுநீர், கருவேலன் வேர்ப்பட்டை, சுக்கு இவைகளை முறைப்படி நீரிலிட்டு எட்டொன்றுய்க் காய்ச்சிய குடிநீரை அருந்த என்புருக்கியும் நீர்க்கடுப்பும் நீங்கும்.

## நீக்கடுப்புக்குக் கற்கம்

மெய்நீர் கடுத்து மிகவெரிந்து மிண்டிச் சினத்துத் திரியாதே
வெய்நீர் வெள்ளரி வித்தரைத்து வெள்ளாட்டு மோரிற்குடித்திடுக
வெய்வன் கிழங்கதாவின் வெண்ணெய் தன்னிற் குழைத்து விழுங்
[கியிடில்
மெய்நீர்க் கடுப்பு விட்டோடி யேகு மிதனைக் கண்டீரே. 491

**பொருள் :—** நீர்க்கடுப்புடன் வேதனைப்பட்டு உழலாமல் இருக்க, வெள்ளரி விதையை வெந்நீரால் அரைத்து வெள்ளாட்டு மோரில் கலக்கிக் குடிக்கவும். தாமரைக் கிழங்கையரைத்து வெண்ணெய் சேர்த்து உட்கொள்ள மெய்க் கடுப்பு, நீர்க்கடுப்பு முதலியவை தீரும்.

## மூத்திரப் பாளைக்கு

வாராய் நீர்வள்ளிக் கிழங்கை வறள உலர்த்திப் பொடியாக்கிப்
பாராய் கோமூத்திரப் பாளைக்குப் பற்பந் தேனில் விழுங்கியிடும்
பிராய்த் தோல்செப்பு நெருஞ்சிவேர் நீர்வள் ளிக்கிழங் குடன் [சேர்த்து
யீராத் தகாவின் பாலிற்குடிக்க யேத மூத்திரப் பாளையதே. 492

**பொருள் :—** நீர்வள்ளிக்கிழங்கை உலர்த்தித் தூளாக்கித் தேனில் உண்டு வர மூத்திரப்பாளை தீரும். பிராய் வேர்ப்பட்டை, செப்பு நெருஞ்சில் வேர், நீர்வள்ளிக்கிழங்கு இவைகளின் தூளை ஒன்றுக்கலந்து பாலில் சாப்பிடவும் மூத்திரப்பாளை தீரும்.

## எலும்புருக்கி-நீர்க்கடுப்பு-கல்லடைப்புக்கு

துத்திநத்தைச் சூரிசுண்டில் சிறுகீரைவேர்
துய்யவா வரைவிதை வேற்பிசின்
முத்த சதகுப்பை யாவரை யல்லியும்
முறுவிளா வின்பிசி ஞென்றிரு கழஞ்சு
மெத்தெருமை மோர்பசுவின் மோர்தயிர்கலக்கி
மேல் குடிக்க விம் மருந்துத் தூளைத் தேனில்
விழுங்கிடுகில் எலும்புருக்கி யரிய
நீர்க் கடுப்பு நீரிறக்கம் போமே. 493

**பொருள் :—** துத்திவேர்ப்பட்டை, நத்தைச்சூரி வேர்ப்பட்டை, சுக்கு, சிறுகீரைவேர், ஆவாரைவிதை, வேலன்பிசின், சதகுப்பை, ஆவாரை வேர்ப்பட்டை, அல்லிக்கிழங்கு, விளாம் பிசின்; ஒவ்வொன்றும் இரண்டிரண்டு கழஞ்சளவாக எடுத்து, பசுவின்மோர், எருமைமோர், பசுவின் தயிர் இவைகளில் ஏதேனும் ஒன்றில் அரைத்துக் கலக்கியருந்தவும். அல்லது தேனில் கலந்து உட்கொள்ளவும். முன் துணைமருந்தில் உட்கொள்ளின் நீர்ப்பாளை தீரும். பின் துணை மருந்துடன் உண்ணில் எ்ன்புருக்கி நோய் தீரும்.

## கல்லடைப்புக்கு

கூறுங் குறுந்தொட்டி வேரிற் றோலைக்
குலவு மெலுமிச்சங் காயள வரைத்து
தூறு மெலுமிச்சங் காயின் சாற்றில்
அருந்தி யிதன் மேற் குருவைக் கஞ்சிகொள்ளு
மேறு மூன்று நாளருந்திடு கழிந்துபோங் கல்லிரு
கழல்நேர வேளையரைத் துழக்குப் பாலிற்
கூறியது குடிக்கிலன்று வலிப்பு நிற்குங்
கொல்லுங் கல்லு விழுமென் றுணர்த்திட்டேனே. 494

**பொருள் :—** சிற்ருமுட்டி வேர்ப்பட்டையை எலுமிச்சைப் பழச்சாறு விட்டரைத்து ஒருஎலுமிச்சங்காயளவு அச்சாற்றிலேயே கலக்கி உண்க. குறுவையரிசிக் கஞ்சி பத்தியம். இவ்வாறு மேற்படி மருந்தை மூன்று தினங்கள் சாப்பிட்டால் கல்கரைந்து விழும். கழற்சியளவு நல்வேளை வேர்ப்பட்டையை அரைத்து உழக்குப் பசுவின் பாலுடன் சாப்பிடக் கல்லடைப்பால் உண் டானவலி தீரும். கல்லும் கரைந்து விழும்.

பூசணிப் பருப்புந் தண்டும் பொருந்தப் பொடித்தா வின்பாலி
லேசக் குடிக்கி லெரிப்பு நிற்கும் இளநீர் மருந்திலை யித்துடனே
பேசிக் குடிக்கக் கல்லுவிழும் பெரிய கருவே லிலையரைத்துப்
பாசத் துடனே பசுவின்பால் பருகி லிறங்கா ரத்தம்போம். 495

**பொருள் :—** வெண்பூசனிப் பருப்பையும் அதன் கொடி யையும் தூளாக்கி சம அளவாக எடுத்து ஆவின் பாலில் கலக்கிக் குடிக்க நீர் எரிச்சல் நிற்கும். இளநீருடன் சேர்த் துண்ணக் கல்கரைந்து விழுந்திடும். கருவேலின் கொழுந்தை அரைத்துப் பாலுடன் சாப்பிட நீர்த்தாரையில் இறங்கும் இரத்தம் நின்றுபோம்.

சிறுபூளை வேருஞ்சிறிய தேற்ருன்வேரிற்
  ருேலுங்கூட்டி ஒன்ருய்ச் சேர்த்தரைத்து
உறுதிபட ஆவின்பாலிற் குடிப்பீராகி
  லுற்றகல்லு விழுமுடம்பிற் றிப்பிலியேலம்
அறுதிபடச் சர்க்கரையுங் கூட்டிக்கொண்டு
  அதுவமுரி யிற்குடிக்கக் கடுப்புந்தீரும்
மறுகத்தித் தோல்பொடித்துச் சிங்கன்பழம்
  மறுநீரிற் கொள்ளில் மாண்டுபோமே. 496

**பொருள் :—** சிறுபீளைவேரும், தேற்ருன்வேரும் ஆவின் பாலில் அரைத்துக் குடித்திட நீர்ப்பையில் உண்டான கல் கரைந்து விழுந்திடும். அரிசித்திப்பிலி, ஏலம் இவை இரண்டையும் தூள் செய்து ஒத்த எடையாக எடுத்து மொத்த எடைக்குச் சர்க்கரை கூட்டிச் சிறுநீரில் உட்கொள்ள நீர்த்தாரைக் கடுப்புத் தீரும்.

## சிறுநீர்ப் பாளைக்கு ஏலமுதலி நெய்

ஏல் முரிகொள் தேற்ருங்கொட்டை என்னு மிதுவு மப்படியே
கோலஞ் செயுஞ்சர்க் கரையொருபலங் கூட்டி யரைத்துக் குழம்
[பாக்கி

ஆலந் திகழநெய் நெல்லிப்பழத்தி லருந்துஞ் சாறு நாஞழி
போதக் கலந்து கரைத்திதனைப் பொருந்த வெரித்துக் கடுகாக்கி
நாலஞ் சென்னும் நாள்தின்ன நல்குந் தலைநா ளையிற்றிங்கச்
கோலஞ் சொல்லி யிந்நெய்யைக் குறித்துக் கழஞ்சு கடுகுடனே
கால முதிக்குங் காலத்தே கருதிக் குடித்துள் கருத்துள்ளே
மூல மூல மேகமிவை மூத்திரப் பாளை போய்விடுமே. 497

**பொருள் :—** ஏலரிசி ஓர்உரி, தேற்றுங்கொட்டை ஓர் உரி, சர்க்கரை ஒருபலம் இவற்றைத் தூளாக்கி நெல்லிப் பழத் தின் சாற்றல் அரைத்துக் குழம்பாக்கி வைத்துக் கொள்க. அதனுடன் ஆவின்நெய்யும் நெல்லிப் பழத்தின் சாறும் தனித் தனியே நான்கு நாழி வீதம் கலந்து பக்குவமாக எரித்துக் கடுகுதிரண்ட பதத்தில் இறக்கி ஆறவிட்டுக் கடுகையும் நெய்யையும் மெழுகு போல அரைத்து வைத்துக் கொள்க. இதை அளவு போல் 20நாள் உட்கொண்டு வர மூலப் பிணியும், மேகப் பிணியும், மூத்திரப்பாளையும் தீர்ந்திடும்.

### குருதி நோயின் இயல்பு

இரத்த மொருக்கால் தகையாமல் அளவே யொடுப்போல் விழுந் [திருக்குஞ்
சிரத்தில் கனப்பு முண்டாகும் திதமாய்ச் சித்தி விழுமிரத்தஞ்
சுரத்த யிரத்த ரோகமெனச் சொல்வார் நல்ல வல்லவரே. 498

**பொருள் :—** இரத்தப் பெருக்கு அடங்கி இயல்பான குறித்த நேரத்தில் நிற்காமல் ஓடிக்கொண்டே இருத்தல், தலைப் பாரம் காணல் என்னும் குணம் கண்டால் அதனைக் குருதி நோய் என்பர் அறிவியல் வல்லுநர். (திதம் = ஸ்திதம் = இடை யருமல் இருப்பது.)

நீர்முள்ளி யிலையும்வே ரும்பிண் ணுக்கும்
நேர்கூரு யச்சாற்றில் வறுத்த தூளுக்
கார்க்கா கிலுந்தீரு மிரத்த ரோக
மதுமூன்று நாள்தின்னுந் தேன்கு ழைத்து
நீர்தன்னி லிதன்வேரோ டொன்றுென்றுய்க் காய்ந்து
நீவுதேன் மேலிதின்விட் டவிசேஷங் கேட்டு
ஆக்காகி லுந்தீரா விரத்த ரோகம்
அதுகடந்து கடலில்விழுந் தகன்று போமே. 499

**பொருள் :—** நீர்முள்ளிக்கீரை, நீர்முள்ளிவேர், எள் பிண்ணுக்கு ஓர்நிறையாய் எடுத்து மேற்கூறிய செடியின் சாற்றல் அரைத்து வறுசட்டியிலிட்டுத் தீயாமல் வறுத்துத் தூளாக்கி

வைத்துக் கொள்க. குருதி நோய்க்கு அளவுபோலத் தேனில் குழைத்துக் கொடுக்கத் தீரும். அதன் பிறகு உடனே மேற்படி நீர்முள்ளிவேர்க் குடிநீரை யருந்த வேண்டும்.

### பித்தத்துக்குக் குமரித் தயிலம்

கதலிவெண் குமரி யாம்பல் கேதகி வட்டத் துத்தி
பதுமஞ்செங் கழுநீர் வள்ளி பஞ்சாயங் குமட்டி வேருஞ்
சதுவள்ளிப் பசளை தாளி தாப்பூலஞ் சீந்திப் பத்திரி
இதமுறு கொற்றான் நாரத் திலுமிச்சை குப்பை மேனி. 500

**பொருள்** :— வாழை, வெண்கற்றாழை, ஆம்பல், தாழை, வட்டத்துத்தி, தாமரை, செங்கழுநீர், நீர்வள்ளி, கும்மட்டி, பசலை, தாளிவெற்றிலை, சீந்தில்இலை, கொத்தான், நாரத்தை, எலுமிச்சை, குப்பைமேனி ஆகியவைகளும்,

மேனிகற் பூர வள்ளி விட்டுணு காந்தி வெள்ளில்
வானெயி னறுகு நாவல் குமிழ் மிட்டான் சீந்து
ஊனையின் பழுப்புக் கையான் உத்தம தாளி பூலா
தோனறுங் கரந்தை செப்பு நெருஞ்சியே தேள் கொடுக்காம். 501

**பொருள்** :— கற்பூரவல்லி, விட்டுணுகாந்தி, விளா, அறுகு நாவல், குமிழ், தண்ணீர்விட்டான்கிழங்கு, ஊனன்பழுப்பு, கரிசாலை, உத்தாமணி, பூலா, கரந்தை, செப்புநெருஞ்சில்' தேள் கொடுக்கிலை,

ஆக விப்பத் திரிச்சா றரையரைப் படியாய் மூலம்
பாகமாய்க் கியாழங் காடி பதக்குநீர் தன்னிற் போட்டே
ஏகமாய் வடித்துக் கோட்டம் இருவேலி விலாமிச் சம்வேர்
நாகணஞ் செம்ப கப்பூ நன்னாரி சிவந்த சாந்தம். 502

**பொருள்** :—ஆகிய இவ்விலைகளின் சாறு வகைக்கு ½படியாகவும், வேர்களைப் பக்குவமாகக் கியாழஞ் செய்யப் பதக்குக் (இரண்டு மரக்கால்) காடியில் போட்டுக் காய்ச்சி வற்றவைத்துச் சேர்த்துக் கொள்க. கோட்டம், சித்திரமூல வேர்ப்பட்டை, வேலிப்பருத்திவேர், விலாமிச்சுவேர், சண்பகப்பூ, நன்னாரி, செஞ்சந்தனம்,

சாந்தமா மதுர மேலஞ் சதகுப்பை திரிப லாதி
சேர்ந்தசீ ரகமு மீசஞ் செவ்வள்ளி யிலவங் கத்தோ
டந்தவை வகையொவ் வோர்காற் பலமெண்ணெய் யிளநீ ராம்பல்
நீந்திடா திவைநன் னன்கு படிவிட்டு வடிப்பீ ரெண்ணெய். 503

பொருள் :— வெண்சந்தனம், அதிமதுரம், ஏலம், சதகுப்பை, திரிபலை (கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்), சீரகம், பச்சைக் கற்பூரம், செவ்வல்லி, இலவங்கம், பேரீச்சங் காய். இவை ஒவ்வொன்றும் கால் பலம் அளவு எடுத்துத் தூளாக்கி வைத்துக் கொள்க. எண்ணெய், இளநீர், ஆம்பல் கிழங்குச்சாறு வகைக்கு நாலுபடி விட்டுக் கலக்கிக் காய்ச்சிப் பதமாக்கி வடிகட்டிக் கொள்ளவும்.

### பித்தகாசத்துக்கு எண்ணெய்

ஏலமில வங்கம் பச்சிலை நாகப்பூ
யிலாமிச் சிருவேலி செண்பக மொக்கு
கோல வடவிகச் சோலங் கற்பூரங்
குலவுதா மரைவளைய மதின் கிழங்கு
சாலமலை யிருவேலி கடுகுரோணி கருதுந்
தாழையின் விழுதும் ஞாழல் தாதும்
சால நன்னரி செவ்வள்ளிக் கொடி
சதிரான செங்கழுநீர்க் கிழங்கு கொள்ளே. 504

பொருள் :— ஏலம், இலவங்கம், பச்சிலை, சிறுநாகப்பூ, விலாமிச்சுவேர், கொடுவேலி, வேலிப்பருத்தி, சண்பகமொட்டு, காட்டுக் கிச்சிலிக்கிழங்கு, கற்பூரம், தாமரைவளையம், தாமரைக் கிழங்கு, கடுகுரோகணி, கருந்தாழைவிழுது, புலிநகக்கொன்றை, செவ்வள்ளிக் கொடி, செங்கழுநீர்க்கிழங்கு,

கொள்ளுமகி லதிமதுரந் தகரங்
கோட்டமொடு புழுகுசட்ட மரைத்துக்கொண்டு
வள்ளியமு தம்நெல்லி யிலையிற்சாறும்
வருந்தியுங் கற்றாழை வேரின்சாறு
மூள்ளவெண்ணெ யதிற்கலந்து வெந்துவடித்
துறுதிபடக் காசளவு முச்சிவைக்க
கள்ளமில்லை கண்குளிரும் காசம்பித்தம்
கடலில்விழுந் தோடிவிடுங் கண்டுகொள்ளே. 505

பொருள் :— கொள், அகில், அதிமதுரம், தகரம், கோட்டம், புனுகுசட்டம், நீர்வள்ளிக்கிழங்குச்சாறு, நெல்லி இலைச்சாறு, கற்றாழைவேர்ச்சாறு ஆகியவற்றை வெண்ணெய் கலந்து காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க. இதைத் தலையில் தேய்த்து நீராடிவரக் கண்குளிர்ச்சி யடையும். கண்களில் தோன்றும் காசம் என்னும் நோயும், பித்தநோய்களும் தீரும்,

## பித்த எண்ணெய்

பித்த எண்ணெய்க் கொத்தகியாழம் பேசக்கேளீர் பெரியோரே
பத்தன் சீந்திபதி ஞறுபலம் பழுத்த நெல்லி யதிற்பாதி
மெத்தக் கழுநீ ரதின்கிழங்கும் தாமரை வளைய மதிற்பாதி
எத்துந் தண்ணீர் முக்குறுணி எட்டொன் றெண்ணெய் முன்னுழி
ஏற்க வேக பித்தம்போம் ஏகுங் கண்ணோய் முழுவதுமே. 506

**பொருள் :—** பித்தஎண்ணெய் காய்ச்ச ஏற்ற கியாழங்கள் கூறுவேன் கேளுங்கள். சீந்தில் தண்டு 16 பலம், நெல்லிப்பழச் சதை 8 பலம், செங்கழுநீர்க் கிழங்கு, தாமரை வளையம் இவை வகைக்கு 4 பலம். இவைகளை மூன்று குறுணி நீரிலிட்டு எட்டுக் கொன்ருய்க் குறுக்கி வடிகட்டி அதில் எண்ணெய் மூன்று நாழி சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் வடிகட்டித் தலை முழுகிவரக் கண்ணோய் முழுவதும் தீரும்.

## கண்ணுக்குக் குமரித்தைலம்

முற்ருத முலைமடவாய் கற்ருழைமணியை முதிதே யிடித்ததனைப் [பிசைந்து
வற்ருது சாறுநாழி யதுவேரில் வருஞ்சாறு நாழியது தகரமேலம்
மற்ருர்கண் ணதிமதுரம் நன்னுரி யதுஒரொன் றிருகழஞ்சு [விலாமிச்சமரைத்து
வற்ருத பாலிருநாழி எண்ணெய்நாழிவேக வரும்பித்தம் போகும் [வருங் கெட்டகண்ணே. 507

**பொருள் :—** கற்ருழைச்சோற்றில் வரும்சாறும், கற்ருழை வேரை இடித்துப் பிழிந்து எடுத்த சாறும் வகைக்கு ஒருநாழி வீதம் எடுத்து, அதிமதுரம் நன்னுரி வகைக்கு இரு கழஞ்சும் விலாமிச்சுவேரும் மேற்படி அளவே கூட்டிப் பால் இரண்டு நாழியும் நல்லெண்ணெய் ஒரு நாழியும் கலந்து காய்ச்சிய தைலத்தால் பித்தம் தீரும்.

## கண்ணுக்குக் குறுந்தொட்டி எண்ணெய்

கெட்டகண்ணும் வொளியாகுங் குறுந்தொட்டி வேர்சீந்தி நெல்லிக் [காய்க் கியாழமிட்டு
தட்டியரை நன்னுரி யிலாமிச்சம்வேருந் தகரமுட னிருவேலி [சாதிக்காயும்
மெட்டுமிலா மிச்சஞ்செவ் வள்ளியேல மிவையரைத் தெண் [ணெய்வெந்து தேய்ப்பீராகில்
கெட்டகண்ணு மொளியாகும் பித்தம்போகும் கேட்கிலது [கோபமில்லை யறுதிகாணே. 508

**பொருள் :—** கெட்ட கண்ணுக்கு ஒளி தரத்தக்க சிற்ரு முட்டி வேர்ப்பட்டை, சீந்தில் தண்டு, நெல்லி முள்ளி இவைகளைக் கியாழமிட்டு எடுத்துக்கொண்டு நன்னரிவேர், விலாமிச்சு வேர் (வெள்ளை), தகரம், சித்திர மூலம், உத்தாமணி, சாதிக்காய், விலா மிச்சை (கருப்பு), செவ்வள்ளி, ஏலம் இவைகளைக் கற்கமாக அரைத்து அளவாக எண்ணெய் எடுத்து அதில் மேற்படி கியாழமும் கற்கமுங் கூட்டிக் காய்ச்சித் தைலமாக வடித்துத் தேய்த்துத் தலைமுழுகி வர, பித்தம் குறையும். மேலும், முன் கோபம் கொள்ளும் இயல்பும் ஒழியும்.

## பித்தத்துக்கு எண்ணெய்

முற்றின வெள்வேல் முதிர்ந்ததோ லெண்பலத்தில்
செற்றிய நீர்குறுணி சேரவிட் டெட்டொன்ருய்
வற்றியிருந்த கியாழத்தில் மஞ்சிட்டி சத்தி
கச்சோலம் சாதிக்காய் கராம்பு கோட்டம்
மற்றுசதா வரிகண்டில் வெண்ணெய் யதிமதுரம்
சத்தினி கற்பூரந்தக் கோல மசனம்
மற்றின பசட்ட மடவிகச் சோலம்
நற்றுமகில் சந்தன மிருவேலி நன்னரி
மற்றுமர மஞ்சளொடு மாறுமுள செண்பகம்
கற்றுங் கல்லாரதி முற்றும் வஞ்சி
இத்தனையும் நாழிக் கிடைகழஞ் சோரொன்று
மெத்தெனவே யாவின்பா லதுகுறுணியில்
பற்றியிருந்து பதத்தில் வடித்தெண்ணெய்
செற்றியநோய் நூற்றெட்டுப் பித்தமதுதானும்
சற்றுமடை யாதென்று பலகாலும்
அத்தனருளிச் செய்த வடைவிது தானே. 509

**பொருள் :—** வெள்வேலன் பட்டையை எட்டுப் பலம் எடுத்துச் சிதைத்து 1 குறுணி நீரிலிட்டு எட்டுக் கொன்ருய்க் காய்ச்சி வடித்த கியாழம்; மஞ்சிட்டி, இந்துப்பு, கிச்சிலிக்கிழங்கு, கோட்டம், சாதிக்காய், கிராம்பு, சதாவரி, கண்டில் வெண்ணெய் அதிமதுரம், பச்சைக்கற்பூரம், தக்கோலம், வேங்கைவைரம், காட்டுப் பூலாங்கிழங்கு, அகில், சந்தனம், உத்தாமணி, சித்திர மூலம், நன்னரி, மரமஞ்சள், சண்பகம் வகைக்கு ஒரு கழஞ்சாக ஒரு குறுணிப் பசுவின் பாலிலிட்டு வேக வைத்துச் சுண்டி வந்த பாலை இறுத்து வடிகட்டி அதனுடன் எண்ணெய் கூட்டிக் காய்ச்சி வடித்த எண்ணெய் தேய்த்தாடிவர நூற்றெட்டு வகைப் பித்தப் பிணிகளும் தீர்ந்திடும்.

## பித்தத்துக்கு நெல்லிக்காயெண்ணெய்

கச்சைவென்ற முலைமடவாய் காலத்தாலே யெழுந்திருந்து
பச்சைநெல்லிக் காய்பதக்கு பருத்தசீந்தி லிவையிரண்டும்
அச்சமாக விடித்ததன்மே லளந்துதூணி நீரைவிட்டு
மிச்சமறவே நாலொன்ருய் வெந்துகியாழம் வடித்திடுமே. 510

**பொருள்:-** பச்சை நெல்லிக்காய் ஒரு பதக்கு (2 மரக்கால்), தறித்து நசுக்கிய சீந்தில் தண்டும் அதே அளவு; இரண்டையும் ஒரு கலத்திலிட்டு ஒரு தூணி நீர்ஊற்றிக் கால் பாகமாக வற்றவைத்துக் கியாழம் வடித்துக்கொள்க.

வடித்த கியாழ மதில்மருந்து வருந்துங் கோட்டஞ்செண் [பகமொக்கு
இடிக்கு மேல மிலவங்க மிவையோ ரொன்றுக் கிருபதுகழஞ்சு
அடுக்குமெண்ணெய் நாழியதில் வெந்த திறக்கித் தேய்ப்பீரேல்
அடுத்து வாத பித்தமது ஆகா கண்ணு மாய்விடுமே. 511

**பொருள் :—** கோட்டம், சண்பகமொக்கு, ஏலம், இலவங்கம் ஒவ்வொன்றும் 20 கழஞ்சு ஆக ஒரு நாழி எள்ளெண்ணெயில் கூட்டிக் கலக்கிக் காய்ச்சித் தேய்த்து ஆடினல் வாதம், பித்தம் இரண்டும் உடம்பில் இருத்தல் ஆகா. கண்ணும் நல்ல கண்ணுய் விடும்.

## பித்தத்துக்கு எண்ணெய்

செப்பக் கேண்மின் னெல்லீருஞ் சேரும் பித்த பிணியிதுக்கண்
ஒக்குஞ் சீந்தில் குறுந்தொட்டி உண்ணு நெல்லி யோரொன்று
தக்க திடித்துப் பன்னிருபலந் தாவுந் தண்ணீ ரிருதூணி
ஒக்க வார்த்தெட் டொன்ருக்கி ஏற்கு மெண்ணெய் யிருநாழி. 512

**பொருள் :—** சீந்தில்தண்டு, சிற்றுமுட்டிவேர்ப்பட்டை, நெல்லிக்காய், தனித்தனி பன்னிரண்டு பலம் இரு தூணி (8மரக்கால்) நீரை ஊற்றி விதிப்படி எட்டுக்கொன்ருய்க் கியாழம் செய்து அதனுடன் இரண்டு நாழி எண்ணெய் கூட்டுக.

ஏற்கு மெண்ணெ யிருநாழி ஏலம் பச்சிலை யிலவங்கங்
காற்குங் கச்சோல மட்டி கருது மேதை மஞ்சிட்டி
யாற்குஞ் சாதி சதகுப்பை யரியி லவம்பிசின் நாகப்பூஞ்
சேற்குஞ் சந்தனஞ் செவ்வள்ளி செங்கழு நீரின் கிழங்காமே,

**பொருள்:—** (அதில்) ஏலம், பச்சிலை, இலவங்கம், கிச்சிலிக்கிழங்கு, அதிமதுரம், மஞ்சள் கறிசாலை, மஞ்சிட்டி, சாதிக்காய், சதகுப்பை, பச்சரிசி, இலவம்பிசின், சிறுநாகப்பூ, சந்தனம், செவ்வள்ளிக்கிழங்கு, செங்கழுநீர்க்கிழங்கு;

செங்கழு நீரின் கிழங்காகுஞ் சேரு மிலாமிச் சிருவேலி
யங்குநன் னாரி சதாவரி யதிம துரத்தோ டறுகழஞ்சு
அங்கெண்ணெய் வெந்துவடித்த தேனிற் காது பித்த மிடமுற்று
எங்கினி நாமும் போவமென்று ஏகு மிடமுங் காணேமே, 514

**பொருள் :—** விலாமிச்சு, சித்திரமூலம், உத்தாமணி, சங்கன்குப்பி, நன்னாரி, தண்ணீர்விட்டான்கிழங்கு, அதிமதுரம், ஒவ்வொன்றும் ஆறுகழஞ்சு விதிப்படி கற்கமாகக் கூட்டி எண்ணெய் வார்த்துக் காய்ச்சி வடித்த தைலத்தின் முன் பித்தம் நில்லாது.

## கண்ணோவு, தலைநோவு, செவிநோவு தீர எண்ணெய்

கண்ணோவு தலைநோவு செவிநோவு தீரக்
கையாந் தகரையொடு கற்றாழை நெல்லி
பண்ணார்ந்த மொழிமடவாய் தனித்தனியே நாழி
பால்நாழி யின்னாலும் பரிசுடனே கூட்டி
மண்ணாரி நன்னாரி யிருவேலி யதிமதுரம்
வளம்பெறவே சொன்ன மருந்தொன்றாய்க் கூட்டி
எண்ணாதே யிடையிவையோ ரொன்றிரு பலமுங்கொண்
டெள்ளெண்ணெய் நாழியுரி வெந்ததனை வார்க்க
நண்ணுக நோக்கியிந்த நோயான தெல்லாம்
நாலுவிதந் தீருமென்று நானு முரைத்தேனே. 515

**பொருள் :—** கண்ணோவு, தலைநோவு, செவிநோவு இவைதீர மருந்து கேட்டுக் கொள்வாயாக. கரிசாலை, சோற்றுக் கற்றாழை, பச்சை நெல்லிக்காய் இவற்றின் சாறு வகைக்கு ஒரு நாழி, பசும் பால் ஒரு நாழி. இவை நான்கையும் கூட்டி அதில் கோரைக்கிழங்கு, நன்னாரி, உத்தாமணி, சித்திர மூலம், அதிமதுரம் இவைகளை வகைக்கு ஒரு பலம் வீதம் கற்கமாய்க் கூட்டி எண்ணெய் ஒருநாழியும் ஓர் உரியும் கூட்டி யதிலிட்டுக் காய்ச்சி வடித்த தைலத்தால் நாலுவித நோய் களும் தீர்ந்திடும்.

## பித்தங் கண்ணோவுக் கெண்ணெய்

ஏல மிலவங்கந் தேவ தார மிலாமிச் சிருவேலி செண்பக மொட்டுச்
சீலமுடன் சாதிக்காய் செங்கழுநீர் கோட்டம் சீரிய சந்தனந்
[தேவிச் சாற்றில ரைத்துப்
பாலதனை நாழிக்கு நாழி கலந்து பரிசான குறுந்கொட்டி
[யதிமதுரங் கலக்கிக்
காலையிலே வெந்த எண்ணெய் தேய்ப்பீராகில் கண் குளிருங்
[காயபித்தங் கடலிற் போமே. 516

**பொருள் —** ஏலம், இலவங்கம், தேவதாருக்கட்டை, விலாமிச்சுவேர், சித்திரமூலம், உத்தாமணி, சண்பகமொட்டு, சாதிக்காய், செங்கழுநீர், கோட்டம், சந்தனம் இவைகளைச் சீதேவிச் செங்கழுநீர்ச் சாற்றிலரைத்துப் பாலும் எள்ளெண்ணெயும் வகைக்கு ஒரு நாழி வீதம் கூட்டி மேலும் அதிமதுரம், சிற்றுமுட்டி இரண்டையும் கூட்டிக் காய்ச்சி வடித்த எண்ணெய் தேய்த்துக் கொண்டால் கண் குளிர்ச்சியடையும். உடலிலுள்ள பித்தக் குற்றம் விட்டுப்போம்.

## குமரித் தைலம்

முற்றுத முலைமங்காய் நீகேளாயோ முதுபித்த மாய்க்கிடந் துலைந்
[திடாதே
கற்றுழை வேர்ச்சாறு நாழியுங் கருதுநெல்லிக் காய்ச்சாறு நாழியு
மற்றூர்கண்ணதிமதுரங் கழஞ்சுமரைத் தெண்ணெ யிருநாழி
[வெந்திறக்கிச்
சற்றேதேய்ப் பீராகில் பித்தம்போகும் சத்தியமே கண்தெளியு
[மறுதிக்குச் சொன்னேம். 517

**பொருள் :—** சோற்றுக் கற்றுழைவேர்ச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு வகைக்கு ஒரு நாழியும், எண்ணெய் இரு நாழியும் கூட்டி அதில் அதிமதுரம் ஒரு கழஞ்சு அரைத்துக் கலக்கிக் காய்ச்சித் தலைக்குத்தேய்த்து ஆடிவரக் கண்பார்வை தெளிவாகும்; பித்தம் குறைந்துவிடும்.

## காது வலிக்கு

இடுவீர் துளசி கையான் சுண்டி பாக விலைச்சாற்றிற்
கெடுவே தட்டியிதைப் பிழிந்தங் கிடுவீர் காதிற் புழுவிடுமே. 518

**பொருள் :—** துளசிச்சாறு, கரிசாலைச்சாறு, நீர்சுண்டிஇலைச் சாறு, பாகலிலைச்சாறு இவற்றை ஒத்த அளவாக எடுத்துச் சற்று வெதுப்பிக் காதில் விடக் காதில் உள்ள புழுக்கள் வெளியாகும்.

## இதுவும் எண்ணெய்

திப்பிலி முத்தக் காசு சிறந்தநல் வசம்பு சுக்கு
ஒப்பிலாப் பெரிய காய மோங்குமிந் துப்பொ டுள்ளி
யிப்படி யெருக்கஞ் சாற்றி லரைத்துநல் லெண்ணெய் வெந்து
ஒப்புடன் செவியில் வார்க்க வோங்குநற் றுயரம் போமே. 519

**பொருள் :—** திப்பிலி, கோரைக்கிழங்கு, வசம்பு, சுக்கு, பெருங்காயம், இந்துப்பு, பூண்டு, இவற்றை ஒத்த அளவாய் எடுத்து எருக்கஞ் சாற்றுலாட்டி அளவு போல நல்லெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வடிகட்டிக் காதுகளில் விடக் காதுநோய்கள் தீரும்.

## இதுவும் எண்ணெய்

இஞ்சிச்சா றுழக்குடனே கள்ளிச்சா றுழக்கு இனியதே னுழாக்குக் [குளவிந்தன மஞ்சள்
கஞ்சிக்காங் கொள்பருப்புங் கொடுப்பை வேருங் கருஞ்சீ ரகமும் [நண்டு நிணமுங் கூட்டி
மிஞ்சிப்போ காமலுழக் கெண்ணெய் காய்ச்சி மிகவடித்துக் [காதிலெண்ணெய் விட்டெருக்கின்
பஞ்சிட்டே யடைக்கச் செவிசலமு மாறும் பாழான செவிநோய்கள் [பறந்துபோமே. 520

**பொருள் :—** இஞ்சிச்சாறு, கள்ளிச்சாறு, தேன் வகைக்கு ஓர் ஆழாக்கு; கப்புமஞ்சள், மரமஞ்சள், கொள், பொட்டுநீக்கிய பருப்பு, நண்டுச்சதை இவற்றை ஓர் உழக்கு எண்ணெயிலிட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்துக் காதில் விட்டு எருக்கன் பஞ்சு வைத்தடைத்துவரக் காதில் ஏற்பட்ட எல்லா நோய்களும் தீரும்,

## கண்ணோய்க்கு எண்ணெய்

முள்ளிவேர் முத்தெருக்கம் செவியொடுபார முதுவசம்பு சுக்குடனே [முத்தக்காசு
நள்ளிநிண மும்பெருங்காயந் திப்பிலி காராமணி நாவலிலைச் [சாற்றினி லரைத்துருட்டிக்
கள்ளியிலைச் சாறதனிற் கலக்கிஎண்ணெய் காய்ச்சியொரு துளி [விடக் கண்ணோய் போகும்
உள்ளதுநாஞ் சொல்லிடிலூர் வாதந்திமிர் வாதம் போயிடுகை [திண்ணமா மென்று கொள்ளே. 521

**பொருள் :—** செம்முள்ளிவேர், முத்தெருக்கஞ் செவிவேர், வசம்பு, சுக்கு, கோரைக்கிழங்கு, நண்டுக் கொழுப்பு, பெருங்காயம், திப்பிலி, காராமணி, நாவலிலைச் சாற்றிலரைத்து உருட்டி, கள்ளி இலைச்சாற்றில் கலக்கி எண்ணெய் கூட்டிக் காய்ச்சித் துளிக்கணக்கில் கண்ணிலிடக் கண்ணோய் தீரும். ஊர்வாதமும் திமிர் வாதமும் தீரும்.

## இதுவும் எண்ணெய்

முள்ளியும் முருங்கை வேரும் முறுக்குட னிலையினிற்சா
றுள்ளியும் வசம்பு நண்டு நிணமுடன் கலந்த எண்ணெய்
துள்ளியும் படுக்க வேண்டாம் செவிதனை நோயில் கொட்ட
வெள்ளிமெய் யான கண்ணாய் விட்டிடுஞ் செவிநோய் நூறே 522

**பொருள் :—** செம்முள்ளிவேர், முருங்கைவேர்ப்பட்டை, முண்முறுக்கிலைச்சாறு, தோலுரித்த வெள்ளைப் பூண்டு, வசம்பு, நண்டுச்சதை இவற்றைக் கூட்டி எண்ணெயிலிட்டுக் கலக்கிக் காய்ச்சி வடித்துக் காதுகளுக்கிட நூறுவகைக் காதுநோய்களும் தீரும்.

## இதுவும் எண்ணெய்

கோவின் பால்கோ மூத்திரம்நாழியும்
குலவுமத்த மிலைச்சாறு மிருநாழியுந்
தாவுமிளகு உரிஉழக்குத் தகரை விதையும்
நாழிஎண்ணெயுங் கலந்து வெந்த எண்ணெய்
காதில் புகைகாட்டக் காதுநோய் போமே. 523

**பொருள் :—** பசுவின்சிறுநீர், பசுவின் பால் தனித்தனி ஒரு நாழி; ஊமத்தைஇலைச்சாறு இரண்டுநாழி; மிளகு, பூண்டுத் திரி, தகரைவிதை இவை வகைக்கு ஓர் உழக்கு இவற்றை எண் ணெயிலிட்டுக் காய்ச்சிக் கொள்க. இந்த எண்ணெய்ப் புகை காதில் பட்டவுடன் காது நோய் தீரும்.

## தலைநோய் கண்வலிக்குக் குறுந்தொட்டி எண்ணெய்

தோற்றச் சொல்வேன் சிரவத்தி துலங்கு மெண்ணெய் வழியிது [கேள்
நூற்றுப் பலமுங்கொள் குறுந்தொட்டி நுகருஞ் சீந்தில் அதிற்பாதி
ஆற்ற நெல்லிக் காய்தான்றி யடுக்கும் பலம்நீ ரெண்ணாழி
ஏற்றிக் காய்ச்சி யெட்டொன்றுக்கி யிசைந்தே யரைக்கு மருந் [தினிக்கேள், 524

**பொருள் :—** சிற்றுமுட்டி வேர்ப்பட்டை 100 பலம், சீந்தில் தண்டு 50 பலம், நெல்லிமுள்ளி, தான்றிக்காய்த்தோல் வகைக்கு 12½ பலம் வீதம் சேர்த்து இடித்து எட்டு நாழி நீரிலிட்டு எட்டுக் கொன்ருகக் காய்ச்சி வடித்து, பின்பு கற்கமாய் அரைக்கும் மருந்தினைக் கேட்பாயாக!

தேற்ருன் கொட்டை யதிமதுரஞ் செண்பகஞ்
சாதிக்காய் சாதிப் பத்திரியு
மாற்று மிலாமிச் சிருவேலி மகிழ்
சந்தனங் கிராம்பு தேவதாரம்
நாற்று மோரொன்று நாற் கழஞ்சு
நவிலு மெண்ணெய் நாழிவிட்டுக் காயும் பால்குறுணி
ஆற்றி வெந்து பதத்தில் வடித்து
அடுக்குஞ் சிரவத்தி யாம்படியே
தேற்றும் படலந் திமிர் காசந் தோற்றும் பரம ரோகமுடன்
போற்றுங் கோணு முகவாதம் பொருந்தக் கண்ணில்வலி சூலை
காற்றுப் போலே போய்விடுமே கழுத்து மேலுள் ளளவுகளே.

**பொருள் :—** தேற்ருன்கொட்டை, அதிமதுரம், சண்பக மொக்கு, சாதிக்காய், சாதிப்பத்திரி, விலாமிச்சுவேர், சித்திரமூலம், உத்தாமணி, மகிழமலர், சந்தனம், இலவங்கம், தேவதாருக் கட்டை. ஒவ்வொன்றும் ஒவ்வொரு கழஞ்சு வீதம் எடுத்து அரைத்துக் கலக்கி எண்ணெயில் ஊற்றிக் காய்ச்சி வடித்து வைத்துக்கொள்க. இது சிரவத்திக்கு மிகவும் உவந்த தைலமாம். கண்ணில் தோன்றும் படலம், காசம், திமிர், முகவாதம், கண் வலி, கண்சூலை ஆகிய கழுத்துக்கு மேலே காணக்கூடிய நோய்க ளெல்லாம் தீர்ந்திடும்.

## புழுவெட்டுக்கு எண்ணெய்

கொன்றைக்காய் திரிலிபேய்க் கொம்மட்டி
குறுகவே யோரொன் றுழக்குச் சாறு
மொன்ற வரைத்த திரிதார மிருகழஞ்சு
முழக்கெண் ணெயுடன் கூட்டிவெந் திறக்கி
யன்றிப்போம் புழுக்கடிக்கித் தேய்ப்பீராகில்
அதுதிரும்பி மயிர்முளைக்கு மறுதி சொன்னேம்
என்றக்கால் செவிநோயு மிதுக்குத்தீரு
மிருசிரங்கு மேகியிட் டொழிந்து போமே. 526

பொருள் :— சரக்கொன்றைக்காய் (அதன் புளியைக் கொள்ளவேண்டும்), பேய்க்குமட்டி ஒவ்வோருழக்குச்சாறு; தேவதாரு, சரளதேவதாரு, அரிதாரம் ஆகிய மூன்றையும் இரண்டிரண்டு கழஞ்சாக எடுத்துத் தூள்செய்து மேற்படி சாற்ருல் அரைத்து எண்ணெயில் கூட்டிக் கலக்கித் தலைக்குத் தேய்த்தால் தலையில் உண்டாகிய புழுக்கடி (புழுவெட்டு) என்னும் நோய் தீரும். செவிநோயும், இருவகைச் சிரங்குந் தீரும்.

## எலும்புச் சுரத்துக்குப் பூசனிநெய்

ஆவின் நெய்யு மிளநீரும் அடுக்கும் பூசனிக் காய்வேரும்
மேவும் பசுவின் பாலிவைதான் வெவ்வே ருென்று நாழிகொண்டு
தாவுங் கோட்ட மதிமதுரஞ் சந்தம் பச்சிலை கச்சோலம்
பாவு மேல மிலவங்கம் பன்னுங் கழுநீர் தாமரையே. 527

பொருள் :— பசுவின்நெய், இளநீர், வெண்பூசனிவேர், பசும்பால். இவை ஒவ்வொரு நாழிவீதம் கலக்கிக் கொண்டு அதில் கோட்டம், அதிமதுரம், பச்சிலை, கிச்சிலிக்கிழங்கு, ஏலம், இலவங்கம், செங்கழுநீர்க்கிழங்கு, தாமரைக்கிழங்கு;

தாமரை வளையமுரோ கணியும்விளாவரிசி தருசுக் கிலாமிச்
[சிருவேலி
யாமது கூவுளை யிற்பிசினும் ஆம்ப லரிசி புனமுசட்டை
காஞ்சரை யொன்ரு மிவையரைத்து வெந்தது கேட்டென்பு
[சுரமோடுளவெதுப்பும்
போமதெ னப்புறப்பட்டுப் போய்விடும் பூசனி நெய்யிது
[நக்கிடிலே. 528

பொருள் :— தாமரைவளையம், கடுக்காய்த்தோல், விளாவரிசி, சுக்கு, விலாமிச்சுவேர்; வேலிப்பருத்தி, கொடுவேலி, வில்வப்பிசின், ஆம்பலரிசி, புனமுசுட்டை, எட்டிவித்து. இவற்றை அரைத்துமுறைப்படி காய்ச்சி வடித்துச் சாப்பிட (அத்தி) என்பு வெப்புத்தீரும். உளத்தின் வேக்காடும் தீரும். இதுவே பூசனி நெய் யென்றறிக.

## என்புச் சுரத்துக்கு மோரெண்ணெய்

முன்னோர் சொன்ன முறைவழியே முழுமோ ரெண்ணெய்
[செய்வீரே
விண்ணுள் மருந்திங் கதிமதுர மேலங் கோட்ட மிலவங்கம்
மன்னு வெட்டி சதாவரி யரத்தை பச்சிலை கச்சோலம்
பொன்னு மெழுகும் பெருங்குரும்பை பூசுஞ்சந்தன மின்னமுங்
[கேள். 529

**பொருள் :—** அதிமதுரம், ஏலம், கோட்டம், இலவங்கம், வெட்டிவேர், தண்ணீர்விட்டான், சிற்றரத்தை, பச்சிலை, கிச்சிலிக் கிழங்கு, மஞ்சள் மெழுகு (தேன்மெழுகு), பெருங்குரும்பை, சந்தனம். மேலும் சரக்குக் கூறுவேன் கேட்டுக் கொள்க.

இன்னஞ் சுக்கு மரமஞ்ச ளிலாமிச் சிந்துப் பிருவேலி
தின்னு கடுகு ரோகணியுந் தேவ தாரங் கடல்நுரையும்
நன்னு வொன்று கழஞ்செண்ணெய் நாழி யுரியு மோர்நாழி
யின்னுள் வெந்து மெய்யில்பூச இளைக்குஞ் சுரமு முள்வெதுப்பும் 531

**பொருள் :—** சுக்கு, மரமஞ்சள், விலாமிச்சு, இந்துப்பு, சித்திரமூலம், உத்தாமணி, கடுகுரோகனி, தேவதாரு, கடல்நுரை ஒவ்வொன்று ஒவ்வொருகழஞ்சு; எண்ணெய் ஒருநாழியும் ஓர் உரியும் ($1\frac{1}{2}$நாழி); பசுவின் மோர் ஒருநாழியும் கூட்டிக் காய்ச்சி உடலில் தேய்த்துவரச் சுரம் உள்வெதுப்பு ஆகியவை தீரும்.

### அரக்கெண்ணெய்

தகட்டரக் கிரண்டு பலத்துக்குத் தண்ணீர் நாழி..............
புகட்டியே தொளாந் திரமாய்ப் பொட்டணங் கட்டிக் காய்ச்சி
திகட்டுநல் லெண்ணெய் நாழி வரும்படி தயிர்நீர் தேக்கி
நிகர்த்திடுஞ் சிற்ரு முட்டி யிலாமிச்சை யிலைநன் னுரி. 531

**பொருள் :—** இரண்டுபலம் அரக்கைத் துணியில் முடிந்து ஒருநாழி தண்ணீரில் அமிழ்ந்திருக்குமாறு தொங்கவிட்டு நீர் அரைப் பங்கு வற்றும்வரை காய்ச்சி அந்நீரை எடுத்துக் கொண்டு, அதனுடன், எண்ணெய் ஒருநாழி, தயிர்நீர் ஒருநாழி கலந்து கலக்கி; மேலும், சிற்ருமுட்டி, விலாமிச்சுவேர், பச்சிலை நன்னரி;

நன்னுரி யமுத வல்லி நல்லதோர் முத்தக் காசு
பொன்னுரு மிருவேலித் தூர் அமுக்குரா புகழ்பேரா முட்டி
இன்னுரு மிவைக ளொவ்வோ ரிரண்டரைப் பலங்கள் வைத்துப்
பன்னீர்நா ழிநீர் வைத்துப் பகுந்திரு படியாய்க் காய்ச்சே. 532

**பொருள் :—** சீந்தில்தண்டு, கோரைக்கிழங்கு, சித்திர மூலவேர்ப்பட்டை, உத்தாமணி வேர்ப்பட்டை, அமுக்குராக் கிழங்கு, பேராமுட்டிவேர்ப்பட்டை ஒவ்வொன்றும் $2\frac{1}{2}$ பலமாய் எடுத்து 12 நாழிநீரில் போட்டுக்காய்ச்சி இருநாழிக் கியாழமிட்டு வடிகட்டி,

காய்ச்சியே யதனில் வார்த்துக் கடைச்சரக் கேல மிந்து
வாய்த்தசெங் கழுநீர் கோட்டம் மஞ்சிட்டி தேவ தாரம்
பூச்சிசே ரந்த மஞ்சள் பொன்மெழு கிரேணு மற்றுங்
கூச்சமில் லமுக்கு ராவே ருடன்சத குப்பையாகும். 533

**பொருள் :—** மேற்கண்ட நீர்மங்களுடன் கலக்கிக்கொள்க. அதில் கடைச்சரக்குகளாகிய ஏலம், இந்துப்பு, செங்கழுநீர்க் கிழங்கு, கோட்டம், மஞ்சிட்டிக்கிழங்கு, தேவதாருக்கட்டை, மஞ்சள், மஞ்சள்மெழுகு, காட்டுமிளகு, அமுக்குராவேர், சதகுப்பை, (இவற்றுடன்)

ஆனதோர் வசம்பி லாமிச் சதிகமா மதுர மல்லி
தானமா யிவைக ளெல்லாந் தனித்தனி முக்க ழஞ்சிட்
டூனமில் லரைத்துக் காய்ச்சி உடம்பெங்கும் பூசு வீரேல்
தானெழுஞ் சுரமதுபோ யென்பும் கடுகவே மாறும் கண்டாய். 534

**பொருள் :—** வசம்பு, விலாமிச்சுவேர், அதிமதுரம், கொத்துமல்லிவிதை இவை வகைக்கு முக்கழஞ்சளவாகத்தூளாக்கி அரைத்துக் கற்கமாக மேற்படி தைலக் கூட்டுடன் கலக்கிக் காய்ச்சி உடலில் தேய்த்து வந்தால் சுரந்தீரும். என்புவெப்புத் தீரும்.

### என்புச் சுரத்துக்கு இஞ்சிநெய்

நறுநெய் நாழி பால்நாழி நல்லிஞ் சிச்சா றிருநாழி
யுறமுஞ் செவ்வியஞ் சிறுமூலம் உற்ற திரிகடு கொடுவேலி
வெறுமிந் துப்புக் கழஞ்சரைகொண் டரைத்துநெய் வெந்தது [கேட்டு
உறுமத் தியிலிரு மல்சுரமு மோடி யொளிக்குங் கண்டீரே. 535

**பொருள் :—** நறுமணமுள்ள ஆவின் நெய், பசும் பால் வகைக்கு ஒருநாழியும் இஞ்சிச்சாறு இருநாழியும் ஒன்றுகக் கலந்து அதில் செவ்வியம் (மிளகுக்கொடி), கண்டந்திப்பிலி, சுக்கு, திப்பிலி, மிளகு, சித்திரமூலவேர்ப்பட்டை, இந்துப்பு இவை வகைக்குக் கழஞ்சளவாக எடுத்து இடித்து அரைத்து மேற்படி நெய்க் கலவையில் கலக்கிக் காய்ச்சி உள்ளுக்கு உண்டுவர என்புருக்கிச்சுரம், இருமல் சுரம் ஆகிய நோய்கள் குணமாம்,

## என்புச்சுரக் குடிநீர்

ஆடா தோடை பற்படக மரிய சீந்தில் நன்னரி
பாடா சிறுகாஞ் சொரிமுத்தம் பரிக்குஞ் சந்தன முபுசட்டை
காடாச் சுக்கு வேப்பீர்க்கு கருதி யோரொன் றிருகழஞ்சு
வீடா நீர்விட் டெட்டொன்ருகில் யேகு மென்புச் சுரமிதுவே. 536

**பொருள் :—** ஆடாதோடைஇலை, பற்பாடகம், சீந்தில் தண்டு, நன்னரிவேர், சிறுகாஞ்சோரிவேர், கோரைக்கிழங்கு, சந்தனம், முபுசட்டை (சுவடியில் கண்ட சொல்—விளங்கவில்லை), சுக்கு, வேப்பன் ஈர்க்கு, ஒவ்வொன்று இருகழஞ்சு எடுத்து அளவுப்படி நீர்விட்டு எட்டுக் கொன்ருய் வற்றவைத்துக் குடிக்கச் செய்ய என்புச்சுரம் தீரும்.

## தொந்த சுரத்துக்கு எண்ணெய்

கொட்டமொடு சந்தன நன்னரிவேர் கொத்துச் செறிதகரந்தற் [கோலமேலமிலவங்கம்
மட்டாய்மதுரஞ் சாரணமிந் துப்புக்குரும்பை யழகான யிருவேலி [யொடுமஞ்ச
ளிட்டசத குப்பை யமுக்கிருப் பலமாக வேயிவை யரைத்து
மட்டவிழு மெள்ளெண் ணெயிருநாழி யுங்கூட வெந்துவடியாய் [வாதமொடுசீதசுர
முஷ்டணமி வையுமாறி வற்றவரு முள்வெக்கை மாறுமிது காணே.

**பொருள் :—** கோட்டம், சந்தனக்கட்டை, நன்னரிவேர், தகரம், தக்கோலம், ஏலம், இலவங்கம், அதிமதுரம், சாரடை, இந்துப்பு, சிறுகுரும்பை, சித்திரமூலம், உத்தாமணி, மஞ்சள், சதகுப்பை, அமுக்குரா, இவற்றைப்பலமாக அரைத்து இரண்டு நாழி எள் நெய்யில் கலக்கிக் கரைத்துக் காய்ச்சி வடித்து வாதசுரத்துக்கும், சீதசுரத்துக்கும், உட்டிணசுரத்துக்கும், மாறிவரும் சுரத்துக்கும், உடலிளைக்குஞ் சுரத்துக்கும், உள் சுரத்துக்கும் உபயோகிக்கக் குணமாம்.

## எலிமருந்து

எலிமருந் தீரைக்கும் போது இஞ்சியை நறுக்கிச் சாற்ருல்
தெளியவைத் திறுத்துப் போட்டுத் திரண்டது கூறு மாக
குளிகையுங் குன்றி போலே கொண்டிடு மஞ்ச வேண்டாம்
இடுமது பாலில் தானே மீண்டிடும் பாலில் தானே. 538

பொருள்:— எலிப்பாடாணத்தை இஞ்சிச் சாற்ருலரைத்துக் குன்றியளவு மாத்திரை செய்து பாலில் கொடுக்கவும் (சுரம்தீரும்).

கருவாழை மொட்டு மனலின் கடும்பு கழலின் கொழுந்து முடனே
திருவான வீழி புளியாரை நாவல் திரிசூலி சூத மிதுவும்
அறுசாமம் வெந்து யிருசா றுழக்கு ஒருகாசு நூலி னளவும்
வருமாரை யோடு முடனே குடிக்கில் வயராம்பல் நெய்தல்
[கெடுமே. 539

பொருள் :— கருவாழைப்பூவின் மொட்டு, சித்திரமூலம், கழற்சிக் கொழுந்திலை, வீழிஇலை, புளியாரை, நாவல்கொழுந்து, திரிசூலி, மாங்கொட்டைப்பருப்பு இவற்றை விதிப்படி குடிநீர் செய்து ஆரைக்கீரைக் கற்கத்துடன் குடித்து வந்தால் வயிற்றுத் துன்பத்தால் வருந்த வேண்டியதில்லை, வயிற்றுநோய் விலகும் என்பது குறிப்பு.

## என்புச் சுரத்துக்குச் சந்தனுதி நெய்

சந்தனத்தைப் பன்னிரண்டு பலமிடித்துத் தாவுநீர் தூணிவிட்டு
[நாலொன்ருக்கிச்
சொந்தமுடன் நன்னுரி குறுந்தொட்டிவேர் தேளட்டி மதுரமுடன்
[கண்டுசர்க்கரை
வந்தவிவை யோரொன்றைங் கழஞ்சு கொண்டு வரவெரித்
[தாவின்நெய் நாலுருக்கி
வெந்தநெய் யதுசந்த னுதியென்னும் வெதுப்பத்தி சுரம்வலிவு
[விட்டுப்போமே. 540

பொருள் :— சந்தனத்தூள் 12 பலம், ஆற்றுநீர் ஒரு தூணி-நாலிலொன்ருக வற்றக் காய்ச்சிக் குடிநீராக்கி அதனுடன் நன்னுரி, குறுந்தொட்டி வேர், அதிமதுரம், சர்க்கரை தனித்தனி ஐந்து கழஞ்சு வீதம் அரைத்துக் கூட்டி, நெய் மேற்படி குடிநீருக்கு நாலில் ஒரு பங்கு கூட்டிக்காய்ச்சிவடித்துக் கொள்க. இது சந்தனுதி நெய் எனப்படும். என்புச்சுரம், வெதுப்புநோய் தீரும்.

## சன்னிக்கு எண்ணெய்

பேய்ப்புடோல் துளசி நொச்சி பொருந்துரா ஆடா தோடை
வாய்ப்புட னீயோர் நாழி வகைபடச் சாறு கொண்டு
வேப்பெணெய் நாழி கூட்டி வெந்திவை பாதி யானல்
காய்க்கடு நெல்லி தான்றி கருஞ்சீ ரகமும் மஞ்சட்டி 541

பொருள் :— பேய்ப்புடல், துளசி, நொச்சி, பெருந்துராக் கீரை, ஆடாதோடை, இவற்றின் சாறு வகைக்கு ஒரு நாழி, வேப்பெண்ணெய் ஒருநாழி, கூட்டிக்காய்ச்சுக. அது பாதி அளவாகச் சுண்டியபின் அதில் கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக் காய், கருஞ்சீரகம், மஞ்சிட்டி;

மஞ்சட்டி கடுகு ரோகணி வசம்பதி மதுர மாஞ்சில்
செந்தொட்டி நிம்மஞ் சங்கு சிலவேம்புங் கண்டங் காரி
நஞ்சிட்ட அரவின் கண்டம் நாங்கூழோ டரத்தை யேல
மிஞ்சிட்டி பெருங்கு ரும்பை விடையமே தேவ தாரம் 542

பொருள் :— கடுகுரோகணி, வசம்பு, அதிமதுரம், சடா மாஞ்சில், செந்தொட்டி, எலுமிச்சை, இசங்கு, வேம்பு, கண்டங் கத்தரி, நல்ல பாம்புத்துண்டுகள், மண்ணுண்ணிப்பாம்பு, சிற்றரத்தை, ஏலம், மஞ்சிட்டி, பெருங்குரும்பை, அதிவிடயம், தேவதாரம்;

தாரஞ்செங் கழுநீர் கோட்டம் சதகுப்பை கடுகு சேர்ந்த
சீரகம் பெருங்கு ரும்பை திரிகடு லவங்கோ ரோசனை
நேரொன்று முக்கழஞ்சு கூட்டி நேகவே யரைத்துக் காய்ச்சி
வேறொரு கலசத் தில்நீ, வடித்திட நிற்குஞ் சன்னி. 543

பொருள் :— சீரகம், பெருங்குரும்பை, சுக்கு, மிளகு, திப்பிலி, இலவங்கம், கோரோசனை, தனித்தனி மும்மூன்று கழஞ்சு கூட்டிக் காய்ச்சி வடித்திட சன்னி நோய் தீரும்.

## சன்னிக்கு நசியம்

நாறுஞ் சந்தன நன்னாரி நற்பே ரீச்சம் பழமிளகு
கூறுஞ் சுக்குமிவ் வைந்துங் கூட்டி யோரொன் றிருகழஞ்சு
சாருமுலைப் பால்கருப்பஞ் சாறதனில் சன்னி யுண்டை தனை
[யரைத்து
வேறும் நசியம் விட்டக்கா லெழுந்தோ டிப்போஞ் சன்னியதே.

பொருள் :— சந்தனக்கட்டை, நன்னாரிவேர், பேரீச்சம் பழம், மிளகு, சுக்கு இவ்வைந்தும் ஒரொன்று இரண்டு கழஞ்சு வீதம் எடுத்து முலைப்பாலாலும், கரும்பு சாற்றுலும் அரைத்து மாத்திரை உருட்டி வைத்துக்கொள்க. இதை முலைப்பாலில் உரைத்து மூக்கில் உறிஞ்சவைக்க சன்னிக் குற்றம் நீங்கும்.

அட்டி மருத் திலுப்பைப்பூ வரும்பே ரீச்சம் பழமஞ்சும்
சட்ட திரிபலை நன்னாரி சாருமுந்திரி கைப்பழமும்
எட்டு முலைப்பா லுண்டைசெய்து அப்பால் கொண்டு நசியத்தை
விட்டுப் பாரீர் சன்னியுடன் வெதுப்பும் போகி விடுமன்றே. 545

**பொருள்:—** அதிமதுரம், மருதம்பட்டை, இலுப்பைப்பூ, பேரீச்சம்பழம் வகைக்கு ஐந்து பங்கு; கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், நன்னாரி, திராட்சைப்பழம் இவை வகைக்கு எட்டுப் பங்கு. இவற்றை முறைப்படி தூளாக்கி முலைப்பால் விட்டரைத்து மாத்திரையாகச் செய்துலர்த்திவைத்துக் கொள்ளவும். முலைப் பாலில் இழைத்து மூக்கில் உறிஞ்சவைக்க சன்னிக்குற்றம் தீரும்.

## ஈளை இருமல் கடகரைக்கு

தேற்றுநொச்சி பிராய்முட்டி கீழ்க்காய் நெல்லி
தேட்கடை ஆடாதோடை கழலா வாரை
ஏற்றுசங்கும் பிரமி பொடுதலை கையான்
இவைசார டைதூது ளையோரொன் றுழக்குச்சாறு
வெற்றிலைவிழா லதிவிடையந் திரிகடுகு காயம்
வெப்பாலை சிறுதேக்கு வசம்பு மஞ்சள்
காற்றேல மங்கோலம் பெருங் குரும்பை
கடுகுரோ கணிகொடு வேரி கொள்ளு முத்தம். 546

**பொருள் :—** தேற்றான், நொச்சி, பிராய், சிற்றுமுட்டி, கீழ்க்காய் நெல்லி, தேள் கொடுக்கு, ஆடாதோடை, கழற்சி, ஆவாரை, இசங்கு, பிரமி, பொடுதலை, கரிசாலை, சாரடை, தூதுளை இவற்றின் இலைச்சாறு வகைக்கு ஓர் உழக்கு வீதம் பிழிந்து வடிகட்டிக் கலந்து அதில், வெற்றிலை, விழாலரிசி, அதி விடயம், திரிகடுகு, பெருங்காயம், வெட்பாலையரிசி, கண்டு பாரங்கி, வசம்பு, மஞ்சள், ஏலரிசி, அழிஞ்சில் விதை, பெருங் குரும்பை, கடுகுரோகிணி, சித்திரமூலம், கொள்ளு, கோரைக் கிழங்கு;

கொள்ளுமுத் தக்காசுகடு நெல்லிதான்றி குப்பையோ ரொன்றுகழஞ் [செண்ணெய் நாழி
யுள்ளபடி கலக்கியெண்ணெய் வெந்திறக்கி யுள்நக்கக் கடகரையீ [ளையிருமல்
மெள்ளவது தன்னிலே கூடிவினவி விட்டோடிப் போமதுவே காரிய [மென்று புறப்பட்டோடுமே. 547

**பொருள் :—** கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சதகுப்பை ஒவ்வொன்றும் 3 கழஞ்சளவாக எடுத்து எண்ணெய் ஒரு நாழியில் போட்டுக் கலக்கிக் காய்ச்சிய எண்ணெயை அளவு போல உட்கொள்ள ஈளை, இருமல் இவை ஒன்றையொன்று கேட்டுக்கொண்டு தங்கவழியின்றி ஓடிவிடும்.

## ஈளையிருமலுக்குத் தூள்

ஆகுங் குப்பை மேனிச்சா றிருநாழி யில்நாழி மிளகு
கூறும் வெயிலில்மூன்றுநாள் திரிபலை திரிகடுகுடனே
சீரிய வழுதலை வேர்கூறுங் கோட்டங் கற்கடக சிங்கிகூட
[வொன்றைங் கழஞ்சு
வறுத்தேறுபொடி தேன்விரவி விழுங்கிடி லீளையிருமல்
[யேகிடுமே. 548

**பொருள் :—** குப்பைமேனிச்சாறு இருநாழி எடுத்து ஒரு நாழி மிளகை அதில் மூன்று நாள் ஊறவைத்து உலர்த்தித் (சாறு முற்றும் சுண்டவேண்டியது முக்கியம்) தூள் செய்து கொள்க. அதனுடன் திரிபலை, திரிகடுகு. வழுதலைவேர், கோட்டம், கற்கடக சிங்கி இவை வகைக்கு ஐந்து கழஞ்சு வறுத்துத் தூளாக்கி கலந்து வைத்துக் கொண்டு தேனில் குழைத்து அளவு போல உண்டுவர ஈளை, இருமல் தீரும்.

## சேத்தும இருமல் கடகரைக்கு எண்ணெய்

ஆகு மைய்ய யிருமலுக்கு ஆடா தோடை கையான்குன்
கூறுங் கழலாவா ரைசங்கு தூது வளைகுப்பை புடோலிலையு
மாற வோரொன்று நாழிச்சா றெண்ணெய் யிருநாழியுஞ் சேர்த்துக்
கூறு மருந்து கொடுவேலி குலவு மிலவங் கந்தேறே. 549

**பொருள்:—** சேத்தும தோடத்தால் உண்டான இருமலுக்கு: ஆடாதோடை, கரிசாலை, கழற்சி, ஆவாரை, இசங்கு, தூதுவேளை, குப்பைமேனி, பேய்ப்புடல் ஆகிய இவற்றின் இலைச்சாறு வகைக்கு ஒரு நாழி எண்ணெய் இரண்டு நாழி ஒன்ருகக் கூட்டி, சொல்லப் பட்ட (கற்க) மருந்துகள்:- சித்திர மூலம், இலவங்கம்;

தேறுந் திரிகடு வெப்பாலை சேருங் காய மதிவிடையஞ்
சீரகமோதகம் ரோகணியுஞ் சீராம் விழாலோ ரோர் கழஞ்சு
சேரவரைத்து எள்ளெண்ணெய் சீராய் வெந்திறக்கிடவே
பாறிடு மிருமல்கடகரையும் பறக்கும் வெளியுந் தெரியாதே. 550

**பொருள் :—** திரிகடுகு, வெட்பாலையரிசி, பெருங்காயம், அதிவிடயம், சீரகம், அசமோதகம், கடுகுரோகணி, விழாலரிசி

இவை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் எடுத்து ஒன்றுபட அரைத்து மேற்படி நீர்மத்தில் கரைத்துக் காய்ச்சி வடிகட்டி அளவுப்படி உண்டுவர இருமல் தீரும்.

## இருமலுக்கு நெய்

ஆடா தோடை புடலுடனே அறவே முற்றின வேப்பந்தோல்
கோடா திருந்து வைத்திதனில் கொள்ளே சாறு முந்நாழி
பாடிப் பசுவின் நெய்நாழி பரிவில் வெந்து நக்கவெனில்
ஓடி யொளிக்கு மிருமல்வகை யொழிந்த வகையுங் காணேமே.

**பொருள் :—** ஆடாதோடை, பேய்ப்புடல், முதிர்ந்த வேம் பின்பட்டை (நூருண்டு வளர்ந்த—பொந்து விழாத நல்லவேப்ப மரத்தின் பட்டையை எடுத்துக் கொள்க.) இவைகளின் சாறு தனித்தனி மூன்று நாழி கூட்டி, பசுவின் நெய் ஒரு நாழி சேர்த்துக் காய்ச்சி வடிகட்டி அளவு போல உண்ண இருமல் தீரும்.

## இருமலுக்குத் தூள்

கற்கடக சிங்கி சிறுதேக்கு காக்குந் திரிகடு திரிபலையுந்
தக்க சிறிய வழுதலைவேர் தாற்குங்கொட்ட மரமஞ்சள்
தேக்கொடு சிங்கிச் சூரணத்தைத் தேனில் குழைத்து விழுங்கி [விடின்
வற்கரைகாச யிரும லெல்லாம் மாற்றநல்ல மருந்தி துவே. 552

**பொருள் :—** கற்கடகசிங்கி, கண்டுபாரங்கி, திரிகடுகு, திரிபலை, சிறுவழுதுணைவேர், கோட்டம், மரமஞ்சள், ஆகிய இவற்றை முறைப்படி தூள் செய்து வைத்துக் கொள்க. இந்த சிங்கிதேக்குத் தூளைத் தேனில் குழைத்துண்ணக் காசம் இருமல் தீரும்.

## பித்த இருமலுக்குத் தூள்

மாற்றுமிளை யிருமலுக்கு மருந்து சிறிய வழுதிலை வேர்
ஏற்றுஞ் சங்கு தூதுளைவேர் கருங்குப் பைகை யான்ருன்
வார்த்த திரிகடு குடன்வறுத்த பொடியைத் தேனில் விழுங்கிவிட
ஏற்றப் போமே ஈளையிருமல் ஏகும் வழியுந் தெரியாதே. 553

**பொருள் :—** ஈளைஇருமலுக்கு: சிறுவழுதுணை, இசங்கு, தூதுவேளைவேர், குப்பைமேனி, கரிசாலை, வறுத்த திரிகடுகு இவற்றைச்சேர்த்துத் தூளாக்கி வைத்துக் கொண்டு தேனில் உண்டுவர ஈளை இருமல் தீரும்.

நெய்யார் சர்க்கரை தேன்நா டுதிரிபலை
குய்யார் நாலுங் குழைத்துண் ணவல்லீரே
வெய்யாதேக வெதுப்பும கன்றிடுஞ்
செய்யார் செய்யும் செயலறிந் தில்லையே. 554

**பொருள் :—** நெய், சர்க்கரை, தேன், திரிபலையின் தூள் இவை நான்கையும் கலந்துண்ண வல்லவரானால் உடலில் வெதுப்புமகன்றிடும்.

வண்ணமருக் காரை மண்ணில் பிராமுட்டி
திண்ணியவிச் சாறிரண்டுஞ் சேர்த்த பொடிதேன் குழைத்
துண்ணி னிரும லொழியு மிவைமூன்றின்
நண்ணினமெய் சொன்னே னயந்து. 555

**பொருள் :—** மருக்காரை, பிராய் (குட்டிப் பலா), சிற்று முட்டி இவற்றுள் பின்னிரண்டின் சாற்றில் முன்கூறிய மருந்தின் தூளைக் கூட்டித் தேனில் குழைத்துண்ண விழி மும்முறை இமைப் பதன் முன், மிகவும் முக்கி இருமக்கூடிய இருமல் நீங்கும்.

எனத்தில் முள்பன்றி முள்சுட்டுத் திப்பிலி
தெனத்திற் கூட்டிச் சிறுகாலை தின்பீரா
லூனற்றுப் பாயு மிருமலொ ழிந்திடு
மானுற்ற கையாள் மருந்திது வேசாண். 556

**பொருள் :—** முள்ளம்பன்றி முள்ளைச் சுட்டுச் சாம்பலாக்கி அதன் எடைக்கு நிகராகத் திப்பிலித்தூளைச் சேர்த்துக் கலந்ததைத் தேனில் குழைத்துக் காலை மாலை உண்டுவர இருமல் தீரும், இதுவே கைகண்டமருந்து.

மெய்வழி நீரு மிளகு மருந்திடில்
ஐவழி தீர வரிய மருந்திது
மைவழி நீல மயில னையாளே
யிவ்வழி செய்க விளைக்கு மிருமலே. 557

**பொருள் :—** அமுரியில் பலதடவை ஊறவைத்து உலர்த்திய மிளகுத்தூளைத் தேனில் உட்கொள்வது ஐயப்பிணி தீர நல்ல மருந்தாகும். இதனால் இருமல் நோய் இளைத்துவிடும்.

வெள்ளைக் கடுக்காய் விதைபோக்கி மொரியும் பொடியுளக்
[கித்துடனே
தெள்ளித் தெளிந்த தேனைவிட்டு சிறுகாலைகுழைத் துண்பீரேல்
உள்ளத் திருந்த ஏங்கலொடு உரத்த பித்த மிவையெல்லாம்
மெள்ளப் போய்விடு மப்பொழுதே விரையச் செய்நீ விலங்காதே,

**பொருள் :—** வெண்கடுக்காய்த் தோலை நுண்பொடியாக்கித் தேனில் குழைத்துக் காலை வேளையில் உண்டுவர மனத்தில்கண்ட ஏக்கமும், வலிய பித்தநோயும் நீங்கிவிடும்.

இலைக்கள்ளி வேருடனே குளவிந்தமஞ்சள் இவையொக்கப் பொடி
[செய்தங் கெடுத்துவைத்து
தலைப்பட்ட வெள்ளாட்டின் நெய்குழைத்துத் தவறுமல் விழுங்கிடுமி
[னீளைதீருங்
குலைப்புற்ற யிருமல்நீ ராமைபோகுங் குணமாகு முலைப்பாலில்
[குடிப்பீராகில்
மலைப்பதில்லை மாலைக்கண் ணன்றேபோகும் மாதருக்குப் பிள்ளை
[யுண்டாம் பால்சோறுண்ணில். 559

**பொருள் :—** இலைக்கள்ளி வேர்ப்பட்டை, பூசும் மஞ்சள், ஆகிய இரண்டும் ஒத்த எடையாகத் தூள் கலந்து வெள்ளாட்டின் நெய்யில் குழைத்துண்ண ஈளைநோய் தீரும். நாய் குரைத்ததுபோன்றுண்டாம் இருமலும், நீராமைநோயும் தீரும். இதை முலைப்பாலில் குழைத்து உண்டுவந்தால் மாலைக் கண் தீரும். மலட்டுநோயுள்ளவர்கள் இம் மருந்தை முலைப்பாலில் உண்டு பால்சோற்றுப்பத்தியம் காத்துவந்தால் கருப்பம் உண்டாகப் பெறுவர்.

## கடகரைக்கு எண்ணெய்

ஏற்றஞ் சொல்லுஞ் சத்தெண்ணெய் இதுநான் சொல்லும்
[வகைகேளாய்
தோற்றும் நொச்சி பிராய்முட்டி துலங்குந் தேட்கடை ஆடா
[தோடை
ஆற்றுஞ் சாரணைகை யாந்தகரை அடுக்குந் தூதளைகீ ழாநெல்லி
ஏற்றுஞ் சங்குபிர மிபொடுதலை சறியுங் கத்தரி கழலாவாரை
சாற்றும் வகையிவை சாறென்று சாறு தனியே தானுழக்கு
வேற்று மருந்துவ சம்புதிப்பிலி மிளகு கடுகு பெருங்காயம்
மாற்றுஞ் சீரகஞ் சிறுதேக்கு மருவுஞ் சாதிபெ ருங்குரும்பை
தாற்று வீழியால் வெட்பாலை தன்னு மேலமதி விடையங்
கூற்றுஞ் சுக்கு செவ்வியமுங் கொடிய பதுமுக மங்கோலம்

நாற்று மசமோதக முத்தக்காசு நடுவே யத்தித் திப்பிலியுங்
கூற்ற மென்னுங் கொடுவேலி கொள்ளுமூலமு ரோகணியும்
ஏற்றுக் கொள்ளு மோரொன்று எண்ணெய் நாழிக முஞ்சுகொண்டு
பார்த்துப் பையவரைத் துக்கரைத்து பதத்தில நிந்துவ டித்ததனை
யாற்றிநக்க காசங் கடகரை யடுக்கு மிருமலி வையெல்லாந்
தோற்றுப் போமெனச் சித்தர்களே சொன்னமருந்து மிதுதானே'

**பொருள் :—** நொச்சி, பிராய், சிற்றுமுட்டி, தேள் கொடுக்கிலை, ஆடாதோடை, சாரடை, கையாந்தகரை, தூதுவேளை, கீழ்க்காய்நெல்லி, இசங்கு, பிரமி, பொடுதலை, வழுதலை, கழற்சி, ஆவாரை, இவை ஒவ்வொன்றின் சாறும் ஓர் உழக்கு வீதம்; வேறு மருந்துகள் வசம்பு, திப்பிலி, மிளகு, கடுகு, பெருங்காயம், சீரகம், கண்டுபாரங்கி, சாதிக்காய், பெருங்குரும்பை, வீழி, ஆல், வெட்பாலை, அதிவிடயம், சுக்கு, செவ்வியம், பதுமுகம், அழிஞ்சில், அசமோதகம், கோரைக்கிழங்கு, யானைத் திப்பிலி, சித்திரமூலவேர்ப்பட்டை, கடுக்காய் (காட்டு மிளகு) ஒவ்வொன்றும் ஒருகழஞ்சு வீதம் எடுத்துக் கற்கமாக அரைத்து மேற்படி சாறுகளுடன் கலக்கி எண்ணெய் ஒருநாழி கூட்டிக் காய்ச்சிப் பதத்தில் வடித்து உள்ளுக்கு அளவுபோல் சாப்பிட்டு வர, இருமல், கடகரை, இரைப்பு ஆகிய யாவும் தீரும்.

### இருமலுக்குப் புகை

ஆடா தோடை நாரத்தை யணிசேர் நொச்சி லதிற்சாற்றில்
நீடரி தாரந் தன்னை நேகவ ரைத்துக் கொண்டு
நாடிய சீலை தனிலூட்டி நன்னிழ லுலத்தித் திரியாக்கிக்
கூடிய புகையை வாயினிலே கொள்ள இருமல் போயிடுமே. 561

**பொருள் :—** ஆடாதோடை, நாரத்தை, நொச்சி, இவற்றின் சாற்றில் தாளகத்தை நன்றாக அரைத்துக் கொண்டு அதைச் சீலையில் ஊட்டி நிழலில் காயவைத்துத் திட்டப்படி திரியாக்கிக் கொளுத்தி அப்புகையை வாயால் இழுத்து விழுங்கி மூக்கால் விட்டுவர இருமல் தணியும்.

இடுக்கணி லிருமி யோங்கி யிரைத்துநீர்க் கிடந்தி டாதே
படுக்கரி தாரம் பிச்சி சங்குதூ தளையின் சாற்றில்
கடுக்கெனத் தோய்த் துணர்ந்த புகைதிரி விசேஷங் கெட்டங்
கடுத்துவ ரிரும லும்போ மிடிக்குடம் பாகுங் காணே. 562

**பொருள் :—** நன்கு தூயதாக்கிய அரிதாரத்தைப் பிச்சி இலைச்சாறு, இசங்குஇலைச்சாறு, தூதுவளைஇலைச்சாறு, - இவற்றல் நன்கு அரைத்துச் சீலையில் ஊட்டி உலர்த்தித் திரியாக்கிப் புகை பிடிக்க இருமலால் துன்புறத் தேவையில்லை,

## குருதி காச இயல்பும் மருந்தும்

அண்டியே யிருமல் குத்தி யடிக்கடி யிரத்தம் வீழ்ந்து
மண்டியே யுதரம் விம்மி வாயுவு மேலே கொள்ளும்
பண்டியுஞ் சுருங்கி நாளும் பதங்கெட வருமே யாகில்
உண்டெனக் குருதி காசமென் றுரைத்தனர் சித்தர் தாமே. 563

**பொருள் :—** இருமல் குத்திக்குத்தி வருதலும், அதனுடன் அடிக்கடி இரத்தம் வீழ்தலும், வயிறு உப்புசம் கொள்ளலும், வயிற்றின் (உணவுப்பொருள்) உட்கொள்ளும் திறம் நாளுக்கு நாள் சுருங்கியும், உடலின் நல்லபாங்கு கெட்டு வருமாயின் அதுவே குருதியிருமல் என்று முனிவர் கூறினர்.

## குருதிப் பித்தக் குடிநீர்

ஆடா தோடை ஆலமுகிழ் அருள்முந் திரிகை பேரீச்சம்
வாடா மதுரம் பற்படகம் வளர்மா தளையோ டிலாமிச்சங்
காடார் கொன்றை யிலந்தைத்தோல் கதித்த வில்வஞ் சீதையுடன்
தேடார் தேவ தாரமுடன் சிறுகீரை யுந்தான் சமன்கூட்டே. 564

**பொருள் :—** ஆடாதோடை, ஆலின்முகிழ், திராட்சைப் பழம், பேரீச்சம்பழம், அதிமதுரம், பற்படகம், மாதுளைப்பழத்தின் ஓடு, இலந்தைப்பழச்சதை, வில்வஇலை, அல்லது வில்வப் பழச்சதை, சீதேவிச் செங்கழுநீர்சமூலம், தேவதாருக்கட்டை, சிறுகீரைச்சமூலம் இவற்றை ஒத்த நிறையாகக் கூட்டுக.

கூட்டி யதில்நீர் இருநாழி விட்டுக் காய்ச்சி யுழக்கானல்
தீட்டுஞ் செந்நெல் பொரியிட்டுச் செய்தே கொடுக்கி லிதற் [கறுநோய்
வாட்டும் பித்த ரத்தபித்தம் வலுவா மீளை சயமிரைப்பு
பூட்டு மிரும லிவையெல்லாம் போகுங் கண்டீ ரிவைமெய்யே. 565

**பொருள் :—** அவ்வாறு கூட்டியுள்ளன வற்றிற்கு இரண்டு நாழி நீர் கூட்டிக் காய்ச்சி உழக்காக வற்ற வைத்து இறுத்து வடித்து எடுத்த குடிநீருடன் நெற்பொரி இட்டுக் கொடுக்கவும். இதனல் தீரும் நோய்களாவன: பித்ததோடம், ஈளை, சயப்பிணி, இரைப்புநோய், இருமல் யாவும் தீரும்,

## கழுத்திலுண்டான கழலைக்கு எண்ணெய்

தூதளை யோரிலை முத்தக் காசு துய்ய கரிசலாஞ் சாரணைவேப்பம்
[பட்டை
ஓதிய நன்னாரி பிராய்கண் டங்காலியுயர்கொட்டைக் கரந்தை
[சங்குவட்டப் பேய்மிரட்டி
தீதில் சிறுகுறிஞ்சா வெண்ணெச்சில் தழுதாழைசின்னி
[கருநொச்சில் குன்னிகுருந் தவுரிபொரிசல்
ஓது குரோட்டை கோழியவரை பாவட்டை யுசிலம்புல்
[லுருவிசெங் கத்தாரிசங் கங்குப்பி; 566

**பொருள் :—** தூதுவேளை, ஓரிலை (சிற்றுமல்லி), கோரைக் கிழங்கு, கரிசாலை, சாரடை, வேப்பம்பட்டை, நன்னாரிவேர், பிராய்மரப்பட்டை, கண்டங்கத்தரி, கொட்டைக்கரந்தை, இசங்கு, வட்டப்பேய்மிரட்டி, சிறுகுறிஞ்சான், வெண்ணெச்சி, தழுதாழை, சின்னி, கருநொச்சி, குன்னி, குருந்தமரப்பட்டை, பொரிசல், குரோட்டை, கோழியவிரை, பாவட்டை, உசிலம்பட்டை, புல்லுருவி, செங்கத்தாரி, சங்கங்குப்பி;

குப்பிமணத் தக்காளி சிலந்தி வீழி கூறும் புலிதடுக்கி பெருமருந்
[தாடாதோடை
செப்பிய ஆயில்தவ சிமுருங்கை யமுக்குராவும் செவிதனி யிலை
[ரசமும் வேர்க்க சாயமுமாய்
இப்படிக் கற்கங்கருஞ் சீரகமரத் தைகடுக்கா யியல் கோட்டந்
[திரிகடுகு மரமஞ்ச ளுள்ளி
ஒப்புபெருங் குரும்பை சித்திரமூலஞ் சிவதைவேரும் உயர்பூத
[கரப்பன்வா லுளுவை கூட்டே. 567

**பொருள் :—** மணத்தக்காளி, சிலந்தி, வீழி, இண்டங் கொழுந்து, ஈசுரமூலி, ஆடாதோடை, ஆயில், தவசி முருங்கை, அமுக்குரா, மான்செவி ஆகிய இவற்றின் இலைச்சாறுகளும், வேரின் குடி நீர்களுமாகக் கூட்டி; (அதற்காம் கற்கம்:—) கருஞ் சீரகம், அரத்தை (சிறியது), கடுக்காய்த்தோல், கோட்டம், திரிகடுகு, மரமஞ்சள், தோலுரித்த வெள்ளைப் பூண்டு, பெருங் குரும்பை, சித்திரமூலம், சிவதைவேர், பூதகரப்பான் பட்டை, வாலுழுவை யரிசி ஆகியவற்றை முறையாகத் தூளாக்கி அரைத்து மேற்படி சாறு, குடிநீர்களின் கலவையில் கரைத்திடுக.

கூட்டு மெண்ணெய் நாழிக்குக் குலமோர் பலமுங் குலவுகற்க மிரு
[கழஞ்சு சுரசக் சாயமுமே
நாட்டமுட னேசேர்த்துத் தயிலம் வாங்கி நாள்தோறு முட்
[கொள்ளக் கபாலகண்ட கரப்பான்

காட்டும்வறட் சிக்கரப்பான் சடைக்கரப்பான் வாதக் கரப்பாநெடு
[செங்கரப்பான்
கருங்கரப்பான் கண்ட மூட்டியவிப் புருதிகண்ட மாலை பல் கிரந்தி
[உயரீளை மேக மிருமலுடனி வைபோமே. 568

**பொருள் :—** இதில் சேர்ந்திடும் எண்ணெய் ஒரு நாழி, கற்கங்கள் வகைக்கு இருகழஞ்சும், சாறுகளும் குடிநீர்களும் வகைக்கு ஒருபலமும் சேர்க்க வேண்டியது. அவ்வாறு சேர்த்துப் பதமாகக் காய்ச்சி வடித்த தைலத்தை நாள்தோறும் உட்கொள்ள – பாலகண்டகரப்பன், சடைக்கரப்பன், வாதகரப்பன் செங்கருப்பன் வரட்சிகரப்பன், கருங்கரப்பன், கண்டம்மூட்டிய விப்புருதிக் கண்டமாலை, பல்கிரந்தி, மேகம், மிகத்தீவிரமான ஈளை, இருமல் ஆகியன தீரும்.

காலைவெயில் பின்புகையுந் தனக்கு மூத்தான் காசினியி லெக்
[குழியன் தண்ணீர் தானும்
ஏலவெண்ணெய் ராத்தயிர்க ளிவைகளாகா ஏற்றஅந்தி வெயில்
[ஓமப் புகையிளையள் கூட்டம்
சீலமுடன் வெந்தண்ணீ ராவின் பாலுந் தினமுமே கொள்பவர்க்கு
[ஆயு ளுண்டாம்
ஞாலமதி லிவையறிந்து நடந்த பேர்க்கு நன்மை யுண்டாம் பில
னுண்டா நாளுந்தானே. 569

**பொருள் :—**காலைவெய்யிலில் காய்தல், பிணம்சுடும் ஈமப் புகை, வயது மூத்த பெண்ணின் உடலுறவு, உலகில் உயர்ந்த இடமாக இருந்தாலும் அங்குள்ள குழியிலிருந்து கிடைக்கும் குளிர்ந்த (காய்ச்சாத) நீர், இரவில் எண்ணெய் நீராடல், இரவில் தயிர்ச்சோறு ஆகியன ஒவ்வா. ஆகையால், இன ஆகாது என்று விலக்க வேண்டும். மாலை வெய்யிலில் இருத்தல், வேள்விப் புகை, இளைய வயதுடையவள் சேர்க்கை, காய்ச்சியாற்றிய (குளிர்ந்த) நீர், பசுவின்பால், இவற்றை நாளும் கொள்பவர்களுக்கு நீண்டவாணுள் உண்டாகும். இவ்வுண்மையையறிந்து ஒழுகுபவர்களுக்கு நன்மையும் உரமும் நாளுக்கு நாள் பெருகும்.

## வறட்சிக்கரப்பன் இயல்பு

வாதஞ் செறிந்து மயங்காதே வறட்சிக் கரப்பன் வகைகேளீர்
ஊருஞ் சொறியும் பரபரத்து உடம்பு மிகவே யதைப்புண்டாய்த்
தீரு மருந்து பரந்தேறுந் திதமாய்ச் சொரூபம் வேருக்கு
மாரு மொருவற் கண்டெனவே வாச முடம்பு புலால் நாற்றம். 570

**பொருள் :—** வாதக்குற்றம் பெருகி வருந்தாதீர்கள். வறட்சிக்கரப்பானின் வகையைக் கூறக்கேட்பீர்களாக: -உடலில் தினவுண்டாகும், நகங்கள் ஊன்றச்சொரியச் செய்யும். விரைந்து அச்சொரிபரவும். உடலில் வீக்கம் கண்டு மேலும் மேலும் பரவிக் கொண்டே போகும், நிலையாக ஒருவனுடைய உண்மை உருவத்தை வேறுயாரையோ கண்டதுபோல மாற்றிவிடும். உடலில் புலால் மணம் நாறும்.

தண்ணீர் மீட்டான் கிழங்குதனில் சாறு நாழி தான் கொண்டு
உண்மைக் குரிய வரிக்குமரி யுடலிற் சாறு நாழியது
வண்மைக் குரிய தூதுவளை மற்றும் நாலு பலம் வேருய்
நன்மை யாக ஒருசாமம் நன்று யதனி லூறுவதே. 571

**பொருள் :—** தண்ணீர் விட்டான் கிழங்குச்சாறு 1 நாழி, வரிக்கற்றுழைச்சாறு 1 நாழி ஆகிய இரண்டையும் கலந்து அதில் தூதுவளைச்சமூலத்தைத் துண்டாக்கி நசுக்கிப்போட்டு 3 மணி நேரம் ஊறவைக்கவும்;

ஊறிப் பிழிந்து வடித்தெடுத்து ஒரஞ் சிரண்டாய்க் காய்ந்த [எண்ணெய்
ஆறிப் போகும் எண்ணெயது அடுக்க நாழி யுரிவிட்டு
கூறிச் சிவந்து கொடுவேலி குலவுஞ் சீரகம் வேம்பாடம்
ஏறக் கூட்ட வேண்டாங்காண் எண்ணுங் கழஞ்சு தான்கூட்டே.

**பொருள் :—** ஊறியபின் அச்சாற்றைப் பிழிந்து வடிகட்டி எடுத்து ஐந்துபங்குக்கு இரண்டு பங்கு எண்ணெய் கூட்டி அதில் செங்கொடுவேலி வேர்ப்பட்டை, நற்சீரகம், வேம்பாடம் பட்டை, ஆகிய இவற்றை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் எடுத்து முறைப்படி அரைத்துக் கற்கமாய்க் கலக்கிக் காய்ச்சிப் பதமாய் வடித்துக் கொள்க.

**குறிப்பு :—** இதன் உபயோகம் இப்பாடலில் காணப்படவில்லையாயினும், இது செங்கரப்பான் தீர்க்கும் மருந்து என்று கொள்க.

## செங்கரப்பனுக்கு எண்ணெய்

தலைசுருளிக் காரையிலைச் சாறு தன்னிலே சமனாகக் கொண்டு
இலைவசம் புதிரி கடுகு இயன்றவெள் ளுள்ளிசம னாக்கி
திலை நல்லெண்ணெயிற் கொதிப்பித்துத் தினமு நக்கிப் பூசிடிலே
அலையில் லாச்செங் கரப்பான் அதுகழன் றேடிடுந் தானே. 573

**பொருள் :—** ஈசுரமூலி, காரை ஆகிய இவற்றின் சாற்றில் பச்சிலை வசம்பு, திரிகடுகு, தோலுரித்த பூண்டுத் திரி சம அள வாக எடுத்துக் கற்கமாக அரைத்துக்கலக்கி நல்ல எள்நெய்யில் கூட்டிக்காய்ச்சி மேலுக்கும்பூசி, உள்ளுக்கும் உட்கொண்டு வரச் செங்கரப்பான் தீரும்.

### சிரங்குக்கு மருந்து

சோம்பிக் கெடுவீர் சிரங்கென்று சொறிந்து மாய்ந்து திரியாதே
ஆம்பல் கிழங்கும் வெம்பாடல் அதுவும் கூட்டி யரைத்துருட்டி
வேம்புத் தயில மதிற் குழைத்து வெயிலில் பருதியுட னெடுத்துச்
சாம்பல் கூட்டி யிடுவீரால் தழும்புங் காணக் கிடையாதே. 574

**பொருள் :—** ஆம்பல்கிழங்கும், வேம்பாடம் பட்டையும் ஒரே அளவாக எடுத்து அரைத்து உருட்டி வேப்பெண்ணெயில் குழைத்து வெயிலவன் எழும்போது மேற்படி மருந்துடன் சாம்பலைக் கூட்டி சிரங்கு புண்களின் மேல் போட எவ்வகைச் சிரங்கும் தீரும். அது ஆறியபின் அவ்விடத்தில் தழும்பும் காணப்படாது.

பொரும்பிவேர் எலுமிச்சம் பழச்சாறு வார்த்தரைத்து
அரும்பூண் முலையா யிவையுடல் தப்பிடிலச்
சிரங்கு தேமல்படர் தாமரை தானிவை
கரிந்து போமிது கைகண்ட யோகமே. 575

**பொருள் :—** பொரும்பியின் வேர்ப்பட்டையை எலுமிச்சம் பழச் சாற்றுலாட்டி உடலில் பூசிவந்தால் எல்லாவகைச் சிரங்கு களும், தேமல், படர்தாமரை, குட்டம் முதலானவையும் தீர்ந்து போகும்.

### செங்கரப்பனுக்கு எண்ணெய்

சின்னி பச்சிலைப்பெருமாள் செம்ப ரத்தம் பூவுடனே
முன்னை நாழியில் நெய்யுரியு மெண்ணெ யுரியுங் கலந்திட்டு
சொன்ன கருஞ்சீ ரகமஞ்சள் மிளகு திப்பிலி சேர்த்தரைத்து
உன்னி யெண்ணெய் வெந்துதென வுருண்டு போகுஞ்
[செங்கரப்பன். 576

**பொருள் :—** சின்னிஇலை, பெருமாள்பச்சிலை, செம்பருத்தம் பூ இவற்றின் சாறு வகைக்கு ஒரு நாழியும், நெய், எள்நெய் வகைக்கு ஒரு உரிவீதமும் கலக்கி அதில் கருஞ்சீரகம், மஞ்சள்,

மிளகு, திப்பிலி ஆகிய இவற்றைக் கற்கமாக அரைத்துக் கலந்து காய்ச்சி வடித்த எண்ணெயை உட்கொண்டும் மேலேயும் பூசிவர செங்கரப்பான் தீரும்.

### விதகரப்பனுக்கு எண்ணெய்

சின்னி யிலையு நீர்ச்சிலந்தி சீதே யிலையும் வேர்கூட்டி
முன்னை வேரு மொசுமொசுக்கை யிலையின் சாறும் வார்த்தரைத்து
சொன்ன வெண்ணெயில் வெந்திட்டுச் சுகத்தில் நக்கி யிடுவீரேல்
உன்னி வந்த விடகரப்ப னோடிப் போகுங் கண்டீரே. 577

பொருள் :— சின்னிஇலை, நீர்ச்சிலந்திஇலை, சீதேவிஇலை, முன்னைஇலை, முசுமுசுக்கைஇலை இவற்றின் சாற்றால் மேற்படி தாவரங்களின் வேர்ப்பட்டையை ஊறவைத்து அரைத்து எள்ளெண்ணெயிலிட்டுக் காய்ச்சி உட்கொண்டு வர விடகரப்பன் தீரும்.

### விதகரப்பன் உட்பட அனைத்துக்கும் எண்ணெய்

உன்னிய கரப்பன் விதனமுற்றி யுருண்டு வீங்கிக் கிடவாதே
சின்னியி லைசீர கங்காரி சீர்மை நீலி சிலந்தியுடன்
மன்ன வெந்த தெண்ணெயென மதிகெட் டோடும் விதகரப்பன்
அன்னி யருடன் சொல்லாதே அரிய வெண்ணெய் அகம்புறமே.

பொருள் :— சின்னிஇலை, சீரகம், கரிசாலை, அவுரி, நீர்ச் சிலந்தி இவற்றைக் கொண்டு காய்ச்சப்பட்ட எண்ணெய் விதகரப்பானைப் போக்கும். உள்மருந்தாகவும், புற மருந்தாகவும் இதனைப் பயன்படுத்தலாம்.

### விதகரப்பனுக்கு நெய்

பொன்னாங் காணி குளப்பாலை புகழுஞ் சின்னி பிரமியுடன்
எண்ணு நீலி வெள்ளறுகு இதனோர் முருக்கஞ் செங்கழுநீர்
மன்னூர் கற்பூர வள்ளியுடன் மருவள்செ ருப்படிசங் கங்குப்பி
இன்னு லத்தி யிச்சியிவை யிருநா ழிச்சா றுமெல்லாம். 579

பொருள் :— பொன்னாங்காணி, குளப்பாலை, சின்னி, பிரமி, நீலி, வெள்ளறுகு, பலாசு, செங்கழுநீர், கற்பூரவல்லி, மருள், செருப்படி, இசங்கு, ஊழலத்தி, இத்தி இவற்றின் சாறுகளுடன்;

ஏலம் விழாலரிசி யதிமதுரம் தேத்தாங்கொட்டை
யிருவேலி யிலாமிச்சம் பூதவிருக்கம்
நீலி திரிகடுக்காய் கடுகு ரோகணி
நெல்லிசத குப்பைமெத்த நிலக்குமிழ் கொட்டஞ்

சால விருநாழி நெய்பா லிருநாழி
சரியிள நீர்மற்றைச் சாறளவுங் கூட்டி
காலமே நெய் வெந்து நக்குவீரேல்
கருதி யங்கு நில்லாது விதகரப்பன். 580

**பொருள் :—** ஏலம், விழாலரசி, அதிமதுரம், தேற்றுன் கொட்டை, சித்திரமூலம், உத்தாமணி, விலாமிச்சு, பூதமரப் பட்டை, நீலி, பூண்டு, கடுக்காய்த்தோல், கடுகுரோகணி, நெல்லிமுள்ளி, சதகுப்பை, நிலக்குமிழ், கோட்டம் ஆகியவற்றைக் கற்கமாய்க் கொள்ள வேண்டியது. பசுவின் நெய் 2 நாழி, பசுவின் பால் 2 நாழி, இவை இரண்டும் சேர்ந்த அளவு இளநீர். மற்றைச் சாறுகள் நெய்யின் அளவாகவே கூட்டிக் கலக்கி நெய்யாகக் காய்ச்சி உண்ணவும், விதகரப்பன் தீரும்.

## செங்கரப்பனுக்கு

சந்தனம் பொன்மெழு கதிமதுரம் சட்டம் பூத விருக்கமுடன்
வந்தித் தரைநீ லிச்சாற்றில் வருந்தி யிருகூ ருக்கியிது
வெந்த எண்ணெயும் நெய்யும நக்கி மெய்யிற் சிறக்கப் பூசியிடில்
வந்த கரப்பன் செங்கரப்பன் வாரா தோடிப் போய்விடுமே. 581

**பொருள் :—** சந்தனம், மஞ்சள்மெழுகு, அதிமதுரம், சட்டம், பூதமரப்பட்டை, இவற்றைத் தூளாக்கி அவுரிஇலைச் சாற்றுல் அரைத்து இருபங்காக்கி ஒருபங்கை எண்ணெயிலும் மறுபங்கை நெயயிலும் இட்டுக்காய்ச்சி வடித்து முறையே மேலுக்குப் பூசியும உள்ளுக்கும் குடித்து வரக் கரப்பான், செங்கரப்பான் தீர்ந்திடும்.

## விதகரப்பன் பித்தத்துக்கு நல்லெண்ணெய்

கற்பூர வள்ளிச் சாறிரு நாழியுங் கருதரிய வவுரிச் சாறிரு நாழியும்
நற்பாலைச் சாற்றி லேயிரு நாழியும் நல்லெண்ணெ யாவின்பா
[லொன்றிரு நாழியுங்
கற்பான அதிமதுரம் காரேல மோரொன்று கணக்காகப் பதின்
[கழஞ்சு கலந்து கொண்டே
அப்போது வெந்த எண்ணெய் நக்கில் அகன்றோடும் விதகரப்பன்
[பித்தம்போமே. 582

**பொருள் :—** கற்பூரவள்ளிச்சாறு, அவுரிஇலைச்சாறு, வெட் பாலைச்சாறு இவை வகைக்கு 2 நாழி கூட்டி, எள்நெய் ஆவின்பால் வகைக்கு 2 நாழியும் கூட்டி அதில் அதிமதுரம்,

காட்டேலம் இரண்டையும் வகைக்கு 10 கழஞ்சு எடுத்து அரைத்துக் கற்கமாகக் கூட்டிக் காய்ச்சி வடித்த எண்ணெயை உட்கொள்ள விதகரப்பனும், பித்தரோகமும் தீரும்.

## சொறிக்கு

நெடுமா லலங்கலும் நீள்சடையோன் தாரும்
மடமாச்சக் காய்மரமஞ்சள் வடவரை
சொல்லுமிலைச் சாறுவார்த் தரைக்க
யின்னுப்புச் சொன்னற்குப் போமே சொறி. 583

**பொருள் :—** துளசி, கொன்றை, மாசக்காய், மரமஞ்சள் ஆகிய இவற்றைச் சரி அளவாக எடுத்து அழிஞ்சி இலைச்சாறு விட்டரைத்துச் சொறி உள்ள இடங்களில் போடத் தீரும்.

## சொறி-சிரங்குக்கு

அறுகுட னெருக்கு மஞ்சள் புளியிலை யரளி யீர்க்கு
முறியிலை கள்ளிச் சாறு முதுகெந்த வெந்த எண்ணெய்
சிறுசொறி சிரங்கு தேமல் தழும்புதான் தீரு மென்னச்
சிறுகுரு தேவன் சொன்னன் பெருங்குரு தேவன் கேட்டான். 584

**பொருள்:—** அறுகம்புல், எருக்கன்இலை, மஞ்சள், புளியிலை, அலரிஈர்க்கு, இலைக்கள்ளித்தளிர் இவற்றின் சாற்றுடன் கந்தகம் கூட்டி அரைத்து எண்ணெயில் கலக்கிக் காய்ச்சிய தைலத்தை மேலே பூசிவரச் சொரி, சிரங்கு, தேமல், தழும்பு, முதலான தோற் பிணிகள் தீரும். [இது முருகன் கூற அகத்தியன் கேட்டுக் கொண்டான்.]

வேலையி லொருசி றங்கை மிளக தனைய ரைத்துங்
காலிலை கள்ளிச் சாற்றில் கடுகவே வெந்த எண்ணெய்
சேலையிற் சிறுசி ரங்கு தழுதணை தேமலது குறுகி
சாலவுங் கெட்டு வேலை தான் புகுந்தொளிகுமாமே. 585

**பொருள் :—** மிளகை இலைக்கள்ளிச் சாற்றல் அரைத்து எண்ணெயில் கலக்கிக் காய்ச்சி வடித்து மேலுக்குப் பூச சொறி, சிரங்கு, தழும்பு, தேமல் முதலிய நோய்கள் தீரும்.

எருக்கம் பாலோ டரிமிள்கு எழிலார் வேப்பந் துளிர்மஞ்சள்
பருக்கை பாடாத பருவுப்பு பண்டே புளித்த மோருடனே
சுருக்க லரைத்து மேற்பூசச் சொறியுஞ் சிரங்கு தழுதணையும்
நெருக்கி நின்ற நேசத்து நில்லா தார்க்குஞ் சொல்லாதே. 586

**பொருள் :—** எருக்கம் பாலோடு மிளகு, வேம்பின் தளிர், மஞ்சள், உப்பு, புளித்தமோர் இவற்றுடனே விரைந்தரைத்து மேலே பூசினுல் சொறி, சிரங்கு, தழும்பு இவைபோம்.

தழுதணை பொரும்பி வேரைத் தானதைப் புளிப்பின் சாற்றில்
அரும்புமென் முலையாய் கேளா யரைத்திடில் சிறுசி ரங்கு
தழுதணை தேமல் சார்ந்தி டாபழி யெரியை நீங்கிப்
பொழுதொரு கடிகை நில்லா போமிது வுண்மை தானே. 587

**பொருள் :—** தழுதாழை, பொரும்பி இவைகளின் வேர்களை எலுமிச்சம் பழச்சாற்றுலரைத்து மேலே பூசத் தழும்பு, சொறி, சிரங்கு முதலிய பிணிகள் தீர்ந்திடும். இது கைகண்ட முறையாம்.

## தீராச் சிறுசிரங்குக்கு

தீராச் சிறுசிரங்கு பற்றிற் றென்று தியங்கிநீ மனங்கெட்டுத்
[திரியா தேகேள்
தார ...யென்றரைத்து வென்னீரில் முன்னுட் டாம்பருகுந் தலைசுடு
[வள்ளி வேரை
வேராகு மரளிவேர் வெம்பாடல் பொடியை வெய்யி லெண்ணெய்
[கலந்துவைத்து மேற்பூசினுற்
சீராருஞ் சீராமன் சேனை அய்யத்திலே அனுமன் கொடுவரு
[மருந்து நன்றுமே. 588

**பொருள் :—** பொடுதலை (தலைப் பொடுகுபோக்கி) வேர்ப் பட்டையை வெந்நீர் விட்டரைத்து உட்கொண்டும், அலரி வேர்ப்பட்டையையும், வேம்பாடம்பட்டையையும் நன்கு உலர்த்தி நுண்ணிய பொடியாக்கி எண்ணெயிலிட்டு வெயிலில் (சூரிய புடம்) வைத்துக் கலக்கி மேலுக்குப் பூசிவரச் சிறுசிரங்கு தீரும்.

மஞ்சள் மிளகு கெந்தகத்தை மதிக்கப் பொடித்தங் கெடுத்திட்டு
நுஞ்சம் பூழத்தங் காயினி லடைத்து மூடி நூல்சுற்றி
விஞ்சு போகவு மிக்காந்தல் புதைத்து வெந்த வுழக்கெண்ணெய்
அஞ்ச லென்று சிரங்கிலிட ஆருச் சிரங்கு மாறிடுமே. 589

**பொருள் :—** மஞ்சள், மிளகு, கந்தகம் இம் மூன்றையும் பொடித்துச் சமனுய்க் கூட்டிப் பூவரசன் காயைப் பிளந்து அதில் அடைத்து மூடி நூல்சுற்றி அதை உமிப்புடமாய்ப்

போட்டுக் காய் நன்கு வெந்த பக்குவத்தில் பக்குவமாக எடுத்துக் காய்க்குள் இருக்கும் மருந்தை மட்டும் உழக்கு எண்ணெயி லிட்டுக் கலக்கிக் காய்ச்சி மேலே பூசிவர ஆருச் சிரங்குகள் ஆறி விடும்.

தேற்றின் முற்றத் தோல்சீவிப் பொடித்து நெய்யில் விழுங்கிடுகில்
ஏற்ற மான பதினெட்டுக் குட்டந் தீரு மிதுநிற்க,
ஆற்ற வொண்ணு வுடம்பெரிப்புக் காவின்பால் பொடிவெள் ளரி
[வித்து
ஏற்றி யரைத்துக் குடித்திடுகி லிழந்து போகுங் கண்டீரே. 590

**பொருள் :—** தேற்றின் வேர்ப்பட்டையைத் தூளாக்கித் தேனில் அளவுப்படி உட்கொண்டுவர 18 வகைக் குட்டங்களும் தீர்ந்துவிடும். தாங்கமுடியாத உடலெரிவுக்கு மேற்படி தூளுடன் வெள்ளரி வித்தையும் கூட்டிப் பசுவின் பால் விட்டரைத்து உட் கொண்டால் அது தீரும்.

## கடிநஞ்சுக்கு எண்ணெய்

கெந்த கங்கருஞ் சீரகங்கார் போகரிசி கேளி லுப்பைப் புண்ணுக்கு
[குந்திருக்கம்
வந்த குமி ழாகா சக்கெரு டன் கிழங்கு வருமஞ் சளாரை திராய்எருக்
[கூமத்தம்
அந்த வேலிப் பருத்தியோ டரியசுண் டிசிலாற்றிக் கத்தாழைச்
சந்த மாவரைத்து வெந்தஎண் ணெயிட்டால் அரியகடிவேக
[முட னகன்றுபோமே. 591

**பொருள் :—** கந்தகம், கருஞ்சீரகம், கார்போகரிசி, இலுப் பைப் பிண்ணுக்கு, குந்திரிகம், குமிழ், ஆகாசக்கருடன்கிழங்கு, மஞ்சள், ஆரை, பம்பந்தரா, எருக்கு, ஊமத்தன், உத்தாமணி, சுக்கு, கற்றுழை இவைகளை நன்றாக அரைத்து எண்ணெயில் இட்டுக் காய்ச்சி வடித்து மேலுக்குப் பூசவும். அரிய கடிவிடம் தீரும்.

## காலிற் பிளப்புக்கு

உப்பு மண்புழுங் கரிசியூ மத்தவித் திந்துப்புந் தயிரொ
[டெருக்கம்பால்;
ஒக்க விரைப்பன விற்பா தப்பிளப் படங்கப்பூச
நிலைவிற் றுமரை யாங்காலே யறுத்துப் போடும்வேரோடே. 592

**பொருள் :—** உப்புமண், புழுங்கலரிசி, ஊமத்தைவிதை, இந்துப்பு இவற்றைத் தயிர் விட்டரைத்துப் பின் எருக்கன் பால் விட்டரைத்துக் கால்களில் அப்பிவைத்தால் கால் வெடிப்புகள் தீர்ந்து பாதம் தாமரைப் பூப்போல ஆகும். வெடிப்புகள் யாவும் வேரோடு போய்விடும்.

காத்துக் கஞ்சிநீர் காலசா தத்தினடுக்
கொண்ணெறித்தி ரிக்குதென
நீற்றுப் பாலநெய் யில்காலிட வல்லீரேல்
சேத்துத் தாமரை செய்யித ழொக்குமே. 593

**பொருள் :—** சூடான வடிகஞ்சியில் காலை வைத்தும், சூடான அன்னத்தைச் சுடுகஞ்சி விட்டு அரைத்துக் கற்சுண்ணமும் கலந்து சூடாகக் கால்வெடிப்பின் மேல் பூச வெடிப்பு மாறித் தாமரை இதழைப் போல ஆகும்.

கீற்றுப் படவேண்டிக் கால்பிளந் தோமென்று கிந்திக்கொண்டு [திரியாதே
ஏற்றுக் கண்ணன குகை யோட்டை யிடித்துச் சிறுநீ ருரியிட்டுச்
சாற்றைத் தடவத் தாமரையாஞ் சதிரக் கள்ளிப் பாலிலிடுந்
தோற்றுப் போமே கால்பிளப்புச் சொன்னர் முனிவர் சொன்னரே.

**பொருள் :—** ஏற்றுக்கண்ணென்னும் குகையின் ஓட்டை ஓர் உரி சிறுநீரிலிட்டு வேகவைத்து வடித்துவிட்டு அந்நீரைத் தடவிவரக் கால்வெடிப்பு நீங்கிக் கால் தாமரைப்பூப்போல ஆகும். அல்லது மேற்படி நீருடன் கள்ளிப்பாலைக்கூட்டிப் பூசினல் கால் பிளப்புத் தீரும்.

## செத்தபிள்ளை விழ மருந்து

செத்த பிள்ளை விழவேண்டில் திரிந்து மாடப் புருவெச்சம்
மெத்தக் காடி தனிலரைத்துத் தடவத் தீருங் கீழ்வயிற்றில்
அச்சப் படாதே வெண்டோன்றிக் கிழங்கு மரைத்துத் தடவலுமாம்
உச்சத் தாலுள்ளங் கால்தடவ உருண்டு விழுந்திடும் பிள்ளையுமே.

**பொருள் :—** மாடப்புருவின் எச்சத்தைக் காடி விட்டரைத்துக் கீழ்வயிற்றில் தடவி வைக்கச் செத்த பிள்ளை வெளியாய் விடும். வெண்தோன்றிக் கிழங்கைக் காடி விட்டரைத்து அடிவயிற்றிலும், உள்ளங்கால்களிலும் தடவிவைக்க மரித்த பிள்ளை வயிற்றிலிருந்து வெளியாய் விடும்.

## கீரிப்புழுவுக்கு

முற்றிவற்ரு தொருதேங்காய்ப் பாலுங் கொண்டு முதுகள்ளிப்
[பாலரைச் சிரட்டையி லேவிட்டு
வற்றவிது காய்ச்சியே கடுகு மாகில் அந்தவிச யங்கேட்டுக்
[கீரி யெல்லாங்
குற்றிருந்த வண்ணமே கூட்டோ டேபோங் குணமாக விரோ
[சனமாந் தீபனமு மாஞல்
மற்றிருந்த குடல்வாத மன்றே தீரும் அரியதிது வென்றறிந்து
[செய்தி டீரே. 596

பொருள் :— இளநீர் வற்ருமல் முற்றியுள்ள தேங்காயை உடைத்துத் துருவிப் பிழிந்தெடுத்த தேங்காய்ப் பாலுடன், அதில் பாதியளவு கள்ளிப் பாலையும் கலந்து காய்ச்சிப் பக்குவமாக வடித்துச் சொட்டுக் கணக்கில் கொடுத்தால், கீரிப்பூச்சிகள் குடலிலிருந்து கூட்டோடு அகன்றுவிடும். நன்கு பேதியாகும். நல்ல பசி உண்டாகும். குடல்வாதம் அப்போதே தீர்ந்திடும்.

கீரை வயிற்றிற் பற்றிற்றென்று தியங்கி விழுந்து கிடவாதே
ஈர விடத்தேர் மூங்கிலிலை யரிய சுக்குக் கொடுவேலி
காரை வேருங் கடுக்காயுங் காய்ந்த குடிநீ ரதுவிட்டு
யாரு மறியா தேகீரி யகலப் போகுங் கண்டீரே. 597

பொருள் :— விடத்தேரிலை, மூங்கில் கொழுந்து, சுக்கு, சித்திரமூல வேர்ப்பட்டை, காரை வேர்ப்பட்டை, கடுக்காய்த் தோல், இவற்றைக்கூட்டி முறைப்படி குடிநீரிட்டுக் குடித்தால் கீரிப்பூச்சிகள் வெளியாய் விடும்.

தள்ளாடிக் கீரிபற்றிற் றென்று தன்னேரித் தடத்தே செய்திடுநீ
[யிம்மருந்தை
வெள்ளாட்டு நீருழக்கும் வெற்றிலை பெருங்காய மதிற்சா ரித்துக்
கொள்ளாட்டித் தென்றிதனைக் கேட்டுக் கொண்டு கூசாமற் புறப்
[பட்டுப் போகுங்கீரி
வெள்ளாக்காளம் பரிக்குமிது, வெறித்துவிடவுடனே செய்திடுங்கீரி
[கூட்டோடேபோம். 598

பொருள் :— வெள்ளாட்டுச் சிறுநீர் ஓர் உழக்குடன் வெற்றிலை, பெருங்காயம் ஆகியவற்றை அரைத்துக்கலக்கி வடிகட்டி உட்கொள்ளக் கீரிப்பூச்சிகள் வெளியாகிப்போய்விடும்.

இரண்டு கழஞ்சுக் கடுக்காயை யீரஞ்சு வேப்பல குடனிட்டுப்
பிரண்டை யின்சாற்ரு லரைத்தெண்ணெய் பெய்தது விழுங்கக்
[குடலதனில்
திரண்டு கிடந்த மலங்கீரை கிருமி யிவைக ளெல்லாமும்
புரண்டு புரண்டு விழுந்திலேயேல் பொன்பதி னுயிரம் யான்
[தருவேன். 599

**பொருள் :—** இரண்டுகழஞ்சு கடுக்காய்த்தோல் தூளேயும், பத்துக்கழஞ்சு வேப்பன் வித்துத்தூளேயும் பிரண்டைச் சாற்ருல் அரைத்துச் சிற்ருமணக் கெண்ணெயில் கலக்கிக் காய்ச்சி வடித்து முறைப்படி உள்ளுக்குக் கொடுக்க, கீரிப்பூச்சி வெளியாய் விடும். அவ்வாறு விழவில்லேயாகில் பதினுயிரம் பொன் நான் தருவேன்.

## விடமுட்டித் தயிலம்

எட்டி யெருக்குத் தழுதாழை யிலுப்பை யாடா தோடைகுறுந்
தொட்டி முக்கா வளேநாமத் தாளி பிரண்டை சாறடைபா
வட்டை கழலா வரைபொன்னு மத்தங் கிரிய மாவிலிங்கு
குட்டி நறுந்தக் காளி ............... 600

**பொருள் :—** எட்டி, எருக்கு, தழுதாழை, இலுப்பை, ஆடாதோடை, சிற்ருமுட்டி, முக்காவேளே, நாமத்தாளி, பிரண்டை, சாரடை, பாவட்டை, கழற்சி, ஆவாரை, பொன்னுமத்தை, மாவிலிங்கு, குட்டித்தக்காளி,

நறுந்தக் காளிகஞ் சாங்கோரைகொழிஞ்சி பெருந்தும்பை, கரிப்பான்
ஏரண்டந் துளசி, காற்பாச நிம்பந் துராயுத் தமதாளி
நீர்ப்பூலாக் கொற்ரு னிருமுண்டி புங்கு செருப்படிகாஞ் சொறிமேனி
பொடுதலேப் பூடுசங்கு சின்னியிலே சதிரக் கள்ளியு மாவின்பால்,

**பொருள் :—** நல்லத்தக்காளி, நாய்த்துளசி, கொள்ளுக் காய் வேளே, பெருந்தும்பை, கரிசாலே, சிற்ருமணக்கு, துளசி, பருத்தி, வேம்பு, பம்பந்திராய், உத்தாமணி, நீர்ப்பூலா, கொற்ருன், இருவகை முண்டி, புங்கு, செருப்படி, காஞ்சோரி, குப்பைமேனி, பொடுதலே, இசங்கு, சின்னி இலே, சதுரக்கள்ளி, ஆவின்பால்,

பாலு முசரு மதிற்பூஞ கம்பச நெய்யே எண்ணெயுடன்
ஏலங் கழுநீர் மரமஞ்ச ளிலவங் கத்தோ டதிமதுரம்
வாலொ ருளுவை வேர்க்கொம்பு மஞ்சட் கிழங்கு குங்கிலியஞ்
சால வரைத்து வடித்தெண்ணெய் தடவீர் வாதம் சகலமும்போம்.

**பொருள் :—** தயிர் (ச்சலம்), பூநாகம், பசுவின்நெய், எண்ணெய், ஏலம், செங்கழுநீர்க்கிழங்கு, மரமஞ்சள், இலவங்கம், அதிமதுரம், வாலுளுழுவையரிசி, சுக்கு, மஞ்சள், குங்கிலியம், ஆகியவற்றை முறைப்படி சேர்த்துக்காய்ச்சிய தைலத்தைத் தடவிவர வாதப்பிணிகள் யாவும் தீரும்.

## புண்ணுக்குத் தைலம்

அழிஞ்சியோ டரளிநொச்சி துவரைவேம்போ
டிந்துப்புப் புடத்தயில மிறக்கிக்கொண்டு
பழையதொரு பாண்டத்தி லடைத்துவைத்துப்
பதியிரத மத்தித்துப் பரணி வாங்கி
கழலிலேயா மெய்படற்றிலக கடிவேகங்
காலருகில் விடமாய வெடித்தபுண்ணும்
கழலவரு மரணையெலி கடித்தபுண்ணுங்
கழலுமெனப் பெரியோர்கள் கழறிச்சொன்னர். 603

**பொருள் :—** அழிஞ்சி, அலரி, நொச்சி, துவரை, இந்துப்பு ஆகியவற்றைச் சேர்த்துப் பூமிப்புடத் தைலம் இறக்கிக்கொள்க. இதனைப் பழகிய மட்கலத்தில் காப்பிடுக. தூய்மைசெய்த இரசத்துடன் ஒரு பரணியில் மத்தித்து பூச, விடக் கடிவேகம் குறையும். வெடித்த புண்களும், அரணைக்கடி, எலிக்கடி ஆகியவையும் தீரும்.

## சிரங்கு பதினெட்டுக் குட்டத்திற்கு

எட்டி வருக்கை கருங்காலி யிதழி மதூக மிலையும்நீர்
வெட்டிப் பருப்பை சாதிநிம்பல் வேங்கை செம்மர? வயிரந்
துட்ட நீலிகா ளியருக்கஞ் சூத மிலாமிச்சிரு வேலித்தூர்
கொட்டந் தேங்காய் முன்சொன்ன மருந்தின் வித்துங் குறுந்தன்
[விரை 604

**பொருள் :—** எட்டிவேர், பலாவேர், கருங்காலிவேர், இலுப்பைவேர், நீரடிமுத்து, சடாமாஞ்சி, வேப்பம்பட்டை, வேங்கை வைரம், செம்மர வைரம், அவுரிவேர், கரிசாலை, எருக்கன்வேர், மாமரவேர், விலாமிச்சு, உத்தாமணி, சித்திரமூலம், கோட்டம், தேங்காய், எட்டிக்கொட்டை, கல்லாலின் விதை, எள்;

விரையா ரெள்ளுச் செக்குலக்கை விரகொடு யிவைகள் தயிலம்
[வைத்து
சிதையா தெடுத்துக் காயவைத்துச் சிவந்த கெந்தஞ் சீரிரும்பு
புதையா ரதம்பிற் பொடியுமிட்டுப் பூசிமூன்று நாள்கள் தனில்
வதையார் குட்டம் பதினெட்டும் வகையாய்த் தீர்க்கு மருந்திதுவே.

**பொருள் :—** பழைய செக்குலக்கை ஆகியவற்றைச் சிதைத்து நசுக்கிக் குழித் தைலப் பானைக்குள் வைத்து முறைப் படி குழித்தைலம் எடுத்து வெயில்புடம் வைக்கவும். அதில் கந்தகம், இரும்பு, இரசம் இவைகளின் பற்பங்களைக்கூட்டி (சொட்டுக்கணக்கில்) உள்ளுக்கும், மேலுக்கும் புயுன்படுத்தி வரப் பதினெண் குட்டங்களும் தீரும்.

## பெருவயிற்றுக்கு

தேற்றுங் கொட்டை யிலையரைத்துத் திருத்த னுகமஞ்சள் பொடி [செய்திட்
டேற்ற நெய்யில் வெந்திட்டங் கிதுநக்கப் பெருவயிறு கள்போஞ்
சோற்றுக் கஞ்சி னீராகிற் சொன்னேஞ் சுக்கைக் குடித்திடுக
தோற்றுப் போமேயிம் மருந்துக்குச் சொன்னேம் சொன்னேம் [சொன்னேமே. 606

**பொருள் :—** தேற்றுன் கொட்டை இலையை அரைத்து அதனுடன் மஞ்சள் தூளைக் கூட்டி நெய்யிலிட்டுக் காய்ச்சி உண்ணப் பெருவயிறுதீரும். சோற்றுக் கஞ்சித் தண்ணீரில் சுக்கை அரைத்துக் கலக்கிக் குடித்தாலும் பெருவயிறு தீர்ந்திடும்.

அழிஞ்சிப் பருப்புக் குழக்கனியு மரிய கெந்தக மிருகழஞ்சு
வளரு மிரதங் கழஞ்சரையும் வரிநெல் லிக்காய் பதின்கழஞ்சு
மழகெலு மிச்சம் பழச்சாற்றி லரைத்துக் குழைத்துப் பொடி [செய்து
பொழுது தேனில் விழுங்கிடுகிற் போயே போகும் பெருவயிறே. 607

**பொருள் :—** அழிஞ்சில் விதைப்பருப்பு, குழக்கனி, தூய தாக்கிய கந்தகம் இவை வகைக்கு இரண்டு கழஞ்சளவாகவும், இரசம் அரைக் கழஞ்சாகவும், நெல்லிக்காய்த்தூள் 10 கழஞ் சாகவும் சேர்த்து, எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து உலர்த்திப் பொடி செய்து தேனில் குழைத்துண்டுவரப் பெருவயிறு என்ற பிணி தீர்ந்திடும்.

## பெருவயிற்றுக்குக் கோழிக் கற்பம்

முருக்கங் கொழுந்துத் தமதாளி முண்டியாடா தோடை கழச்சி
எருக்கம் பருப்புநீர் மேல்நெருப்பு எருமைத் தாளாங் கொடிப் [பிரண்டை
குறுக்குஞ் சாரடை தைவேளை கொற்றான் மேனி பொடுதலையும்
நறுக்கிப் பிசைந்தொவ் வோருழக்கு நன்றுய்ச் சீலை வடிகொள்வாய்,

**பொருள் :—** பலாசின் தளிர், உத்தாமணி இலை, முண்டி இலை, ஆடாதோடை இலை, கழற்சி, எருக்கன்பருப்பு, நீர்மேல் நெருப்பு, எருமைத்தாளாங்கொடி, பிரண்டை, சாரடை, தை வேளை, கொற்றான், குப்பைமேனி, பொடுதலை, ஆகிய இவற்றை நசுக்கிப்பிழிந்த சாறு ஒவ்வோர் உழக்காகக் கூட்டி அதில்;

கொள்ளுஞ் சாற்றில் குக்குடத்தைக் குடல் காலிறகு தலைபோக்கி
உள்ளி யொருபலங் காயமரை யுப்போ ருழக்கு மதிற்புகட்டித்
தெள்ளுங் கடுக்காய் தான்றிக்காய் சிதள்பொட் டொவ்வொன்
[றிருபதிட்டு
விள்ளு மளவும் விரித்துதறி விழுந்ததை நீயெடுத் தரைப்பாயே.

**பொருள் :—** கோழியின்தலை, கால், வயிற்றிலுள்ள குடல், சிறகு முதலானவைகளை நீக்கிவிட்டு, அதன் வயிற்றில் பூண்டு ஒரு பலம், பெருங்காயம், ½ பலம், உப்பு ஓர் உழக்கு இம் மூன்றையும் போட்டுத் தைத்து மேற்படி சாற்றிலிட்டு அடுப்பேற்றி வேகவைக்கவும். சாறுகள் யாவும் சுண்டியபின் மேற்படி கோழி யின் எலும்புகளை எல்லாம் நீக்கிவிட்டு அந்த வெந்த மாமிசத் துடன், கடுக்காய், தான்றிக்காய், சிதல்பொட்டு இவை வகைக்கு 20 கழஞ்சு கூட்டி;

அரைக்குந் தசையி லெண்ணெயுழக் காவின் நெய்யு மவ்வளவிட்
டிரைக்க வறுத்துத் திரிகடுகொடி ந்தொ டெதிரி காரமுடன்
விரைக்குங் கடுகு சீரகமும் விரகாய் வறுத்துப் பொடிசெய்து
உரைக்கு மதனி லிவைதூவி யுண்பீர் வெருகடி வாயுவுக்கே 610

**பொருள் :—** அரைக்கும் பருவத்தில் எண்ணெயும், நெய் யும் ஒவ்வோர் உழக்குக் கூட்டி அரைத்து அதில் திரிகடுகு, இந்துப்பு, சவ்வியம், சித்திரமூலம், கண்டந்திப்பிலி, கடுகு, சீரகம் இவைகளை நன்றாய் வறுத்து இடித்து மேற்படி மருந்துடன் கலக்கி அளவுப்படி உண்டுவர வாயுவாலான பெருவயிறு தீரும்.

## இளநீர்க் குழம்பு

சுவநீ ரிளநீ ராவின்பால் துழாவி யேகாய்ச் சும்போது
யிருவே லிவெட்டி வேரோ டிலாமிச் சையின துவேரும்
தருவே சாந்தந் திரிபலையே கழுநீ ரேல முடன்வெந்து
கருகா மல்வடித் தேபின்னுங் காய்ச்ச மருந்து சொல்வோமே. 611

**பொருள் :—** ஆவின் பாலையும் இளநீரையும் சம அளவாகக் கலந்து காய்ச்சிடுக. அதில் உத்தாமணி, சித்திரமூலம், வெட்டி வேர், விலாமிச்சைவேர், சந்தனம், கடுக்காய்த்தோல், தான்றிக்

காய்த்தோல், நெல்லிமுள்ளி, செங்கழுநீர்க் கிழங்கு, ஏலம் இவைகளைச் சமஎடையாக எடுத்து முறைப்படி குடிநீர் செய்து முன் காய்ந்துவரும் இளநீர் ஆவின்பால் கூட்டில் கலக்கி அடிபிடிக்காமலும் பக்கங்களில்பற்றித் தீயாமலும் காய்ச்சி நீர்வற்றக் குழம்புப் பதமாக வரும்போது அதில் சேர்க்க வேண்டிய மருந்துகளைக் கூறுவோம்.

சொல்லு மிந்துப்பு துத்துங் கற்பூரம் பீத ரோணி
வல்லவேர்க் கொம்பு தேறு திப்பிலி மரிசன் மற்றும்
அல்லமர் குழலி ஞளே யவையவை கழஞ்சு கூட்டி
நல்லதேன் வார்த்த ரைக்க நாழிக்கே குழம்ப தாமே. 612

**பொருள் :—** இந்துப்பு, மயில்துத்தம், பச்சைக்கற்பூரம், பீதரோகணி, சுக்கு, திப்பிலி, மிளகு, தனித்தனி இரு கழஞ்சுத் தூள் செய்து மேற்படி குழம்பில் தூவிக் காய்ச்சிப் பதமாக இறக்கிக் கொண்டு கல்வத்திலிட்டுத் தேன்வார்த்தரைத்துக் குழம்பாக்கி வைத்துக் கொள்க.

குப்பைக் கீரை நாயுருவி யூமத் தங்காய் கதலிக்காய்
முப்புக் கொண்டு சாறடையும் ஒக்கச் சுட்ட பொடிதன்னை
ஒப்ப தோடேவடித் துக்காய்ச்சி உப்பை யெடுத்துத் தேய்த்தக்கால்
அப்பிக் கிடந்த மூலத்தை யறுத்துப் போடும் வேரோடே. 613

## மூலத்துக்குக் காரம்

**பொருள் :—** குப்பைக்கீரை, நாயுருவி, ஊமத்தங்காய், வாழைக்காய், சாரடை இவைகளைத் தனித்தனியாய் உலர்த்திச் சுட்டுச் சாம்பலாக்கி நீரில் கரைத்துவடிகட்டி காய்ச்சித் தனித்தனி உப்பெடுத்துச் சம அளவாகக் கலந்து மூலமுளை மேல் தேய்க்க மூலமுளை கரைந்து விடும்.

## சோபைக்கு விரேசனம்

கடுக்கா யெட்டு வாளமொன்று கருவஞ் சிவதை தானெட்டு
மிடுக்காய் நிலவாகை வேராறு மிளகி ரண்டு சுக்கொன்று
அடுக்கார் வெல்லந் தான்பத்து ஆன குமரிச் சாற்றரைத்துத்
திடத்தா லறிந்துவெந் நீரிற்கொளச் சோபை யேகும்
[விரேசனமே. 614

**பொருள் :—** கடுக்காய் 8 பங்கு, வாளப்பருப்பு 1 பங்கு, கருஞ்சிவதை 8 பங்கு, நிலவாகைவேர் 6 பங்கு, மிளகு 2 பங்கு, சுக்கு 1 பங்கு, வெல்லம் 10 பங்கு—சோற்றுக் கற்றாழைச்சாற்றால் அரைத்து உருட்டி வைத்துக் கொள்க. மனிதனின் திடமறிந்து வெந்நீரில் மேற்படி மருந்தைக் கொடுத்தால் கழிச்சலாகும். சோபை என்னும் நோய் தீரும்.

## அயபத்தியச் சூரணம்

திரிபலை திரிகடுகு வாய்விளங்கம் சிறந்த ஏல மிலவங்கம்
மறுவறு முத்தக் காசுடனே வண்மையான கராம் பூவும்
உறுபது சமனுய்ப் பொடிசெய்து முற்றச் சிவதை மூன்றுபங்கு
அறுமிகு தான்றிக் காயளவு ஆனசர்க்க ரையிற் கொள்ளே. 615

இந்தச் சூரணம் மதிகடைச் சூரணமென்றும் பெயர் பெறும், சர்வசுரமும் விடும்.

**பொருள் :—** கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், சுக்கு, திப்பிலி, மிளகு, வாய்விளங்கம், ஏலம், இலவங்கம், கோரைக் கிழங்கு ஆகியவற்றைத் தூள்செய்து சமஎடையாகக் கூட்டி, மொத்த எடைக்கு மூன்றுபங்கு சிவதை வேர்த் தூள் சேர்த்துத் தான்றிக்காயளவு சர்க்கரையுடன் உட்கொள்ளவும்,

## சீதபேதிக் குளிகை

மிளகரை கடுக்கா யொன்று மிகுந்தஆ மணக்கு ரண்டு
வளமிகு வாள மேழு வருநீலிச் சாற ரைத்து
உளமிகு பழத்திற் றேனி லுகந்தொரு வுண்டை கொண்டால்
அளவறு சீதம் போகும் ஆனதோர் குளிர்நீர் மோரே. 616

**பொருள் :—** மிளகு ½, கடுக்காய்த்தோல் 1, சிற்றுமணக்குப் பருப்பு 2, வாளம் 7 ஆகிய இவற்றை அவுரிஇலைச் சாற்றுலாட்டி மாத்திரையாக உருட்டி வைத்துக் கொள்க. எலுமிச்சம் பழச் சாற்றிலாவது, தேனிலாவது ஒரு மாத்திரை உட்கொண்டால் சீதபேதி நின்றுபோகும். குளிர்ந்த நீரும், மோரும் பத்தியமாம்,

## குக்குலாதிக் கிருதம்

மிக்க சீந்தி லாடாதோடை வேம்பு புடோல்கண் டங்காலி
தக்க எடையொன்றெண் பலங்கொண்டு தகர்த்திட்டுத் தூணி
[நீர்தன்னில்
ஒக்க வெந்திங் கொருநாழி யுரியொன் றதற்பின் னித்துடனே
நக்கு நெய்யு மிருநாழி நவின்ற கற்க மதுகொள்ளே. 617

**பொருள் :—** சீந்தில்தண்டு, ஆடாதோடை, வேப்பன் பட்டை, பேய்ப்புடல், கண்டங்கத்தரி, தனித்தனி எட்டுப் பலம் எடுத்து முறைப்படி நசுக்கி ஒரு தூணி நீரிலிட்டு, ஒரு நாழி உரியாக வற்றக் காய்ந்த கியாழத்தில் ஆவின்நெய் இரு நாழி கூட்டி அதில் சேர்க்கும் கற்கம் எடுப்பாயாக,

கொள்ளாய் கற்கங் கடுகுரோகணி கூறுஞ் சுக்கு விளாவிப்பூ
வில்ளா யதிவிடைய மஞ்சட்டி வெட்பாலே கோட்ட மோதக மும்
தள்ளாய் திப்பிலி மூலமுடன் தக்க ஏல மிலவங்கம்
கொள்ளாய் கழஞ்சோ றொன் றிவைதான் கொண்டால் குக்குள
[முப்பலமே. 617

**பொருள் :—** கடுகுரோகணி, சுக்கு, விளாவின்பூ, அதிவிடயம், மஞ்சிட்டி, வெட்பாலையரிசி, கோட்டம், அசமோதகம், திப்பிலிமூலம் (மோடி), ஏலம், இலவங்கம், குக்குலு (மைசாட்சி குங்கிலியம்) இவை வகைக்கு 3 பலமாகக் கொள்க.

கொண்ட கற்க மதுவரைத்துக் கூறும்பதத்தில் வடித்து நக்க
கண்டத் துள்ள விப்புருதி கடிய வேகமும் பிடிபாகம்
மண்டி யெழுந்த நோய்கள்பல வளரு முடலில் சிரங்குசொறி
மீண்டு போமொரு நாளையிலே விரும்பிச் செய்யீர் விரகுடனே. 618

**பொருள் :—** மேற்படி கற்கத்திற்குரிய பொருள்களை அரைத்துக் கலக்கி வடித்து உண்டுவரச் சிரங்கு, சொறி, முதலான நோய்கள் தீரும்.

## படர் தாமரைக்கு

கொன்றைக் கொழுந்து தகரைவிதை குழலா வரைவேர் குள
[விந்தம்,
மன்றத் துளசி திரிபலையும் மற்று மிலுப்பைப் புண்ணுக்கும்
ஒன்றக் கூட்டிப் பழமோரில் ஊறி யெடுத்தெலு மிச்சம்சாற்றில்
நன்று யரைத்துப் பூசியிட நாடா படர்தா மரைதானே. 619

**பொருள் :—** கொன்றைக் கொழுந்து, தகரைவிதை, ஆவாரைவிதை, மஞ்சள், துளசி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, இலுப்பைப் பிண்ணுக்கு, சமஎடையாகக் கூட்டித் தூள் செய்து பழைய மோரில் ஊறவைத்து எலுமிச்சைச் சாற்றால் அரைத்துப் பூசிட படர்தாமரை தீரும்.

## கடிவேகத்துக்கு

காலில்மிக்க கடிவேகம் பற்றிற்றென்று காலனுக்கிக் கிடந்தி
[டாதே
ஏலமொன்று மொளகு பத்து இலுப்பைத் தோல்பத் திதுபொடித்து
மேலுமெண்ணெ யிற்கலந்து வெய்யில்வைத்துக் காலமஞ்சு
[கடிகை சென்றால்
கலஞ்சாரித் துக்காலில் சொரிந்திடுகிற கடிவே கம்போம்
(மேலெழுந்து விரணங்கள் மயிற் கடிவேகம் விட்டோடிக் கடலில்
விழும்மெய்) சொன்னேமே. 620

**பொருள் :—** ஏலம் 1, மிளகு 10, இலுப்பைக்கொட்டை ஒடு 10. இவைகளைத் தூளாக்கி எண்ணெயில் கரைத்து வெயிலில் வைத்துக் கடிவாயில் தடவிடக் கடிவேகம் தணிந்து விடும்.

## புண்ணுக்கு எண்ணெய்

தேவதாளிக் கூட்டும் விரையும் திருந்தஎண் கழஞ்சுகொண்டு
மீவதான்றி முக்கழஞ்சு வெளிச்சைப் பிசினைங் கழஞ்சிவைதான்
யாவதரைத் தெண்ணெய் நாழியுரி யரைத்துக் கரைத்துப்
[பதத்தில் வடித்துத்
தூவப் பூச விப்புருதி முதலாம் விரண மவைதீரும். 621

**பொருள் :—** தேவதாளி, அதன் விதை தனித்தனி எட்டுக் கழஞ்சு, தான்றிக்காய்த் தோல் 3 கழஞ்சு, விளாம்பிசின் 5 கழஞ்சு, தூள் செய்து ஒரு நாழியுரி எண்ணெயில் கலக்கிக் காய்ச்சி வடித்துத் தடவிட விப்புருதி, விரணம் முதலியவை தீரும்.

## எலிகடிக்குணமும் மருந்தும்

தரதர வென்று முரத்திருக்கும் சற்றே வேர்க்கும் வலிப்பெடுக்கு
நீர்தான் மிகவுந் தாபிக்கும் நீறு வாயு மழன்றுவரும்
சோரு ரருகு வரவொட்டார் சோற்றைக் காதுஞ் செவிகேளார்
பாதா தைதார் மூலிதன்னைப் பாரீர் பகரீர் பகரெலிக்கு. 622

**பொருள் :—** உடலில் வியர்க்கும், வலி எடுக்கும், நீர் வேட்கை மிகும், நீர் அழற்சியும் வாய் அழற்சியும் காணும். உணவு சாப்பிடுவதில் எண்ணம் ஏற்படாது. உணவை வெறுக்கும். காது கேளாது.

எலியனுர் கடித்தா ராகில் எழில்படப் பூசும் பூச்சு
சிறுவுகாய் பிறங்கை நாறி-சிறியகத் தரியின் வேரும்
மிறுகிய வசம்பொ டுள்ளி மிளகுவ மெய்யில் நீரால்
பசைபட வரைத்துப் பூசப் படுமென எலிய னுரே. 623

**பொருள் :—** புறங்கைநாறி (கிருஷ்ணப்பாலை), சிறுவழுதுணைவேர், வசம்பு, பூண்டு, மிளகு இவற்றை நீர்விட்டரைத்து எலிகடித்த இடத்தில் பூச எலிக்கடி விட வீறு தணியும்.

புனத்தினில் முசுட்டை வேரும் பூனையி னெச்சங் கள்ளி
எருக்கிலைப் பாலுந் தேவ தாளியும் பச்சை நல்ல

நிலத்தினில் பாம்பு மீசன் மூலியுங் கோபம் வேலிப்
பருத்தியின் சாறு கூட்டிப் பசையற யரைத்திட் டெண்ணெய்
நெருப்பினில் வெந்து நக்க நிலைநில்லா எலியின் நோயே. 624

**பொருள் :—** முசுட்டைவேர், பூனையின் எச்சம், கள்ளிப் பால், எருக்கிலைப்பால், தேவதாளி, பச்சைப்பாம்பு, ஈசுரமூலி, இந்திரகோபம், ஆகிய இவற்றை வேலிப் பருத்திச்சாற்றால் அரைத்து எண்ணெயில் கூட்டிக்காய்ச்சி வடித்து அளவுப்படி சாப்பிட்டு வர எலிக்கடி விடம் தீரும்.

### சகடுக்கு நெய்

சுக்குதிரி பலைமிளகு தேவதாரம் சுருதிவா லுளுவைவிழா
[லரிசியொடு
மிக்ககடு சிவதைவேர் நெல்லி மிளகிந்துக் கொண்டுசங் கங்குப்பி
ஒக்கவிவை வேரோரொன் றுநாற் கழஞ்சுகூட்டி யுறுபிரமிச் சாறு
[நாழிகூட்டி
பக்குவத்தில் நாழிநெய் வெந்திறக்கப் பதறிப்போங் கசடுபத்தி
[மிகுதியாமே. 625

**பொருள் :—** சுக்கு, திரிபலை, தேவதாரம், வாலுளுவை அரிசி, விழாலரிசி, கடுக்காய் சிவதைவேர், நெல்லிமுள்ளி, மிளகு, இந்துப்பு, இசங்கு, இவை தனித்தனி நாலு கழஞ்சுவீதம் கூட்டி, பிரமிச்சாறு ஒரு நாழியும், பசுவின்நெய் ஒருநாழியும், கூட்டிக் காய்ச்சிப் பக்குவத்தில் வடித்துப் பயன்படுத்தக் கசடு நீங்கும்.

முத்தக் காசு பெருமரத்தோல் முந்திரி கைப்பழம் லவணம்பால்
வித்திர சூதம் நாவல்வில்லை வேரிற் பங்கம் பாளையிவை
கொத்துத் தாக்கி யிலுப்பையிதள் கொற்றுன் சுண்டி கூவிளம்பிஞ்
சத்தி விளாம்பிசின் வெட்பாலை யாரம் பெருங்குமிழ் அதிவிடையம்.

**பொருள் :—** கோரைக்கிழங்கு, பெருமரப்பட்டை, திராட்சைப்பழம், உப்பு, பால், மா(வின்ஐந்து அங்கங்கள்), நாவல், (இதன் ஐந்து அங்கங்கள்), வில்வம் (இதன் ஐந்து அங்கங்கள்), தேற்றுன்வேர், ஆடுதின்னாப்பாளை, இலுப்பை மரப்பட்டை, கொத்தான், சுக்கு, வில்வப்பிஞ்சு, விளாம்பிசின், வெட்பாலை, சந்தனம், பெருங்குமிழ், அதிவிடயம்.

குறிப்பு :— மேற்படி சரக்குகள் யாவும் வயிற்றுப் போக்கைக் கட்டவல்லவை. இப் பாடலுக்குப் பின் பாடல்கள் ஓலையில் பதிவு செய்தவர்க்குக் கிடைக்கவில்லை என்று தெரிகிறது. ஆகையால்

இவற்றைக் கொண்டு என்ன செய்யலாம் என்பற்து நூலில் விடையில்லே. ஆனுல் பண்டிதம் அறிந்தவர்கள் மேற்படி சரக்குக் கூட்டால் சமயோசிதம் போலக் குடிநீர், சூரணம், நெய் போன்ற கூட்டு மருந்தொன்று செய்து நோயாளிக்கு உதவலாம்.

## நஞ்சுக்கு நஞ்சு முறிவு
## (விஷத்துக்குப் பிரதிவிஷம்)

எட்டிக்கு நாவல்எழில் சுக்குமரு தோன்றிக்கு
வட்டவிலேத் தாமரையூ மத்தைக்குத்—திட்டமுடன்
ஆவரையே கள்ளிக் கலரிக் கணிகடுக்காய்
மேவிய நெய்தேனுக்கு வெந்தகரி—பாவலர்காள்
எள்ளொடு சர்க்கரையும் சொன்ன ரெருக்கிலேக்குக்
கொள்ளொடு வைக்குங்கழு நீர்பசரி—வெள்ளே
சங்கம் பழங்கழுதை வண்டுக்குநெஞ் சேவசங்
கொள்ளு நீற்றுக்கு மஞ்சள்—அசங்காமல்
போற்றுந் தயிர்நாவ லுக்கும் புளியெண்ணெய்
காற்றில்லா நெல்வேருங் காடிக்குத்—தேற்றமுடன்
மதுரமிலா மிச்சம் வகையாக வேகுடிக்கில்
கூத்துவிடந் தீர்ந்து குணமாகும்—மேற்றுஞ்
சிறுகுறிஞ்சா மாற்ருகும் தின்பேய்ப்பீர்க் குண்ணில்
உறுதியிலா முத்தக்கா சென்பன்—உறுதியாம்
குன்றிக்கு ஆலின்வேர் கொடும்பச்சை நாவிக்கு
வென்றிவெண் காரம் விடந்தீர்க்கும்—பொன்று
சிவதைக்கு வெள்வேல் செழுபாசா ணத்துக்கு
அவனிதனில் நிருவிடமே யாகும்—பலவிடமும்
நீலிக்கும் பண்பாகத் தீரும்—பலமருந்துக்
கெல்லாம் பகரில்மிளகுமிள வெந்நீரி
லீனமறுகாடி யிரண்டதனி லேவேண்டும்-
ஊனமுற வேகொள் ளூற்று. 627

**பொருள்:**— எட்டி நஞ்சுக்கு முறிவு நாவல்பட்டைக் குடிநீராகும். மருதோன்றி (ஐவனம்) நஞ்சு சுக்கால் முறிந்து விடும். ஊமத்தைக்குத் தாமரை. கள்ளிக்கு ஆவாரை. அலரிக்குக் கடுக்காய். நெய்தேனுக்கு அடுப்புக்கரி. எருக்கிலேக்கு எள்ளும் சர்க்கரையும் கூட்டிய யோகம். கொள்ளொடு கழுநீர்க்கிழங்கு உண்ட நஞ்சுக்குப் பசலேக்கீரை. கழுதை, வண்டுகடி நஞ்சுக்கு வெள்ளேச் சங்கம்பழம். சுண்ணும்புக்கு மஞ்சள். தயிருக்குப் புளி. நாவலுக்கு எண்ணெய். நெல்வேருங்காடிக்கு அதிமதுரமும், விலாமிச்சை வேருங்கூட்டி முறைப்படி காய்ச்சிய குடிநீர். பேய்ப் பீர்க்குக்குக் சிறுகுறிஞ்சானும், கோரைக்கிழங்குமாம். குன்றிக்கு ஆலின்விழுது அல்லது வேர். பச்சை நாபிக்கு வெங்காரம்.

சிவதைக்கு வெள்வேலன்பட்டை. பாடாணத்துக்கு நிர்விடம். பலவிடங்களுக்கு நீலி. பற்பல மருந்துகளின் நஞ்சுக்கு மிளகை வெந்நீரில், காடி இரண்டில் கொள்ள நஞ்சு முறியும்.

## நோய் வகை விவரம்

பெருகிய கழுத்துப் பிராண தாரையில்
மருவிய வியாதியை வகையுறச் சொல்வேன்
உச்சியில் வாதம் ஒருத் தலைநோவு
முச்சியிற் பொடுகு முதிர்ந்திடு சூலை
சூரிய வாதஞ் சுழற்பு ழுவெட்டு
பாரிய கடிவகம் பக்கமிற் கடிவகம்
சந்திர ரோகம் தலையழி சூலை
இந்த விதத்தி லெழுவிரி ரோகம்
கன்ன சூலை கன்னவிப் புருதி
நாசிகா பீடம் நாசியா கிருத்தியம்
துட்டப் பீனிசம் தோடப் பீனிசம்
மட்டுறு நாசி வருனசி மந்தம்
அழுகல் நாற்றம் அந்தரிய நாற்றம்
முகத்தில் பருவும் மூக்கினிற் பருவும்
செவிதனில் நோவு திகழ்முக ரோகம்
செவிதனில டைப்பி சிவாய வெழுச்சி
அக்கிர ரோகமா யிருதய பாகஞ்
சுக்கிர ரோகம் சொல்பாக விரணம்
அன்ன கோபம் அருணதி மந்தம்
தென்னதி மந்தம் திமிரம் படலம்
சுரூபசெல ரூபம் சுழல்கண் கட்டியும்
பருவு முத்திப் பாகநீர்ப் பாய்ச்சல்
மாலைக் காசம் வரும்வால காசம்
வாத காசம் வரும்பித்த காசம்
நீல காசம் நீரொழி காசம்
குமரி காசம் குவளைகண் பிரிதல்
செவ்வேர் படர்ச்சி சிறந்த பில்லம்
பரம ரோகம் புகரனற் சுக்கிரன்
பெருபொய் யாசல் சிறுபொய் யாசல்
தந்த ரோகம் தந்த சூலை
தந்த வாதம் தந்த அற்புதம்
பல்குத்துப் பல்லர ணைபல் கோவை
நாவில் தடித்தல் நாவில் கிரந்தி
நாவில் புற்று நாவில்விப் புருதி
கழுத்திற் சுத்திய தோர்கண்ட மாலை
மற்றும் வியாதி வர்க்கம் பலப்பல. 628

**பொருள்:—**உயிர்ப்பின் பெருவழியாகிய கழுத்தும், அதற்கு மேலுமான இடங்களில் தோன்றும் நோய்களை வகையாகக் கூறுவேன்: உச்சிவாதம், ஒற்றைத்தலைநோய், தலைப்பொடுகு, முசிற்சூலை, சூரியவாதம், தலைச்சுழல், புழுவெட்டு, பாரிய கடிவகம், பக்கமிற்கடிவகம், சந்திரரோகம், தலையழிசூலை இவை போன்று ஏழாக விரித்துக் கூறப் பெற்ற சூலைநோய்கள்; கன்ன சூலை (காது), கன்ன விப்புருதி, நாசிகபீடம் (மூக்கின்நோய்), நாசியாகிருத்தியம், துட்டபீனிசம், தோடப்பீனிசம், மட்டுறுநாசி, நாசிமந்தம், அழுகல்நாற்றம் (மூக்கில்), அந்தரியநாற்றம் (பிண வெடிநாற்றம்), முகப்பரு, மூக்குப்பரு, செவிநோய், முகரோகம், செவியடைப்பு, செவியிசுவுடன் கூடிய எழுச்சி, அக்கிரரோகம் (கண்ணில் காண்பதென்பர்), இருதயபாகம் (இதயத்தைச் சார்ந்த இடத்தில் எரிவுகாணல்), சுக்கிரரோகம், அன்னகோபம், அருணதி மந்தம், தென்னதிமந்தம், திமிரம், படலம், சுருபசெலரூபம், கட்சுழல், கண்கட்டி, பரு, முத்திப்பு, நீர்ப்பாய்ச்சல், மாலைக்கண், கண்காசம், வாலகாசம், வாதகாசம், பித்தகாசம், நீலகாசம், நீரொழிகாசம், குமரிகாசம், குவளைக்கண்பிரிதல், செவ்வேர்படர்ச்சி, பில்லம், பரமரோகம், அனல்சுக்கிரன், பெருபொய்யாசல், சிறு பொய்யாசல், தந்தப்பிணி, பற்சூலை, பல்வாயு, தந்தஅற்புதம், பல்குத்து, பல்லரணை, பல்கோவை, நாவின் வீக்கம் (தடிப்பு), நாக்கிரந்தி, நாப்புற்று, நாவிப்புருதி, கழுத்தைச்சுற்றிக் கண்ட மாலை இவையன்றி மற்றும் பற்பல பிணிவகையுண்டாம் என்க.

### கழுத்துக்குக் கீழ்ப்பட்ட நோய் விவரம்

சீரிய கழுத்தின் கீழுள்ள பிணியைத்
தீர்வ தறிந்து திசைபெறச் செப்புவேன்
பாரிய கடியும் பரிசில் பிளவையும்
பெருகிய கெண்டை பெருத்தெழு கவுசையும்
இருமலுந் தும்மலும் ஈளையும் வளமாய்
நீருள் மிகுந்து நிறைந்தெழு கோவையும்
பாரொடு மொழியெனப் பரந்தெழு சூலையும்
தன்னினை வின்றித் தவிக்கும் பித்தமும்
உண்ணினை வன்றியே உயர்ந்தெழு வாதமும்
பின்முன் னறியாப் பேதையைப் போலவும்
மறக்க முறக் காட்டி மகத்தான மய்யும்
சொன்னது மறியாத துனிச்சிச வலியும்
மிஞ்சிய தோடமும் மெய்யுறு குன்மமும்
அஞ்சிய ஆமைபோ லழற்பீலி கையும்
துஞ்சிய நழுவையும் துகைப்பெரு வல்லையும்
மிஞ்சிய வாயுவு மிகுகி ராணியும்

துன்னிய மற்றசத் தொத்திய மூலமும்
பேருல கறியப் பெருத்த மகோதரம்
பெருவயி றுனதும் பித்த பாண்டுவும்
பெருநீர் செருகி வருநீ ரடைப்பும்
மந்தார காசம் மத்தமாய்ச் சரீரமும்
சிந்தார் தாகம் திடகைகால் எரிப்பும்
சித்திர கன்னம திடுக்கிடும் விக்கல்
அருசியும் காச சுவாச முந்தியற்
பிரமே கத்துடன் ஈளையும் மகாசீத
காசமும் மதிசோ ணிதமும் எடுக்கின்ற
வேண வாயசுடன் முயங்கிய மயக்கமும்
முடுதலை நணைத்த உளச்சோம ரோகமும்
மடவது சொன்ன மரணப்பிர மேகமும்
உதிரட் சயமும் உயர்ந்தநீர்க் கடுப்பும்
கண்டந் தன்னிற் கவிந்த அடக்கமும்
அண்டத்தில் வாயுவும் அமைந்த சூலையும்
உந்தியிற் பற்றிய உட்டணந் தன்னால்
வந்திடும் சலமது வகைபதி னெட்டும்
மேலா யிருபதும் சுப்பிர மேகமும்
நாலாறு விதமாய் நாடிய பித்தமும்
மந்தாக் கினியும் மதுமுறு வேர்வையும்
சுக்கில மழிந்திடத் தோன்றிய மலமே
இந்நிலந் தன்னில் எண்பது வாதமும்
சன்னி விதங்கள் தான்பதின் மூன்றும்
விறப்பந் தன்னில மிகுமருத் தீடும்
அறப்பத் தியநோ யழுகிய காலும்
பத்தோ டெட்டுப் பற்றிய குட்டமும்
மத்தொ டூர்வட் டழுகிய சிலந்தியும்
படுவான பவுத்திரம் பரந்த தாபனம்
முடிவின் வெளியா மூலத்தின் கூறும்
ஒண்ணுதல் கூனலும் யோனி சூலையும்
எண்ணிய மாறலும் எழுந்த சுரங்களும்
கண்ட மாலை கலந்தொளி மறைத்தல்
மிண்ட தடுக்கல் மமற்சர மாலையும்
வாந்தியும் பிராந்தியும வால காசமும்
எலிக்கடி யுடனே யிரைத்தலு மிளைப்பும்
நால்வகை யால்வரு கரப்பன் விதங்களும்

இவ்வகை மூன்று கரப்பன் சிலந்தியும்
ஆக மிரண்டு மழுகிய குருவும்
மிகுபணை யெந்திர விடபாக விதங்களும்
துருதொடை வாழை தன்னங் கபடிகை
புருட கிரந்தி புரைவிப் புருதி
பூதலந் தன்னில் பொத்திய பிளவை
சீதரு வூனலும் சீறியவா ளத்தியும்
தப்பாணி யானதுந் தருநெருப் பேதமும்
ஒப்பாரு மில்லா ருண்ணதல மேனியும்
அந்தி ரீயமது வாகாத தோடமும்
சந்தத மரிக்கநந் தருண சூலையும்
தகையறு சுமைகளாற் சரிந்த வாயுவும்
உசளறு மாளியொ டுதனுர் வாதம்
கோவையின் வாதம் கூரெலும் பாடல்
ஆரு மாதங்கம் அடைவிது தானே. 629

**பொருள் :—** உயர்ந்த கழுத்திற்குக் கீழ் உள்ள பிணிகளின் தீர்வனவற்றையறிந்து இடம் நோக்கிக் கூறுவேன் : பெருத்ததான கடிகள் (குருதியின் கேட்டால் விளைவது), பிளவை, கெண்டை (வயிற்றில்), பெருத்துத்தோன்றும் கவுசை, இருமல், தும்மல், ஈளை, நீர்க்கோவை, சூலை, நினைவுஒழியும் பித்தநோய், வாதப்பிணிகள், பேதைமை என்ற நோய், மறத்தலைச்கொடுக்கும் ஐயப்பிணிகள், கூறியதை யறியாத சிசவலி நோய், அளவுக்கும் இடத்துக்கும் விஞ்சி அதிகரித்த தோடப்பிணிகள், குன்மம், ஆமைபோல் வளர்ச்சி பெற்று அழற்சி கொண்டுள்ள பிலீகைநோய், நமுவை, வல்லை, மீசுர வாதம், அதிகமாய்ப் போக்கவல்ல கிராணி, நெருக்கமான தீக்குணம் பொருந்திய மூலப்பிணி (எருவாய் முளைநோய்), பெருவயிறு (மகோதரம்), பெருத்தவயிறு, பித்தபாண்டு, நீர்ச் செருகல், நீரடைப்பு, மந்தாரகாசம், உன்மத்தம், எரிவு, நீர்வேட்கை, திடமுள்ள கையும் காலும், எரிவுகாணல், சித்திர கன்னம், அச்சத்தைத்தரத்தக்க விக்கல், சுவைகாணமாட்டாமை, இருமல், மூச்சு, பிரமேகம், ஈளை, மகாசீதகாசம், மாதாமாதம் வரத்தக்க வீட்டுவிலக்கின் நோய்கள், மயக்கம், சோமரோகம் மரணப்பிரமேகம், உதிரட்சயம், நீர்கடுப்பு, கழுத்தின் பாதை மூடிஅடைப்புநோய், அண்டவாயு, சூலை, உந்தியில் கண்ட அழற்சியால் காணும் பதினெண் வகை நீர்ப்பிணி, இருபது வகைப்பிரமேகம், இருபத்து நாலுவகைப் பித்தப் பிணிகள், பசிக்குறைவு, வெறி கொண்டது போன்ற வியர்வை ஒழுக்கு, சுக்கில அழிவு, எண்பது வகை வாதப்பிணிகள், பதின் மூன்று

வகைச்சன்னிகள், மருந்தீடு செய்த‌தால் காணும் நோய்கள், பத்தியம் (அறுந்ததால்) கெட்டதால் கண்டநோய்கள், காலமூகல், பதினெண் குட்டப்பிணிகள், அழுகியசிலந்திகள், பவுத்திரம், தாபனம், முடிச்சைப் போல மூலம் வெளிப்படல், கூனல், யோனிசூலை, மாறல் சுரங்கள், தோடமாறுபாட்டால் தோன்றிய சுரங்கள், கண்மாலை, கண்ணொளி மறைத்தல், கக்கல், மூர்ச்சை, பாலகாசம், எலிக்கடி, அதன்காரணமாய் இரைப்புண்டானநோய், என்புருக்கி நோய், நான்குவகையாய்த் தோன்றும் கரப்பன், மூன்று விதமான கரப்பன், சிலந்தி, அழுகியதான ஒருவகைக்கட்டி, பருத்தஇயந்திரங்களால் காணத் தகும் நோய்கள், விடபாகநோய்கள், தொடைவாழை, கபடிகை, ஆண்கிரந்தி, புரை, விப்புருதி, பிளவை, சீழ்தரு ஊனல், வாளத்தி, தப்பாணி, நெருப்பால் விளைவதான குற்றங்கள், தமக் கொப்பில்லை என்று மிக்க உணவு உட்கொண்டும் உடல் (பெருக்காமல்) கீழ்ப்பட்டுப் (இளைத்துப்) போகும் உடல்நோய் (அதலம் என்பது கீழ் உலகம் ஏழில் ஒன்று), குடலுக்கு ஒவ்வாதபொருளை உட்கொண்டதால் குடலில் தோடமேற்பட்டு அதனுல் கண்ட தோடப்பிணிகள், எந்நேரமும் செல்லரிப்பது போல உடலுக்கு ஊறுசெய்யும் சூலைநோய், இடம்விட்டுப் பெயரா வண்ணம் (ஒரு ஆளை) செய்விக்கும் நோய், தனுர்வாதம், சிற்றென்புக்கோவை என்னும் மூட்டில் காணும் வாதப்பிணி, எலும்பு நிலையாய் இராமல் ஆட்டங்கொள்ளும் பிணி, யாவர்க்கும் காணத்தக்க நோய்களின் விவரம் இதுவாம்.

வானின் பொன்னில் வரையது தன்னில்
ஈன்றிடு முலகை யேகபரா பரம்
மொழிந்த மறைநூல் முறையின் படியே
தெளிந்த குறுமுனி செப்பினன் புவியில்
பண்டு முன்செய்த பாவ வினையால்
கொண்டிடு நோய்தான் குணமது தானும்
நாலா யிரத்தின் நானூ றதனின்
மேலா நாற்பத் தெட்டு வியாதியும்
பூவுல கதனிற் பூண்டிடும் பிணிகள்
மேவுமுன் னூற்படி விவர முரைத்தார்
சுரமது தானும் தோன்றிடு நாற்பது
உர்முள சன்னி ஒர்பதின் மூன்று
மதுத்திடுந் தோட வகையது மேழு
அதிர்த்திடு மெய்யை அதிசார மாறு
ஆகச் சுரந்தா னறுபத் தாறும்
மேக மிருபதின் மேலே யொன்று

பலத்தை யழித்திடும் பாண்டினி லொருபது
குன்ம மெட்டுக் குட்டமீ ரொன்பது
வன்ம மான வலியிரு நாலு
மூலம் நூறு மூண்டிடு மெய்யில்
சூலை தன்னில் சூழ்ந்திடு மிருபது
வாதந் தன்னில் வகுத்திடு மெண்பது
மீதே பித்தம் வீழ்ந்திடு நாற்பது
சேற்று மத்தில் சேர்ந்திடு நூறு
ஆற்று மத்தில் அணுகிய ரோகம்
ராச நோவில் நவின்றிடு மாறு
காச மெட்டு கடுமூச் சொன்பது
சிரமது தன்னில் சேர்ந்திடு நோய்தான்
இருநூற் றிருபது என்றே விளங்கும்
தோன்றிய விழியில் தொண்ணூற் ருறு
ஏன்றிடுஞ் செவியில் இருபத்து மூன்று
வாசம் புரியும் வளர்ந்திடு நாசியில்
நேச முடனே நிறைந்திடு மிருபது
துடியது தன்னில் தோன்றிடு மிருபது
வடிவுள வாயில் வருபிணி யெழுபது
தந்தந் தன்னில் சாற்று மிருபது
வந்திடு மெயிறில் வருபதி னறு
நாவது தன்னில் நாற்பத் தொன்பது
மேவு சிறுநாவில் விளங்கிடு மாறு
தொண்டை யதனில் சூழ்ந்திடும் பிணிகள்
கண்டம் வரைக்கும் கழறுநூற் றிருபது
ஓங்கிய தோளி லோர்பதி னெட்டுத்
தாங்கிய மார்பில் தரித்த மூவேழு
இருதயந் தன்னி லிருபத் தொன்று
தருமலந் தன்னில் சாற்றிடு மேழு
குடலினில் மூன்னூற் றிருபது குறியா
மிவடஞ் சிறுகுட லிருநூற் றிருபது
நாவியைச் சூழ நவின்றமுன் னூற்றின்மேல்
கோவிய மாகக் குறித்திடு மிருபது
நடுவிலீ ரெட்டு நறுதம் ஒன்பது
குய்ய மதனில் குறித்திடு நூறு
மெய்யு மண்டை விணபதி னைந்து
அந்திர மாறு அற்புத மஞ்சு
யந்திரி யிந்தி லிருபத் தாறு
மூலா தாரத்தில் மூன்றெட் டாகும்
மேலாய்ப் பவன மீதினில் நாற்பது

தொடையது தன்னில் தோன்றிடு முப்பது
நடையெனு முழந்தாள் நாலைந் தென்னும்
அடியது தன்னி லறுபத்து மூன்று
மூளையைப் பற்றி முந்நூற் றறுபது
கோளை யெலும்பில் கொண்டது நூறு
நரம்பது தன்னில் நாடி யிடும்வினை
சிரந்தாள் வரைக்கும் சிறந்திடும் விதங்கேள்
இருநூற் றிருபத் தெட்டுநோ யென்னும்
பருவமாங் கிஷத்தில பற்றிய ரோகம்
துருவமாய் மூன்றெழு விதமா மென்பார்
நறுசோ தரத்தில் ரெண்டுநூற் றைந்து
தசைதனில் வந்து தரித்திடு மெண்பது
பசையு முரோமம் பற்றிடு முப்பது
ரணநோய் தன்னில் ரண்டுநூ றதன்மேல்
ஆனவுட னம்பத் தொன்பதா மென்ன
இவ்வகை சூழ விருந்திடும் பிணிகள்
கவ்வியமா யின்னங் கூடிடும் விவரங்
கடிவிட மதனில் கருதுநூற் றறுபது
செடிவிட மதனில் சேருநூற் றிருபது
விலங்கினத் துக்கு விடுத்தார் புவியினிற்
கலங்கிடு மிருநூற் றைம்பத் தேழு
தோன்றும் பறவையில் தொண்ணூற் றுறு
ஊன்றிடு மேனத்தி லொருபதி னெட்டு
சலத்தில் வளர்ந்த தாபரந் தனக்கு
முலத்துடன் வினைதான் முப்பத்து நாலு
கூடிய தொகைதான் குவலயந் தன்னில்
நாடிய நோய்தான் நாலா யிரத்தி
நானூற் றதன்மேல் நாற்பத் தெட்டு—(வியாதியுங்)
கால னூர்க்குக் கதித்த பெரும் படை
பாரபரஞ் செய்யும பார்தனில் மாந்தர்
மேலே கோபிய மாகிநிற் பார்கள்
அங்கிட மதனில் அடைந்து வளர்ந்தது
எங்கும் பரவி எழும்பிடும் வினைக்கு
ஆற்றும் சுரதமாய் அரும்பொருள் பதத்தைப்
போற்றிடப் பிணிபோய்ப் புனிதரா வாரே. 630

**பொருள் :—** உயர்ந்த பொன்மலையில் உலகை உண்டாக்கிய ஒருவனாகிய பரம்பொருள் கூறிய உண்மை விளக்க நூலாம் மறைகூறிய முறைப்படி அகத்தியர் உணர்ந்து உலகோர்க்கு கூறினர். அதாவது, முற்காலத்தில் (முற்பிறப்பில்) செய்ததான

பாவ காரியங்களால் பெற்றிடும் நோய்களும் அவைகளின் குறிகுணங்களும் (அறிய வேண்டின் அவை). நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு (4448) நோய்களாம் என்று முன் கூறிய நூலின்படி விவரத்தைக்கூறினர். சுரம் 40, சன்னி 13, தோடவகை 7, அதிசாரம் 6, ஆகமொத்தம் 66. மேகம் 21, பாண்டு 10, குன்மம் 8, குட்டம் 18, வலி 8, மூலம் 100, சூலை 20, வாதம் 80, பித்தம் 40, ஐயம் 100, இராசரோகம் - 6, காசம் 8, வேகமாக இயங்கும் மூச்சுநோய் 9, தலையில் தோன்றும் நோய்கள் 210, விழி நோய்கள் 96, கேட்கும் காதில் 23, நாற்றத்தை உணரும் மூக்கில் 20, துடியில் 20, வாயில் 70, பற்களில் 20, பற்களின் ஈறில் 16, நாவில் 49, சிறுநாவில் (உள்நாக்கு என்னும் உறுப்பு) 6, தொண்டை என்னும் உறுப்பில் கழுத்துவரை 120, தோளில் 18, மார்பில் 21, இதயத்தில் 21, மலத்தில் 7, குடலில் 320, சிறுகுடலில் 270, உந்தியைச் சுற்றி 320, இடையில் 16, நறுதத்தில் 9, குய்யத்தில் (கீழ் வாயும் அதுசார்ந்த இடமும்) 100, மண்டைவினை 15, அந்திரப் பிணி 6, அற்புதம் 5, யந்திரியங்களில் 26, மூலாதாரத்தில் 24, பவனமீதில் 40, தொடையில் 30, முழந்தாளில் 20, பாதத்தில் 63, மூளைநோய் 360, எலும்பில் 100, நரம்புகளில் 228, இறைச்சியில் 21, குருதியில் 205, தசையில் 80, மயிரில் 30, இரணநோய் 200, உடலில் பொதுமையான நோய் 59, கடிவிடத்தில் 160, செடி (மூலிகை) விடம் 120, விலங்கினத்துக்கு 257, பறவையில் 96, கருவியால் 18, நீரில்வளரும் செடியின் மூலத்துடன் 34, இவையாவும் கூட்டிய தொகைதான் 4448 நோய்களாம். இது நமனுக்கு என்று பெருகிப் பல்கிய பெரிய சேனையாம். இதிலிருந்து விடுதலை பெற அரும்பொருள் திருவடி பணிய அழுக்கறுப்பார்.

## நீர்க்கழிச்சலுக்குக் கலப்புத்தூள்

ஓரரைக்கால் மரமஞ்சள் ஈரரைக்கா லிலவம்பிசின்
இருபத் தரைக்கா லாவா ரைப்பொடி
தேரரைக்கால் கடலரைக்கால் தேன்வார்த்துக் குழைத்துண்பீரேல்
நீரரைக் காலும் வாராது நெடுமா லாணை நிச்சயமே. 631

**பொருள் :—** கஸ்தூரிமஞ்சள் ரு நிறை; இலவம்பிசின் இரண்டுநிறை; ஆவாரைவேர்ப் பொடி இருபதுநிறை; விடத் தேரிலைப் பொடி ஒருநிறை; கடல்நுரை ஒரு நிறை; இவ்வாறு குறையாமலும் ஏறுமலும் நிறுத்துச் தூள் செய்து ஒரு கலத்தில் வைத்துக் கொண்டு காலை, மாலை இரண்டு நேரமும் நேர

மொன்றுக்கு வெருகடி அளவு தேன் வார்த்துக் குழப்பி விழுங்கவும்; நீர்க்கழிச்சல் தீரும். இது கைகண்டது. பத்தியம்: கைப்பு, புளிப்பு நீக்கவும்.

### உடம்பு நாற்றத்துக்கு

முத்தக் காசு குளவிந்தம் மூன்று கடுக்காய் பிடிமிளகு
மெத்தக் கூட்டிப் பசுவின்நெயில் வேக வைத்துக் கொள்வீரேல்
மத்தத் தானைப் பலமுண்டாம் வாணு ளுண்டாம் வலுவுண்டாம்
கத்த நாறு முடம்பெல்லாங் கழுநீ ராகுங் கண்டீரே. 632

**பொருள் :—** கோரைக்கிழங்கு, கப்புமஞ்சள், மூன்று கடுக்காய்களின் மேல்தோல், மிளகு ஒருபிடி (பிடி= 1 பலம் (அல்லது) 3 ரூபாய் எடை). இவைகளைத் தனித்தனியாகத் தீயாமல் செம்மையுறப் பசுவின் நெய்யில் வறுத்துத் தனித்தனியே இடித்துப் பொடியாக்கி முறைப்படி உண்டு வந்தால் மதயானையின் வலு உண்டாகும். வாழ்நாள் நீண்டுவரும், உடல்வலிமை உண்டாம். கற்ருழை மணம் உள்ள உடலில் (அ) சிறுநீரில் அந்நாற்றம் போய்ச் செங்கழுநீர் மலரின் நறுமணம் உண்டாகும்.

### வாயுவுக்குக் கலப்புத்தூள்

சீரிய ரிருவரும் சிறந்த மூவரும்
கூரிய ஓருவரும் கொடிய காயமும்
ஆரிய வடகலை அசமதா கமுமிது
நேருடன் கூட்டியே நித்தலுங் கொள்வீரேல்
நேரெழு வாயுவும் ஓடுநிச் சயந்தானே. 633

**பொருள் :—**கருஞ்சீரகம், நற்சீரகம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகு, ஓமம், பெருங்காயம், கடுக்காய், இவை ஒன்பது மருந்துக்கும் பெருங்காயம் புறம்பாய் மற்றமருந்துகளைப் பொன்னிறமாக வறுத்துக் கொண்டு பெருங்காயமுங் கூடக் கூட்டியிடித்துச் சீலைவடிகொண்டு ஒருகலசத்தில் வைத்துக்கொண்டு நாளும் வெருகடி கொள்ளவும். வாய்வுகளெல்லாம் தீரும்; கைகண்டது.

### பெண்ணை வயப்படுத்த

தட்டான் கொட்டோசை பழம்போக்கி கழஞ்சு
தமரகத்தின் ஒலிகழஞ்சு பூரோசினை கழஞ்சு
கொட்டாவி வேர்கழஞ்சு இட்டிறுக்கி கழஞ்சு
கோரோசினை கழஞ்சு குன்றிமணி கழஞ்சு

மட்டாருங் குழலாளை வசமாக்க வேண்டி
மாகேந்திரியந் தன்னுடனே யேகாந்தங் கூட்டிப்
பொட்டாக இட்டெதிரே வந்துநின்று செல்லப்
பொரிகுழலாள் கற்பழிந்து போவ ளிதில்தானே. 634

**பொருள் :—** பேய்ப்புடோல்விரை, சங்கம்விரை, இரும்பரப்பொடி, நாய்ப்பாகல்வேர், நல்லெண்ணெய், கோரோசனை, குன்றிமணி விதைப் பருப்பு, இந்திரிய மென்கிறது, சூதம் ஆக ஒன்பதும் நல்லெண்ணெய் விட்டு அரைத்துக் கூட்டவும்.

**குறிப்பு :—** இது ஒரு வகையான பொருள்; வேண்டுவோர் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

நண்ணுங் கண்ணுக் கினியானும் நரையுந் திரையு மில்லானும்
எண்ணும் நாவுக் கினியானும் எல்லாப் பேய்க்குத் தலைப்பேயும்
கொண்ணைப் பிசினும் கோரோசனையும்கூட்டி யொருத்திக்
[கிடுவீரேல்
கண்ணை யிழந்த பசுப்போலே கதறிப் பிறகே வருவாளே. 635

**பொருள் :—** பச்சைக்கற்பூரம், பிள்ளைப்பூச்சி, தேன், பேய்க்கரும்பு, கொன்றைப்பிசின், கோரோசனை ஆகஆறு; இது கைகண்டது.

**குறிப்பு :—** வல்லார்வாய்க் கேட்டுணர்க

## இருமல், ஈளை, உளமாந்தைக்கு
## வில்வமுதலி இளகம்

பாங்கான வில்லவே ரம்பது பலம்நூறு படிதண்ணீரி
லாங்காணும் காச்சியதை யையிரண்டு படியதாக்கிக் காய்ந்ததனை
ஏங்காம லஞ்சுபடி யாக்கிவிளா வின்பதத்தில் வெந்நீராம்
நாங்காம வெந்நீரை நாங்குமே நாலுபடி கூட்டுங்கண்ணே. 636

**பொருள் :—**வில்வவேர் 50 பலம், நூறுபடிதண்ணீரிலிட்டு 20 படியாக வற்றக் காய்ச்சி இறுத்து வடித்த குடிநீரில்;

கண்ணூர்ந்த வெல்லமைம் பதுபலங்கலந்து காய்ச்சி வடித்துக்
[கொண்டு
நண்ணூர்ந்த திரிகடுகு மொவ்வொன்று நாலுபலம் நயந்து
[கூட்டி
தண்ணூர்ந்த செவ்வியஞ் சித்திர மூலமொவ் வொன்றுதா னூறே.

**பொருள் :**— 5- பலம் வெல்லத்தைக் கரைத்துக் காய்ச்சி வடிகட்டி (அதிலுள்ள மலினங்களை நீக்கி விட்டு) அடுப்பேற்றிப் பாகுபதமாகச் செய்ததில்— திரிகடுகு ஒவ்வொன்று நான்குபலம், செவ்வியம், சித்திரமூலம் வகைக்கு 6 பலம்;

தானுகும் சீரகம் பலம்பருத் திவிரைப் பருப்பு மொன்று
ஆனலும் சாதிக்காய் பத்திரி அதிவிடயத்தோடு மரத்தை
[யசமதாகம்
காணுக் குரோசானி யொவ்வொன் றரைப் பலம் மேலதாக
வானே லவங்கப் பத்திரியோர் பலங்களாய் வகுத்த வாறே. 638

**பொருள் :**—சீரகமும், பருத்திவித்தைப் பருப்பும் வகைக்குப் பலம்ஒன்றும், சாதிக்காய், சாதிப்பத்திரி, அதிவிடயம், சிற்றரத்தை, அசமதாகம், குரோசானிஓமம் வகைக்கு ½ பலமாக எடுத்து, ஏலம், இலவங்கப் பத்திரியும் ஒவ்வொரு பலமாக எடுத்து;

வாறேதா னுகப்பூ தாளிசப் பத்திரி வகைக்குக் கால்பலம் கூட்டி
மாறேது மின்றியே இடித்துத் துணியினுல் மாவாகச் சலித்
தெடுத்துச்
தேறேசற் றுச்சற்றே பொடிதூவி இளகத்தைத் தீர்க்கக் காய்ச்சி
பேருன தேனிரண்டு படிகலந்து களிபோலத் திரட்டிச்
[செய்யே. 639

**பொருள் :**— சிறுநாகப்பூ, தாளீசப்பத்திரி வகைக்குக் கால் பலம் இடித்துத் தூளாக்கி மேற்படி வெல்லப்பாகில் சிறுகச் சிறுகத் தூவிக் கிண்டிக் கீழிறக்கி 2 படி தேன் கூட்டிக் களியைப் போலத் திரட்டிச் செய்வாயாக;

செய்திடும் இளகத்தைத் தினமுமுக் கழஞ்சு சீராக வுண்டுவரினே
உய்யுமுள் மாந்தைகா சமிருமலீளை உய்ந்தசத்தி வலிகுன்ம
[வாய்வுநீர்வாய்வு
அய்யபசி மந்தம் பக்ககுன்மம் அனலெரிப்புக் கைகால்கள்
[காந்தல்காய்ச்சல்
பைய்யவிது போகுமென்று முனிவர்தாமும் பகர்ந்தபடி யாமிது
[கொள் பாருளோரே. 640

**பொருள் :**— செய்திட்ட இளகத்தை நாள்தோறும் மூன்று கழஞ்சு வீதம் உட்கொள்ள உளமாந்தை, இருமல், ஈளை, கக்கல், வலிகுன்மம், வாய்வுப்பிணிகள், நீர்வாயுவு, கபத்தின் மிகுதியால் பசித்தீ குறைந்து காணல், பக்கக்குன்மம், உடலில் அழற்சிகண்டு

எரிச்சல் தோன்றியநோய், உள்ளங்கை உள்ளங்கால் காந்துதல், காய்ச்சல் ஆகிய இவையெல்லாம் மெல்லத் தீர்ந்திடும் என்று முனிவர் கூறினர்.

## சிறுநீர்க் கிரிச்சிரத்துக்கு நெய்

இளநீர் பால்கருப் பஞ்சாறு யெண்ணும் பொன்னுங் காணியது
வளநீர் வள்ளிபூ சனிச்சாறு வாழைக் கிழங்குச் சாறுடனே
அளவா நெருஞ்சிசீந் தில்தண்டு ஆனவோ ரிலைத்தாமரைச்
[சாறுடனே
இளமா மிவைக ளொருசமனு யிவைகளின் சாறும் படிகூட்டி. 641

**பொருள் :—**இளநீர், பசுவின்பால், கருப்பஞ்சாறு, பொன்னுங்காணிச்சாறு, நீர்வள்ளிச்சாறு, வெண்பூசனிச்சாறு, வாழைக் கிழங்குச்சாறு, நெருஞ்சில்சமூலம், சீந்தில்தண்டு, ஓரிலைத் தாமரை, மாவின் இளந்தளிர் இவைகளின் சாறும் சமனாக ஒவ்வொரு படி கொள்க;

பதமா நெய்யும் படிகூட்டிப் பகருங் கற்கங்கல் மதங்கல்நார்
அதிக மதுரந் திப்பிலியு மாகுநுண் ணேலங் கூகைநீறு
பொதுநா யுருவிவே ரெள்ளுகொள்ளுபொன்னுங் காணிவேர்
[விதநீர்முள்ளிவிரை
அத்தித் திப்பிலி வெள்ளரிவிதை அம்பூனைக் காலி விதையதுவும்

**பொருள்:—** பசுவின்நெய் 1 படி கூட்டிக் கொள்க. இதற்குக் கற்கப் பொருள்களாவன: கல்மதம், கல்நார், அதிமதுரம், திப்பிலி, சிற்றேலம், கூகைநீறு, நாயுருவிவேர்ப்பட்டை, எள், கொள், பொன்னுங்காணி வேர்ப்பட்டை, விதநீர், முள்ளிவிதை, யானைத திப்பிலி, வெள்ளரிவிதை, பூனைக்காலிவிதை;

விரையொ டிலுப்பைப்பூ பூசனிவிதை மிகுதேத் தான்விதை
[நெருஞ்சிவேர்
யிருமுந் திரிப்பழம் வள்ளிக்கிழங்கு யிவைக ளோரொன்
[றிருகழஞ்சாய்
பருக வரைத்துக் கரைத்திதனைப் பதத்தில் வடித்துச் செவிக்கக்
[கேள்
சரியாய்ச் சீனியுங் கூகைநீறும் தேனுங் கூட்டிச் சேவித்திடுமே.

**பொருள் :—** இலுப்பைப்பூ, வெண்பூசனிவிதை, தேற்றான் விதை, நெருஞ்சிவேர், கொட்டைத் திராட்சை, கொட்டையில் லாத திராட்சை, வள்ளிக்கிழங்கு, இவை ஒவ்வொன்றும் இரு

கழஞ்சாகச் சேர்த்துத் தூளாக்கி அரைத்து மேற்படி நீர்ப்பொருள்களுடன் கலக்கிக் காய்ச்சிப் பதத்தில் வடித்து உண்ண— அளவுபோல் மேற்படி நெய்யை எடுத்து அதற்குச் சமமாகச் சீனி, தேன், கூகைநீர் இவைகளைக் கூட்டி உட்கொள்ளவும்.

இந்த நெய் ஒரு துட்டெடையில் சீனியும், கூகைநீரும், தேனும் கூட்டிக்கொள்ள மூத்திரக்கிரிச்சி, கல்எரிப்பு, பவுத்திரம், மூத்திரகண்டி, கோசத்திலுண்டான பிணிகள் போகும்.

**சிறுநீர்க் கிரிச்சிரத்துக்கு தூள்:** ஆவரம் பருப்பு அரைபடி பசும்பாலில் வேகவைத்துஎடுத்த துலர்த்தித் தூள்செய்து சீரகமேலங் கலந்து இதற்குச் சரி சர்க்கரை கூட்டி வெங்காரம் பொரித்துக்கலந்து தின்னக் கல்லடைப்பு, சதையடைப்பு, மூத்திர கண்டி, மூத்திரக்கிரிச்சி தீரும்.

**சிறுநீர்க் கிரிச்சிக்கு நாவல் குழம்பு**

நாவல் பட்டை நூறுபலம் நறுக்கி யிடித்து யிருதூணி
மேவு நீர்தா னலொன்ருய் மிகுத்த நெய்யு நானழி
ஆவின் தயிருந் தான்பதக்கு ஆகும் புளியா ரைச்சாறு
மேவக் கூட்டு நானழி விளங்கச் சொல்வோம் கற்கமதை. 644

**பொருள் :—** நாவற்பட்டை 100 பலம் சிதைத்து இரு தூணி நீரிலிட்டு நாலில் ஒன்ருக வற்றக் காய்ச்சி இறுத்து வடிகட்டிய குடிநீருடன் ஆவின் நெய் 4 நாழி, ஆவின் தயிர் 1 பதக்கு, புளியாரைச்சாறு 4 நாழி, கூட்டுக இனிக் கற்கப் பொருள்களைக் கூறுவோம்.

அதிம துரங்கூ விளஞ்சதையு மான வெள்ளி லோத்திரமும்
இதமே தாமரைப் பூவுடனே யினிமுந் திரிகை வெட்பாலே
திதமாய் வறள்சுண்டி யிஞேடுபே ரீச்சம் பழநா கப்பூவும்
பதமாச் சக்கரை யாத்திப்பூ பருமா தளையின் பிஞ்சாகும். 645

**பொருள் :—** அதிமதுரம், வில்வப் பழச்சதை, வெள்ளலத்திப்பட்டை, தாமரைப்பூ, திராட்சைப்பழம், வெட்பாலையரிசி, வரட்சுண்டி, பேரீச்சம்பழம், சிறுநாகப்பூ, பூமிசர்க்கரைக் கிழங்கு, ஆத்திப்பூ, மாதுளைப்பிஞ்சு;

கொட்டிக்கிழங்குஞ் செங்கழுநீர்கொள்தேள் கடையோரோரொன்று
இட்ட மாகக் கழஞ்சுகொண்டு இலங்க வரைத்துப் பதத்தில்வடி
முட்டக் கழஞ்சு தான்கொள்ள மூத்திரக் கிரிச்சி பாளமுடன்
சட்ட மாகத் தீருமிது தயங்கா முனிவ னுரைத்ததுவே. 646

**பொருள் :—** கொட்டிக்கிழங்கு, செங்கழுநீர்க்கிழங்கு, கொள், தேள்கொடுக்கிலை வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் எடுத்து இடித்து அரைத்து மேற்படி சாறுகளின் கலவையில் சேர்த்துக் கலக்கிக் காய்ச்சிப் பதத்தில் வடித்து வேளைக்கு ஒரு கழஞ்சு வீதம் உட்கொண்டுவரக் கிரிச்சிரம் தீரும்.

## கற்கம்

சதா வேரி கல்நாருஞ் சற்றுந் தகர மசமதகம்
இதமாந் தேத்தாங் கொட்டையுடன் என்னு நெருஞ்சி யிவை
[யெல்லாம்
பதமாச் சமனு மோரிலிது பரிந்தே யரைத்துக் கொண்டிடவே
திதமாய்த் தீருங் கிரிச்சமது தெய்வ முனிவர் சொற்படியே. 647

**பொருள் :—** தண்ணீர்விட்டான்கிழங்கு, கல்நார், தகரம், அசமதாஒமம், தேற்றுங்கொட்டை, நெருஞ்சில், ஆகிய இவைகளைச் சம எடையாக எடுத்து மோர் விட்டரைத்து மோரில் கரைத்து உட்கொள்ள மூத்திரக் கிரிச்சிரம் தீரும்.

மருதம் பட்டையிலை நாழிநீர் மருவுங் கசாய மதனோடே
சரியாய் நெய்தல் கிழங்கரைத்துத் தானே கொடுக்க மிகத்தீரும்
அரிதா மேனி நெய்ச்சட்டி ஆன கிழங்கு தானரைத்து
சரியாய்ச் சர்க்கரை தான்கலந்து தயவாய்க் குடிப்பீர் கல்லடைப்பும்
பெரிதாங் கிரிச்சி தீருமிது பேணிக் கொள்ளீர் பெரியோரே. 648

**பொருள் :—** மருதம்பட்டையையும் அதன் இலையையும் சம அளவாகக் கூட்டி ஒரு நாழி நீரிலிட்டு ¼ நாழியாக வற்ற வைத்து அக்குடிநீரில் நெய்தல் கிழங்கை அரைத்து உட்கொண்டு மேற்படி குடிநீரை உட்கொள்ளவும் மூத்திரக் கிரிச்சிரம் தீரும். குப்பைமேனி, நெய்ச்சட்டி, நெய்தல்கிழங்கு இவைகளை அரைத்துச் சர்க்கரை கலந்து உண்ண மூத்திரக் கிரிச்சிரம் தீரும்.

ஆவாரை சமூலங் கொண்டுவந்து அடங்கப் பானை தனிலடைத்து
மேவப் பதக்கு நீர்விட்டு வெந்து வடித்து விளாம்பிசினும்
பாவா வெள்வேல் கருவேலின் பிசினு மிலவம் பிசினோடு
ஆவத் தேசிப் பழம்போல அதுவுங் கூட்டி அரைத்திடவே. 649

**பொருள் :—** ஆவாரைச் சமூலத்தை அளவுப்படி எடுத்து ஒருபதக்கு நீர்விட்டு வற்றக் காய்ச்சி வடித்த குடிநீருடன் விளாம்பிசின், வெள்வேல்பிசின், கருவேல்பிசின், இலவன்பிசின் ஒவ்வொன்றும் ஓர் எலுமிச்சங்காயளவு எடுத்து மேற்படி குடிநீரால் அரைத்து;

ஒட்டும் பதமா வந்தாக்கால் உகந்த கலத்தில் தான்வளித்து
விட்டுக் காந்த செந்தூர மிகுத்த காரீய செந்தூரம்
முட்ட விதுரெண்டு மரைக்கழஞ்சு முசியாப் பிசினு மெண்கழஞ்சு
இட்டுச் சேர மத்தித்து யிதுநெல் லரிசி மாவிடித்து 650

**பொருள் :—** மெழுகுபோல வழித்தெடுத்து அதில் காந்தச் செந்தூரம், காரீயச் செந்தூரம், ஒவ்வொன்றும் ½ கழஞ்சு வீதம் கலந்து மேற்படி பிசின் 8 கழஞ்சும் கூட்டிப் பிசைந்து நெல் லரிசியை வறுத்திடித்து, எடுத்த மாவில்;

இடித்துமுன் மருந்தைத் தானுருட்டி இந்த மாவில் தான்புரட்டி
வடித்த சோறு தானுண்டு மருவிப் படுக்கு மப்போது
இடித்து மருந்து பாதிகொள்ள இதற்கு மூத்திர கிரிச்சமுடன்
அடுத்த பாளம் பிரமியமும் அகன்றே யோடிப் போய்விடுமே. 651

**பொருள்:—** மேற்படி பிசைந்த பசையைப் புரட்டி வைத்துக் கொண்டு, புதிதாக வடித்த சோற்றை உண்டபின் படுக்கும் போது மேற்படி மருந்தில் பாதியை உட்கொள்ளவும். சிறுநீர்க்கிரிச்சரம், சிறுநீர்ப்பாளை, பிரமியம் ஆகியவை தீரும்.

## நெஞ்சிற்கட்டிய சேத்துமத்துக்கு

இஞ்சிச் சாறுட னியல்மிகு தேனும்
துஞ்சத் தேவளர் தோடகை நீருடன்
செஞ்சொற் கிளிமொழி யாய்திரி கடுகுடன்
நெஞ்சிற் கட்டிய அய்யுடன் நீங்குமே. 652

**பொருள் :—** இஞ்சிச் சாற்றுடன் கூட்டிய தேனும், தாமரைப்பூச் சாற்றுடன் திரிகடுகு தூளும் நெஞ்சிற் கட்டிய கோழையை உடனடியாக நீக்கும்.

சோம தளங்கனிதேன் சோம்புந் திரிகடுகு
காராரு மிந்துப்புக் கற்கண்டு— சீராக
மட்டொக்கச் சேர்த்துக் கொடுத்தக்கால் மான்விழியாய்
கட்டுற்ற அய்போம் கழன்று. 653

**பொருள் :—** சோமக்கொடியின்பூ, மேற்படிகனி, சோம்பு, திரிகடுகு, இந்துப்பு, கற்கண்டு ஒரே அளவாகக் கலந்து கொடுத் தால் கோழைக் கட்டு விலகும்.

இஞ்சிச்சா றுடாதோ டைச்சாற் றிரதத்தேன்
மிஞ்சிய சுக்கு மிளகுடனே- கஞ்சமலர்க்
கையாய் கடுந்திப்பிலி கூட்டியுட் கொள்ளஅஞ்சி
அய்யான தும்போ மகன்று. 654

**பொருள் :—** இஞ்சிச்சாறு, ஆடாதோடைச்சாறு, தேன், திரிகடுகு இவைகளை அளவுப்படி கலந்துண்ண ஐயதோடம் விலகும்.

### நீரழிவுக்கு

ஆலிரண்டும் பூலிரண்டு முப்பழங்கள் பலாமரத்தின்
நாலிரண்டு மஞ்சளிஞ்சி யாத்திநா வலாரை
சேலிரண்டு கண்ணுள் செலுத்தவே திரைகடலில்
நாலொன்று மிரண்டும்வற்றி மற்றநீரும் வற்றிடுமே. 655

**பொருள் :—** ஆலின்விழுது 2 பங்கு, பூலாவேர்ப்பட்டை 2 பங்கு, திரிபலை, பலாமரப்பட்டை தனித்தனி 8 பங்கு, மஞ்சட் கிழங்கு, இஞ்சி, குறுவாத்தி, நாவல், ஆரை இவைகளைக் கூட்டிக் கொடுக்க நீரிழிவு தீரும்,

### பல்வலிக்கு

எலுமிச்சம் பழத்தின் சாற்றி விந்துப்புந் துரிசுங் கூட்டி
கலுமிக்க மிளகு பத்துக் கடுக்காயுஞ் சுக்குங் கூட்டி
ஒலிமிக்க வொக்கத் தூரி யொன்றதாய்க் கலந்து பின்னை
அலரொத்த முலையி னளே அடக்கிநீ ரூற்றிப் போடே. 656

**பொருள் :—** எலுமிச்சம் பழச்சாற்றில் இந்துப்பு, துருசு, மிளகு, கடுக்காய், சுக்கு இவைகளை நசுக்கி ஊறவைத்து உலர்த்தித் தூளாக்கிப் பல் துலக்கலாம். அல்லது, பல்வலி உள்ள இடத்தில் அதக்கி வைத்துக் கொண்டு ஊறிவரும் நீரைத் துப்பிக் கொண்டு வரவும். சிறிதுநேரம் சென்றதும் மருந்தின் செய்கை குறைந்த உடன் நல்ல நீர் கொண்டு வாய் கொப்புளித்து விடவும்,

### இருமலுக்குக் குடிநீர்

இண்டுகையான் மிளகுடனி சங்கு தூதுளை
கண்டிகை சுக்குடன் கலந்து வெந்தநீர்
உண்டிடி லொருவரை யிருமல் கண்டிடில்
தெண்டனிட் டோடாவிடில் தேரனு னல்லவே. 657

**பொருள்:—** இண்டங்கொழுந்து, கரிசாலை, மிளகு, இசங்கு, தூதுளை, உருத்திராட்சம், சுக்கு இவைகளைக் கொண்டு குடிநீர் செய்து உட்கொள்ள இருமல் தீரும்.

## வயிற்றுக் கடுப்புக்குக் கற்கம்

நல்ல திப்பிலி மிளகுநற் சீரகம்
மெல்ல வேயிந்த மூன்றும் வெதுப்பியே
வல்ல ஆநெய்யில் வகையுடன் கொள்ளவே
இல்லையே கடுப்பில் லையென் றேநிடே. 658

பொருள் :— திப்பிலி, மிளகு, சீரகம் இவைகளைத் தனித் தனியே இளம் வறுப்பாக வறுத்துத் தூள் செய்து சம அளவாகக் கூட்டிப் பசுவின் நெய்யில் குழைத்துண்ண வயிற்றுக்கடுப்புப் தீரும்.

## வயிற்றுக் கடுப்பு அசாத்திய குணம்

நெஞ்சில் நின்றெரித்து வாந்தி நின்றுதா னெடுத்து நன்றும்
பஞ்சுபோல் நாவுங் கண்ணும் பானமும் வெளுத்துக் காட்டும்
மிஞ்சவே வீக்க மிட்டு அடிக்கடி குளிர்மே லாகும்
கெஞ்சிட மலமுந் தீயும் கெடுத்திடு முயிரைப் போக்கும். 659

பொருள் :— நெஞ்செரிவும் வாந்தியும் காணல், பஞ்சைப் போல நாக்கு, கண், எருவாய் ஆகியவை வெளுத்திடும். உடலில் வீக்கம் மிகுதிப்படும், அடிக்கடி குளிர்வரும், மலம் தீய்ந்து இருக்கும். இக் குறிகள் கண்டால் உயிர்க்குக் கேடாம்.

## வயிற்றுக் கடுப்புக் குணமும் மருந்தும்

இடுப்புக் கடுத்து வயிறுளைந்து இளகுஞ் சீத மிற்றிற்று
முடுக்குந் துபர மதிகமுமாய் முன்னே மலமுங் கழிந்தடங்கும்
அடுத்தோ ரன்னந் தனைத்தேடா தறவே மயக்கு மெலிந்துவரும்
தொடுக்கும் வயிற்றுக் கடுப்பிதென்று சொன்னேம் செய்யுந்
[துயர்கண்டே. 660

பொருள் :— இடுப்பில் கடுப்புக்காணும், வயிற்றில் நோவு காணும், இளகியசீதம் சற்றைக்கொருதரம் வலியால் இற்று விழுவது போல வலிகாணும், வயிற்றில் சுருட்டுவது போன்ற துன்பங் காணும். நோய்காணும் முன்பு மலம்கழிந்து அது அடங்கிவிடும், உணவில் விருப்பம் இராது, மயக்கம் காணும், உடலில் மெலிவுகாணும். இக் குறிகளோடு கூடிய இப் பிணியை வயிற்றுக் கடுப்பென்று கூறினேம்.

### மருந்து

பனிச்சை துத்தி மலைதாங்கி பகரும் வயற்பூ லாமுத்தம்
முனித்த சுக்கோ டதிவிடயம் முனிந்த நற்சீ ரசமோதந்
தனித்த பிரகு குந்திருக்கந் தானே கழஞ்சு கொண்டுநெய்யில்
வனித்த வேக வைத்தருந்த மாதே வயிற்றுக் கடுப்பறுமே. 661

**பொருள் :—** காட்டத்தி, துத்தி, மலைதாங்கி, பூலாங் கிழங்கு, கோரைக்கிழங்கு, அதிவிடயம், சீரகம், அசமோதகம், வெண்குங்கிலியம் தனித்தனி ஒவ்வொரு கழஞ்சாய் எடுத்துத் தூளாக்கி அரைத்துப் பசுவின் நெய்யிலிட்டுக் காய்ச்சி வடித்து அந்த நெய்யை உண்ண வயிற்றுக் கடுப்புத் தீரும்,

## சுரத்துக்குக் குறுந்தொட்டித் தைலம்

அஸ்தி சுரத்துக்குக் கொடுக்கும்வண்ண மாய்ந்து சொல்லக்
[கேளாய்நீ
பத்தி யானகுறுந் தொட்டிவேர் பறித்துப் பின்னிரு பலந்தகர்த்து
முத்தி யென்னு மிருமூன்று படிநீர் முகந்திங் களந்துவிட்டு
பத்தி வெந்திங் கெட்டொன்றுக்கிப் படித்திங் கரைக்கு
[மருந்தினிக்கேள். 662

**பொருள்:—** சிற்றுமுட்டி வேர் 2 பலம் நறுக்கித் துவைத்து கியாழப்பானையிலிட்டு 6 படி நீரிட்டுக் காய்ச்சி எட்டுக் கொன்றுகச் சுண்டவைத்து அதை இறுத்து வடிகட்டி வைத்துக் கொள்க. இதற்காம் கற்க மருந்துகளைக் கூறுவேன் கேட்டுக் கொள்வாயாக:

செற்றுஞ் செவியந் திப்பிலி மூலம் திப்பிலி சுக்குக் கொடுவேலி
மற்று முத்தக் காசுங் கடுக்காய் மருவு மாத்திப் பூமிளகு
முற்று மோரொன்று கழஞ்சரையு மூளு மெண்ணெய் நாழியுரி
மற்றும் பசுவின்பா லிருநாழி காச்சிப் பதத்தில் வடித்த திதுதானும்
நிற்றம் நக்கும் போதெல்லாம் நேரே வார்ப்பது தேனுமே. 663

**பொருள் :—** செவ்வியம், கண்டந்திப்பிலி. அரிசித்திப்பிலி, சுக்கு, சித்திரமூல வேர்ப்பட்டை, கோரைக்கிழங்கு, கடுக்காய்த் தோல், திவாத்திப்பூ, மிளகு ஒவ்வொரு கழஞ்சளவாக எடுத்து அரைத்ததை எண்ணெய் ஒருநாழி உரியும் ஆவின்பால் 2 நாழியும் கலந்ததில் கரைத்துப் பதமாகக் காய்ச்சி வடித்து உட்கொள்க, இதைச் சமஅளவு தேனுடன் கலந்துண்ணல் முறை.

இந்தப்படி தேன் வார்த்துக் கொள்ளச் சிலேத்துமத்திலெடுக்க அஸ்தி சுரமெல்லாந் தீரும்.

## சீந்திலெண்ணெய்

சீந்தி லெண்ணெய் திருந்தச் செய்வகை
ஏந்திரு வேலிலா மிச்சம் வேரும்
முத்தக் காசு முகிழ்செண் பகத்தின்
உற்ற நெல்லி யுறைத்திடுஞ் சந்தனம்

ஓரொன் றொருபலம் ஒக்க நிறுத்து
நறுநீர் பதினாழியில் நறுக்கிப் போட்டு
நாலொன் றாக நலம்பெறக் காய்ந்தபின்
பால்நா னாழி படியா லளந்து
செவ்விள நீரு நாழியுஞ் சேர்த்து
நவ்விலெள் ளெண்ணெய் நாழியுங் கலந்து
ஏலங் கோட்ட மிலவங்கப் பட்டை
இலவங்கப் பத்திரி யியல்கச் சோலம்
நல்ல சந்தன நறும்பிசின் மதுரஞ்
செல்லுமஞ் சட்டி திகழ்நா கப்பூ
கண்டில் வெண்ணெய் கடுகு ரோகணி
கொண்ட திரிபலை கூறுந்தக் கோலம்
நல்ல திப்பிலி நற்சத குப்பை
கொல்லு மாஞ்சில் குலவுசெஞ் சந்தனம்
தாமரை வளையம் தாமரைத் தாதுந்
தேமரு செவ்வியந் திரள்தண் ணீர் மிட்டான்
நிலைபெறு செங்கழு நீர்க்கிழங் குடனே
மலையிரு வேலி மகிழிரு வேரும்
நன்னாரி யின்வேர் நாவிச் சட்டம்
மின்னார் மகிழம்பூ மிகுமிலா மிச்சைவேர்
கடியதோ ரொன்று காசெடை கூட்டி
வடிவுட னரைத்து வளம்பெறக் கரைத்து
பருவந் தன்னில் பார்த்து வடித்து
சிரத்தில் பலகால் தேய்த்துப் பூசிடில்
உச்சியி லெரிதல் உரைவே றுதல்
கிற்சங் கண்ணில் கிளரும் புகைச்சல்
செவிகே ளாதல் தேகம் வெதுப்பல்
இவையுள் பாதகம் மியல்குலைந் திடுமே. 664

**பொருள் :—** சீந்திலெண்ணெய் செய்வகை யாவது: உத்தாமணி, சித்திரமூலம், விலாமிச்சுவேர், கோரைக்கிழங்கு, சண்பக மொக்கு, நெல்லிவற்றல், சந்தனத்தூள், ஒவ்வொன்று ஒருபலம் வீதம் எடுத்து 10 நாழி நல்ல நீரில் போட்டுக் காய்ச்சி நாலில் ஒருபங்காக வற்றக்காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு அதில் பசுவின்பால் 4 நாழி, செவ்விளநீர் 2 நாழி, எள்நெய் 1 நாழி, இவைகளைக் கலந்துகொண்டு ஏலம், கோட்டம், இலவங்கப் பட்டை, இலவங்கப்பத்திரி, கிச்சிலிக்கிழங்கு, சந்தனம், நறும்பிசின், அதிமதுரம், மஞ்சிட்டி, சிறுநாகப்பூ, கண்டில் வெண்ணெய், கடுகுரோகணி, திரிபலை, தக்கோலம், அரிசித்திப்பிலி, சதகுப்பை,

சடாமாஞ்சில், செஞ்சந்தனம், தாமரைவளையம், தாமரைத்தாது, செவ்வியம், தண்ணீர்விட்டான் கிழங்கு, செங்கழுநீர்க் கிழங்கு, உத்தாமணி, சித்திரமூலவேர்ப்பட்டை, வெட்டிவேர், விலாமிச்சு வேர், நன்னாரி, புனுகுசட்டம், மகிழம்பூ, விலாமிச்சுவேர், ஒவ்வொன்றும் ஒருகாசெடை நிறுத்து எடுத்து நன்றாக அரைத்து மேற்படி மருந்துக்கலவையுடன் கலக்கிக்காய்ச்சிப் பக்குவமாக வடித்துத் தலைக்குத் தேய்த்தும் உடலுக்குப் பூசியும் வரவும். தலை உச்சியில் எரிச்சல் காணுதல், பேச்சு (உரையாடலின் ஒலி முதலியன) மாறுபடுதல், கண்பார்வை மங்கிப் புகைச்சலின் நடுவே காண்பது போன்றுதல், காதுகேளாமை, உடலில் சூடு உண்டாதல் ஆகியவை தீரும்.

## கிரந்தி எண்ணெய்

செருப்படிக்கு ளிருவகையுங் கொடிவேலி வேர்ப்பட்டை
செங்கத்தா ரிப்பட்டை யிந்தவகைகள் நாலும்
நறுக்கியரைத் தெள்ளெண்ணெய் தனிற்கலந்து வெந்து
நக்கிவர யிருபோதும் நகிலமுலை மடவாய்கேள்
உருக்கியுடல் தனைக்கரைக்குங் கிரந்திப்புண் ணெல்லாம்
உலர்ந்தேபோ முண்மை யிதுவே சொன்னேன்
மருக்கமழுங் குழலணங்கே புளிக்காப்புத் தவிர்ந்து
வகையாகக் கொள்ளீரிரு பத்தஞ்சு நாளுந்தானே. 665

**பொருள் :—** சிறு செருப்படை, பெருஞ்செருப்படை, சித்திர மூலவேர்ப்பட்டை, செங்கத்தரிப்பட்டை இவை நான்கையும் சம அளவாய் எடுத்து வெண்ணெய்போல் அரைத்து எள்ளெண் ணெயில் கரைத்துக் கலக்கிக் காய்ச்சிப் பதத்தில் வடித்துச் சாப்பிடவும் உடலுருக்கி என்னும் நோயைக் கரைத்துவிடும் (போக்கிவிடும்). கிரந்திப்புண்கள் உலர்ந்துபோம். புளியும், கார்ப்பும் நீக்கி உணவு கொள்க.

## உள்ளி யாமணக்கெண்ணெய்

உள்ளியாமணக் கெண்ணெயை யுகந்துநீர் கேளும்
வள்ளி தாக வகுத்துடன் கூறுவேன்
உள்ளியில் வெள்ளுள்ளி ஒன்சா றடைவேர்
தெள்ளிய சிவதைவேர் சினமுருங் கைவேர்
நற்கொடி வேலிவேர் நவின்ற நால்வேருஞ்
செப்பெனத் தறித்துச் சிறந்த வகைகள்
மருந்தோர் பதின்பலம் வகைபெறக் கொண்டு
திருந்திய நீரைங் குறுணியாய்ச் சேர்த்து
மூன்றொன் றுக்கி முயன்ற கியாழந்

தோன்ற வரைக்கச் சொல்லு மருந்துகேள்
அத்தித் திப்பிலி யழகிய திரிகடு
கொத்திடு அசமோ தகமுடன் கொண்டு
மிண்டு விழாலரிசி வெட்பாலே யரிசி
திண்டு சாறடை சித்திர மூலம்
செவ்வியம் ரேணுகம் சேர்சத குப்பை
வெவ்விய விந்துப் பொடுகம மேலம்
அம்மருந் தொன்றிரு கழஞ்ச தாகத்
தம்முடன் கியாழந் தான்வார்த் தரைத்து
சிற்ரு மணக்கெண்ணெய் சிறந்திரு நாழி
மற்றதி லுரிய மாண்புறப் புகட்டிச்
சதிரக் கள்ளிப்பால் தானிரு காசெடை
முதிரப் புகட்டி மூன்றுநா ளெரித்து
நலம்பெற வடித்து நாளொன் றுக்கு
துலங்கி வெண்ணெய் சொன்னமுக் கழஞ்சு
நக்கிய பின்பு நன்னுதல் மடவாய்
மிக்க மகோதரம் மிகுதரு சூலே
குடல்வா தத்துடன் கும்பகா மாலே
அகவை பீலிகை யடைநீ ராமை
சிகையொன் றிலாமல் சிக்கெனப் போமெனத்
தகைபெறு எண்ணெயைச் சாற்றினன் நிரையே. 666

**பொருள்:—** உள்ளி ஆமணக்கெண்ணெய் என்றமுறையைக் கூறுவேன் கேட்டுக் கொள்வீராக: வெள்ளுள்ளி, சாரடைவேர், சிவதைவேர், முருங்கைவேர், சித்திரமூலிவேர்ப்பட்டை. மேல் கூறிய நான்கு வேர்களேயும் சுத்தமாக்கித் தறித்து நசுக்கி வகைக்கு 10 பலம் வீதம் எடுத்து 5 குறுணி நீரைச்சேர்த்து மூன்றுக்கொன்ருக வற்றக்காய்ச்சி வந்த குடிநீரில், யானைத் திப்பிலி, திரிகடுகு, அசமோதகம், விழாலரிசி, வெட்பாலேயரிசி, சாரடை, சித்திரமூலம், செவ்வியம், காட்டுமிளகு, சதகுப்பை, இந்துப்பு, ஏலம் வகைக்கு 2 கழஞ்சாய் எடுத்து நன்கு அரைத்து மேற்படி குடிநீரில் கரைத்து அதில் சிற்ருமணக்கெண்ணெய் 2 நாழி ஊற்றிக்கலந்து முன்கூறிய பூண்டுத்திரிகளேச் சேர்த்துக் கள்ளிப்பால் 2 காசெடை அதில் ஊற்றி 3 நாள்கள் சிறுதீயாக எரித்துக்காய்ச்சி வடித்து வைத்துக்கொள்க. ஒரு நாளேக்கு 3 கழஞ்செண்ணெய் சாப்பிடவேண்டும். பெருவயிறு, சூலே, குடல் வாதம், கும்பகாமாலே, அகவை, பீலிகை, நீராமை எல்லாம் தீரும்.

வெருகு சித்தர் முட்டிமருள் விஷ்ணுகாந்தி யகில் துளசி
பருகும் வேலிப் பருத்திபுளி பாங்கா மிலாமிச்சை செம்புளிச்சை

மருவும் அமுக்குரா வரத்தை மாம்பிசின் கோரைதண் ணீர்விட்டான்
தருகூ விளைநற் பேராமுட்டி சந்தனம் நன்னாரி சகாதேவி; 667

**பொருள் :—** மெருகன்கிழங்கு, சிற்றுமுட்டிவேர்ப்பட்டை, மருள்கிழங்கு, விஷ்ணுகாந்தி, அகில், துளசி, வேலிப்பருத்தி, புளி, விலாமிச்சைவேர், செம்புளிச்சை, அமுக்குரா, சிற்றரத்தை, மாம்பிசின், கோரைக்கிழங்கு, தண்ணீர்விட்டான்கிழங்கு, வில்வம், பேராமுட்டி, சந்தனம், நன்னாரி, சீதேவிசெங்கழுநீர்;

மதுரங் கோட்ட மதிவிடயம் வசம்பு சுக்கு தக்கோலம்
விதமாஞ் செவியஞ் சிறுதேக்கு ரேணு கராம்பு கற்பூரம்
புதிய காய மதிமதுரம் போந்த சாதிக் காயோமம்
அதிய சீரகஞ் சடாமாஞ்சி ஆன கடுகு ரோகணியாம். 668

**பொருள் :—** அதிமதுரம், கோட்டம், அதிவிடயம், வசம்பு, சுக்கு, தக்கோலம், செவ்வியம், சிறுதேக்கு (கண்டுபாரங்கி), கடுக்காய், இலவங்கம், கர்ப்பூரம், பெருங்காயம், அதிமதுரம், சாதிக்காய், ஓமம், சீரகம், சடாமாஞ்சி, கடுகுரோகணி;

ஆகுந் திப்பிலி தயிர்த்தண்ணீர் அடைவாம் பஞ்ச லவணநுரை
யேகுங் கற்கடக சிங்கியுடன் இயங்குந் தாளிசப் பத்திரியும்
வாகாங் கற்க வகைமூன்று வராக எடையும் வனமூலிகை
மீகாப் பத்துப் பலமுடனே மிக்கா வின்பா லாம்நாழி. 669

**பொருள் :—** திப்பிலி, தயிர்த்தண்ணீர், ஐவகைஉப்பு (சோற்றுப்பு, இந்துப்பு, கருப்புப்பு, வளையலுப்பு, வெடியுப்பு என்பன), கடலநுரை, கற்கடகசிங்கி, தாளிசப்பத்திரி (இவை கற்கங்களாம்) வகைக்கு மூன்று வராகன் எடை எடுத்துக் கொள்க. காட்டுவேர் முதலானவை வகைக்கு 10 பலமாகவும், ஆவின்பால் ஒரு நாழியும்;

நாழி யிரண்டு எண்ணெயுடன் நன்ருய்க் காச்சி யுட்கொண்டால்
தாளுஞ் சன்னி சயமாறல் சகல சுரமுந் தந்தரோகம்
வீழும் பித்தம் வயிற்றுநோய் மிக்க நேர்த்தி யாகுமென
வாழுங் கடவு ளுமைக்குரைத்தார் மானே யிதனை யருந்துவிரே.

**பொருள் :—** எண்ணெய் 2 நாழியும் கொண்டு காய்ச்சி உட்கொள்க. இதனால், சன்னி, சயம், மாறல் முதலான எல்லாச் சுரங்கள், பல்லிலகாணும்பிணிகள், பித்தப்பிணிகள், வயிற்றுவலி தீரும்.

## சர்வசுர எண்ணெய்

விளக்கெண்ணெய் வெப்பாலை வாலுளுவை வசம்பு
வெள்ளுள்ளி யரைப்பலமா மிக்கநிரை யூடே
அழகான பசுமஞ்சள் சாறிரண்டு கரண்டி
அதுவுடனே குறிஞ்சாவி னிலையும்பல மரையாம்
கிழக்காக வடுப்பேற்றி எண்ணெயுடன் கலந்து
கிண்டியே வடித்துமேற் பூசியுள்ளுங் கொண்ட
விளக்கானது போலெரியும் பழஞ்சுரமும் விலகி
விட்டுவாய் நடுக்சலுடன் வெதுப்புவிட் டேகும். 671

**பொருள் :—** சிற்றுமணக்குநெய், வெட்பாலையரிசி, வாலுளுவையரிசி, வசம்பு, பூண்டு, இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம். பசுமஞ்சள்சாறு 2 கரண்டி, சிறுகுறிஞ்சான் இலை $\frac{1}{2}$ பலம் இவைகளைக் கொண்டு தைலம் காய்ச்சி வடித்து மேலுக்கும் பூசி உள்ளுக்கும் சாப்பிட்டுவரப் பழைய காய்ச்சலும் நடுக்கல்சுரமும் விட்டுப்போம்.

**தேரையர் வாகடம் முற்றிற்று.**





